# சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்

முனைவர் பட்டத்திற்காகப் பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு.

ஆய்வாளர்
**ரா. தீபா,** எம்.ஏ., எம்.ஃபில்.,
(பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்)
பதிவுஎண் : **PU/R/RD3/25887/2015 Dt : 11.02.2016**

நெறியாளர்
முனைவர் **ப. முத்துசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
முதல்வர்
வ.செ.சிவ. அரசு கலைக்கல்லூரி,
பூலாங்குறிச்சி – 630 405.




தமிழ்த்துறை
**அரசு கலைக்கல்லூரி ( தன்னாட்சி )**
**சேலம் - 636 007.**

**மே – 2022**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர்ப. முத்துசாமி, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,**

முதல்வர்,

வ.செ.சிவ. அரசு கலைக்கல்லூரி,

பூலாங்குறிச்சி,

திருப்பத்தூர் (வ),

சிவகங்கை (மா) – 630 405.

''**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**'' என்னும் தலைப்பில் அமைந்துள்ள இந்த ஆய்வேடு, **திருமதி ரா.தீபா,** அவர்களால் முனைவர் பட்டப்பேற்றிற்காக, சேலம்–7, அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறையில் 2016 – 2022ஆம் ஆண்டுகளில் என் மேற்பார்வையில், பகுதிநேர ஆய்வு மேற்கொண்டு, தன்னியலாக ஆக்கப்பெற்றது என்றும் இந்த ஆய்வேடு, இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ, ஆய்வு அரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சேலம் –7,

நாள் : –05 – 2022. நெறியாளர்

தமிழ்த்துறைத்தலைவர் முதல்வர்

# ஆய்வாளர் உறுதிமொழி

**ரா.தீபா, எம்.ஏ., எம்.ஃபில்.,**

முனைவர்பட்ட ஆய்வாளர் ( பகுதிநேரம்),

தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),

சேலம் – 636 007.

''**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**'' என்னும் தலைப்பில், முனைவர் பட்டத்திற்காகச் சேலம், பெரியார் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப் பெறும் இந்த ஆய்வேடு, 2016–2022ஆம் ஆண்டுகளில், பூலாங்குறிச்சி, வ.செ.சிவ. அரசு கலைக்கல்லூரி முதல்வர் **முனைவர் ப. முத்துசாமி** அவர்களின் நெறிகாட்டுதலில் என் சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : சேலம் –7,

நாள் : –05 – 2022. ஆய்வாளர்

Ouriginal

## Document Information

Analyzed document Deepa_Tamil_PhD.pdf (D133935618)

Submitted 2022-04-19T11:10:00.0000000

submitted by pulib

Submitter email library@periyaruniversity.ac.in

Similarity 0%





Analysis address library.periyar@analysis.urkund.com

## Sources included in the report

URL: https://www.winmeen.com/wp-content/uploads/2016/12/history-in-tamil.pdf

8

Fetched: 2022-04-19T11:10:04.9930000



**PERIYAR UNIVERSITY, SALEM – 636011**

**Tamil Nadu, India**

**NAAC A Grade - State University - NIRF Rank 73 - ARIA Rank 4**

---

## CERTIFICATE OF PLAGIARISM

| | | |
|---|---|---|
| 1 | Name of the Research Scholar | Mrs. R. DEEPA |
| 2 | Course of Study | Ph.D. |
| 3 | Subject | TAMIL |
| 4 | Name of the Supervisor | Dr. P. MUTHUSWAMY |
| 5 | Department/Institution/Research Centre | Department of Tamil, Government Arts College (A), Salem - 636 007. |
| 6 | Title of the Thesis/Dissertation | “Sangakaala Kattada kalaiyin Manbugal” “சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்’’ |
| 7 | Acceptable limit | 20% |
| 8 | % of similarly of content identified | 0% |
| 9 | Software used | OURIGINAL |
| 10 | Date of Verification | 19-04-2022 |

Report of the plagiarism check. items with percentage of similarity is attached

**Signature of the Scholar** **Signature of the Supervisor**

**University Librarian**



**PERIYAR UNIVERSITY, SALEM – 636011**
**Tamil Nadu, India**
**NAAC A Grade - State University - NIRF Rank 73 - ARIA Rank 4**

---

## DECLARATION BY THE CANDIDATE

I hereby declare that the thesis entitled "**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**" Submitted by me for the award of Ph.D. degree in **"Tamil"** is my original contribution and it is not plagiarized or copied from any other thesis / books / any other copy right materials.

**Signature of the Candidate**

## CERTIFICATE BY THE SUPERVISOR

I hereby declare that the candidate **R.DEEPA,** has carried out the Ph.D. Programme under my supervision during the period **2016** to **2022** and the Thesis entitled "**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**" submitted by her is verified and it is not plagiarized or copied from any other thesis / books / any other copy right materials.

**Signature of the Supervisor**

## CERTIFICATE BY THE LIBRARIAN

It is certified that the thesis entitled "**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**" submitted by the candidate **R.DEEPA**, Department of Tamil under the supervision of **Dr.P.MUTHUSWAMY**, Principal, VSS Government Arts College, Poolankuruchi, is verified for plagiarism through the software and the thesis is within the permissible limits of plagiarism rules and the percentage of plagiarism of the thesis is found to be 0% (Zero Percentage).

**Signature of the Librarian**



**PERIYAR UNIVERSITY, SALEM – 636011**

**Tamil Nadu, India**

**NAAC A Grade - State University - NIRF Rank 73 - ARIA Rank 4**

---

## CERTIFICATE BY THE R & D COORDINATOR

It is certificated that the thesis entitled "**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**" submitted by the candidate **R.DEEPA**, Department of Tamil under the supervision of **Dr.P.MUTHUSWAMY**, Principal, VSS Government Arts College, Poolankuruchi, is verified by the anti – plagiarism software and the percentage of plagiarism is within the permissible limit.

**Signature of the R & D Coordinator**

# நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்த **பெரியார் பல்கலைக் கழக நிர்வாகத்தினருக்கும்,** சேலம்–7, அரசு கலைக்கல்லூரி முன்னாள் முதல்வர்களுக்கும் தற்போதைய முதல்வர் **முனைவர் எஸ். கலைச்செல்வன்** அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள உதவிய தமிழ்த்துறையின் முன்னாள் துறைத்தலைவர்கள் **முனைவர் சீ.குணசேகரன், முனைவர் ப.முத்துசாமி** ஆகியோருக்கும், ஆய்வு சிறப்புடன் அமைய உதவிய தற்போதைய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் இரா. சாந்தி மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள்** அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாக அணுகும் போதெல்லாம் இன்முகத்துடன் பொறுமையோடு பதிலளித்து வழிகாட்டி, ஆய்வின் முழுமைக்கு உதவிய எனது நெறியாளர் பூலாங்குறிச்சி, வ.செ.சிவ. அரசு கலைக்கல்லூரி முதல்வர் **முனைவர் ப. முத்துசாமி** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அன்னையைப் போல் அன்பு பாராட்டி, ஆய்வுத்தொடர்பான பல தகவல்களை எனக்குத் தந்து ஆய்வு செழுமையுறப் பல வகையிலும் உதவிபுரிந்த இராசிபுரம் திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் இரா.கலைச்செல்வி** அவர்களுக்கு என் உளம்கனிந்த நன்றிகளை உரிதாக்குகிறேன்.

ஆய்வு மேற்கொள்ள உறுதுணையாக இருந்து பல உதவிகளைச் செய்த இராசிபுரம், திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப்பேராசியர்கள் **முனைவர் க. செல்வராஜ், முனைவர் ந. தனசேகரன், முனைவர் க. அன்பழகன், முனைவர் அண. செல்வகணபதி, முனைவர் இரா. பிரபாகர், முனைவர் இரா.ரம்யாமகேஸ்வரி** ஆகியோர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தகுந்த சிந்தனைகளையும் செயல் ஊக்கங்களையும் அளித்து வழி நடத்திச் சென்ற தோழர், தோழிகள் **லோ. தீபப்பிரியா, கா. கலையரசி, த. சாந்தி, த.சுபத்ரா,**

**மா. திவ்யா, கு. கிருபானந்த், லி. பழனிசாமி, இல. அய்யப்பன், வீ. சிலம்பரசன்** ஆகியோர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரிதாக்குகிறேன்.

என் வளர்ச்சியை என்னைவிட அதிகமாக நேசிக்கும் என் அன்பிற்குரியோரும், என் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் வழிகாட்டி கல்விசார் ஊக்கத்தை ஏற்படுத்தி ஆய்விற்குத் தேவையான உதவிகளைச் செய்த என் **பெற்றோர் திரு பொ. ராமசந்திரன், திருமதி ரா. தனம்** அவர்களுக்கும் என்னுடைய **சகோதரர் ரா. பார்த்திபன்** அவர்களுக்கும் என் உளப்பூர்வமான நன்றியைக் காணிகையாக்குகிறேன்.

என்னுடைய ஆய்வு சிறக்க என்னில் ஒருவராக இருந்து நான் சோர்ந்தயிடத்து ஊக்கப்படுத்தி இரவு பகல் பாராமல் உதவிய என் **கணவர் மு. சக்திவேல்** அவர்களுக்கும் என் **அன்புச் செல்வங்கள் ச. லக்ஷமித்ரன், ச. ஹர்ஷவர்த்தினி** அவர்களுக்கும் என் இதயப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களைப் பெற உதவிய **சென்னைப் பல்கலைக்கழக நூலகம், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகம், மாவட்ட மைய நூலகம் ஆகயவற்றின் நூலகத்தாருக்கும், அரசு கலைக்கல்லூரி நூலகத்தாருக்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டைக் கணினி அச்சுச் செய்து சிறப்பாக வடிவமைத்துக் கொடுத்த '**மாஸ்டர் ப்ராஜக்ட்ஸ்**' நிறுவனத்தாருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**ரா. தீபா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| கலித் | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறிஞ்சி. | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| தி. | – | திரட்டு |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| தொல்.சொல். | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நற். | – | நற்றிணை |
| நெடுநல். | – | நெடுநல்வாடை |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பட்டினப். | – | பட்டினப்பாலை |
| பதி. | – | பதிகம் |

| | | |
|---|---|---|
| பதிற்று. | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| புறம். | – | புறநானூறு |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரைக். | – | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | – | மலைபடுகடாம் |
| முத். | – | முத்தொள்ளாயிரம் |
| முல்லை. | – | முல்லைப்பாட்டு |
| மேலது | – | மேலே குறிப்பிட்ட நூல் |
| P. | - | Page |
| PP. | - | Pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க இலக்கியங்கள் பல்வேறு கால கட்டங்களில், பல்வேறு புலவர்களால், பல்வேறு வாழ்வியல் சூழல்களுக்கிடையே பாடப் பெற்ற இலக்கியங்கள் ஆகும். இவை அனைத்தும் மனித வாழ்வியலில் அகம், புறம் என்னும் இரண்டில் அடங்குகின்றன. அவை அன்றாட மக்களின் வாழ்வியலை மையப்படுத்தியே பாடப் பெற்றுள்ளன. புலவர்கள் தாம் பார்த்த நிகழ்வுகளை வருணனைகளோடு பதிவு செய்துள்ளனர். காதல், வீரம் என்பவை பெரும்பான்மையாகப் பாடப்பட்ட போதிலும், பிற வாழ்வியல் செய்திகளும் நுட்பமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவ்வகையில் கவின்கலைகளுள் ஒன்றான கட்டடக்கலை சங்ககாலத்தில் சிறந்து விளங்கிய பாங்கினையும் அக்கலை காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள விதத்தினையும் ஆராயும்விதமாக இவ்வாய்வேடு அமைகின்றது.

## ஆய்வுத்தலைப்பு

கலை என்பது சங்க காலத்தில் வாழ்வியலோடு தொடர்பு கொண்டதாக இருந்தது. ஒருவரது உள்ளத்தின் உள்ளுணர்விலிருந்து பொங்கி எழுகின்ற ஒருவித படைக்கும் திறன்பெற்ற ஆற்றல்களே கலைகள் உண்டாகக் காரணமாகின்றன. கலைகள் மனிதனின் வாழ்க்கையை மாண்புறச் செய்கின்றன. சங்ககாலத் தமிழர் கலைகள் பலவற்றிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். அவர்கள் கட்டடக்கலை வளர்ச்சியில் மிக உன்னத நிலையை எய்தியிருந்தனர் என்பதை அடியொற்றி, ‘‘சங்ககாலக் கட்டடக் கலையின் மாண்புகள்’’ என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

தமிழகக் கட்டடக் கலை, தமிழரின் மரபுக்கே உரியது. தொல்பழங்காலம் முதற்கொண்டே தமிழர் கட்டடக் கலையைப் பேணி, தனி முத்திரை பதித்து வளர்த்து வந்த விதத்தையும், சங்ககாலக் கட்டடக் கலையின் தனித்துவத்தையும் வெளிக்கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுக் கருதுகோள்

சங்ககாலத்திலேயே தமிழகத்தில் கட்டடக் கலை சிறப்புற்றிருந்தது. பழந்தமிழர் கட்டடக் கலை சார்ந்த தொழில் நுட்பத்தில் மிகுதிறன் பெற்றிருந்தனர். இன்றைய கட்டடக் கலைப் பொறியாளர்க்குச் சற்றும் குறைவில்லாத கட்டடக் கலை சார்ந்த ஆற்றலைப் பழந்தமிழகக் கட்டடக் கலை வல்லுநர்கள் பெற்றிருந்தனர். மக்கள் தமது வாழ்க்கைச் சூழலான நிலவியல் அமைப்புக்கேற்பக் குடியிருப்புகளை அமைத்துக் கொள்ளும் திறன் பெற்றிருந்தனர் என்பது இந்த ஆய்வின் கருதுகோளாக அமைகிறது.

## ஆய்வு எல்லை

உலகில் சிறந்த மொழிகளில் தமிழ்மொழியும் ஒன்று. தமிழின் தனித்தன்மைக்குச் சான்றாக விளங்குபவை சங்க இலக்கியங்கள் ஆகும். பழந்தமிழகத்தின் வரலாற்றுச் சிறப்பினையும் பண்பாட்டுச் சிறப்பினையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் பதினெட்டு நூல்கள் மட்டும் ஆய்வு எல்லையாக அமைகின்றது.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கிய நூல்களாகிய எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் முதன்மைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. சிலப்பதிகாரம், மணிமேகலை, கலைக்களஞ்சியங்கள், ஆய்வேடுகள், ஆய்வுக்கட்டுரைகள், அகராதிகள், நாளிதழ் முதலானவை ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாக அமைந்துள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்கப்பாடல்ளில் பதிவாகியுள்ள அக்காலக் கட்டடக் கலை தொடர்பான தகவல்களை முழுமையாகச் சேகரித்துக் கொண்டு அவற்றின் அடிப்படையில் கட்டடக் கலையில் காணலாகும் வகைகளைப் பகுத்து ஆராய்வதான இந்த ஆய்வில் பகுப்பாய்வு அணுகுமுறையே பின்பற்றப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

‘‘**சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்**’’ என்னும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை:

இயல் – 1 கட்டடக்கலையின் வளர்ச்சி நிலை

இயல் – 2 சங்ககால நிலவியல் அமைப்பில் குடியிருப்புகள்

இயல் – 3 சங்ககால நகர அமைப்புகள்

இயல் – 4 சங்ககால அரண்மனையின் அமைப்பு

இயல் – 5 சங்ககாலக் கோயில்கள்

என்பனவாகும்.

## இயல் – 1 கட்டடக்கலையின் வளர்ச்சி நிலை

**"கட்டடக்கலையின் வளர்ச்சி நிலை"** என்னும் முதல் இயல் கலை மிகவும் ஆழமான பொருளைக் கொண்டது. பொழுதுபோக்கிற்காக மட்டும் பயன்படாமல் அடிப்படையில் மனிதனின் மனதில் புதைந்திருக்கும் உணர்வுகளையும் அழியாத உண்மையின் தத்துவத்தையும் வெளிப்படுத்துவதே கலையின் பணியாகும். மனித வாழ்க்கையை மாண்புறச் செய்யும் ஆற்றலே கலையாகும். இயல்பாய் தோன்றிய பொருளை இயற்கையென்றும் மக்களால் செயற்கையாக உருவாக்கப்பட்ட பொருளைக் கலையென்றும் கூறுவர். ஆய கலைகள் அறுபத்து நான்கு என்பர். அறுபத்து நான்கு கலைகளில் ஒன்று கட்டடக்கலையாகும். இக்கட்டடக் கலை, தொல்பழங்காலம், சங்ககாலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், முகலாயர் காலம், நாயக்கர் காலம் ஆகிய பல்வேறு காலக்கட்டங்களில் வளர்ச்சி அடைந்த நிலையைப் பற்றி ஆய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

## இயல் – 2 சங்ககால நிலவியல் அமைப்பில் குடியிருப்புகள்

**"சங்ககால நிலவியல் அமைப்பில் குடியிருப்புகள்"** என்னும் இரண்டாம் இயலில் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த சங்ககால மக்கள் நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாக வகுத்துக் கொண்டு அன்பு வாழ்க்கை மேற்கொண்டனர்.

அவர்களுள் குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர்கள் மிகத் தாழ்வான சிறிய குடில்களைக் கட்டி அதன்மேல் திணைத்தாளையும் ஐவன நெல்லின் தாளையும் புற்களையும் கூரையாக வேய்ந்துள்ளனர்.

முல்லைநில மக்களான ஆயர்கள் தங்களின் வீடுகளைக் குறுகிய கால்களைக் கொண்ட குடில்களாக அமைத்துக் கொண்டுள்ளனர். தங்கள் குடில்களின் மேல் கூரைகளாக வரகுத்தாள், கேழ்வரகுத்தாள் தழைகளைக் கொண்டு வேய்ந்துள்ளனர்.

மருத நிலத்தின் இல்லங்களின் கூரைகள் தென்னங்கீற்று, புதிய வைக்கோல் போன்ற பொருட்களால் வேய்ந்துள்ளனர்.

தாழை நார் கொண்டு பிணித்துத் தருப்பை புல்லால் வேயப்பட்ட குறுகிய இறப்பையினை கொண்ட வீடுகளில் பரதவர் குடியிருந்தனர்.

எயினர்கள் தங்கள் குடிலின் மேற்கூரையை இலை, தழைகளாலும் ஊகம் புல்லாலும் ஈந்தின் இலையாலும் வேய்ந்துள்ளனர். அவ்வகையில் ஐவகை நில மக்களின் குடியிருப்புகள் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## இயல் – 3 சங்ககால நகரமைப்புகள்

“**சங்ககால நகரமைப்புகள்**’’ என்னும் மூன்றாம் இயலில் மூவேந்தர்களின் தலைநகரங்களாக விளங்கிய வஞ்சி, உறையூர், மதுரை முதலிய நகரங்கள் பற்றியும் துறைமுகப் பட்டினங்கள் என்ற அளவில் துறைமுகப்பட்டினங்களாக பண்டைய நாளில் சிறப்புற்று விளங்கிய காவிரிப்பூம்பட்டினம், முசிறி, தொண்டி, கொற்கை முதலிய பட்டினங்கள் பற்றியும் ஆராயும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

## இயல் – 4 சங்ககால அரண்மனையின் அமைப்புகள்

“**சங்ககால அரண்மனையின் அமைப்புகள்**’’ என்னும் நான்காவது இயலில் சங்க காலத் தமிழ் வேந்தர்கள் பாதுகாப்பான அரண்களைப் பெற்றிருந்தனர். அவர்கள் வாழ்ந்த மனை பாதுகாப்பு மிக்க அரண்களால் சூழப்பட்டிருந்தமையால் அரண்மனை எனப்பட்டது. ஒரு நாட்டின் அரண்மனையோ அல்லது எல்லையையோ அரவணைத்துக் காப்பது அரண் ஆகும். அரண்கள் பெரும்பாலும் இயற்கை அரண், செயற்கை அரண் என இருவகைப்படும்.

இயற்கை அரண்கள் முறையே நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் எனக் குறிப்பர். அகழி என்பது அரண்மனையைச் சுற்றி அமைக்கப்படும் நீர் நிலையாகும். இது பகைவர்களிடமிருந்து தற்காத்துக் கொள்வதற்குச் செயற்கையாக ஏற்படுத்தப்பட்ட ஒன்றாகும். ஆழ அகழ்ந்து அமைப்பதால் அகழி என்று அழைக்கப்படுகிறது. மதிலரண்

பகைவரிடமிருந்து காக்கப் பயன்படும் நெடிய உயர்ந்த தடுப்பு ஆகும். கோட்டை வாயில்கள் பெரிதாகக் கட்டப்பட்டிருந்தன. அவ்வாயில்களுக்கு வன்மையான கதவுகள் அமைக்கப்பட்டிருந்தன.

வானளவு உயர்ந்த மதில்சுவரும் அதில் பல கருவிகளும் இருந்தன. அவ்வாறே தொன்மையான வலிமையையுடைய தெய்வமானது நின்ற நிலையில் நீண்டதொரு நிலைகளைக் கொண்டிருந்தது. அம்மதில் கதவிலுள்ள விளக்குகளுக்கு நெய்யூற்றி எரித்தால் அங்கிருந்த வெண்மையான கதவுகள் கருமையாகக் காணப்படுகின்றன.

மேகங்கள் தவழும் மலை போன்று உயர்ந்த மாடங்கள் இரு பக்கத்திலும் இருந்தன. அவ்வகையில் அரண்மனையின் அமைப்பு, முற்றம், நிலா முற்றம், அந்தப்புரத்தின் அமைப்பு, அரண்மனையைச் சுற்றி அமைக்கப் பெற்றுள்ள அரண்களின் அமைப்பு ஆகியவற்றைப் பற்றி ஆராயும்விதமாக இவ்வியல் அமைகின்றது.

## இயல் – 5 சங்ககாலக் கோயில்கள்

‘‘**சங்ககாலக் கோயில்கள்**’’ என்னும் ஐந்தாம் இயலில் மனித மனம் தோன்றிய நாள் முதலாக வழிபாடு ஏதேனும் ஒருவகையில் இருந்துள்ளது. நாடோடி வாழ்க்கையில் பண்டையக் கால மனிதன் சந்தித்த இன்னல்களும், கடுமையான வாழ்க்கைப் போராட்டங்களும் இறை வழிபாட்டின் தோற்றத்திற்கு வித்திட்டிருக்க வேண்டும். மனிதன் தான் பெற்ற ஆறாம் அறிவான சிந்தனைச் சக்தியின் விளைவாக அனைத்தையும் விரிவான அளவில் சிந்திக்கத் தொடங்கினான். அச்சிந்தனைச் சக்தியே அவனுக்குத் தெய்வ வழிபாட்டை உருவாக்கவும் கோயிலை உருவாக்கவும் துணை நிற்கின்றது.

தொடக்கக் கால வழிபாட்டு முறை இயற்கை சார்ந்ததாக அமைந்தது. சங்க இலக்கியத்தில் மலை, நீர் நிலை, மரம் முதலியவை வழிபாட்டுக்குரியனவாக இருப்பதினின்று இதனை அறியமுடிகின்றது. போர்வீரனின் நினைவாக எழுப்பப்படும் நினைவுச்சின்னம் நடுகல் ஆகும்.

இறந்துபட்ட வீரர்களின் நினைவாக நடுகல் நடுவதற்குக் கல்லைப் பார்த்துத் தேர்ந்தெடுத்து கொண்டு வந்து, அதனை நீரினால் கழுவிப் பின்னர் அக்கல்லினை நட்டு வைத்து, கோயிலாக எழுப்பி அக்கல்லில் அவ்வீரனின் பெயரையும் வீரத்தையும் எழுதி, கல்லினைத் தெய்வமாக்கிப் போற்றி வழிபட்டனர். அவ்வகையில் இயற்கை வழிபாடு, மனித

வடிவம் பெற்ற வழிபாட்டு முறை, நடுகல் வழிபாடு, கோயில்கள் போன்றவை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## முடிவுரை

ஐந்து இயல்களில் கண்ட முடிவுகள் முடிவுரைப் பகுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## துணைநூற்பட்டியல்

இந்த ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் அகர நிரலில் வரிசைப்படுத்தித் தரப்பட்டுள்ளன.

## பின்னிணைப்புகள்

இப்பகுதியில் அறுபத்துநான்கு ஆயகலைகள் பட்டியல், இந்த ஆய்வுத்தொடர்பான புகைப்படங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் – 1

# கட்டடக்கலையின் வளர்ச்சி நிலை

## முன்னுரை

மனித வாழ்வியலோடும் மனிதகுல வரலாற்றோடும் கலைகளின் வரலாறும் பிணைந்துகிடக்கிறது. கலைகள் மக்களின் வாழ்வியலோடு கலந்து வாழ்வின் அங்கமாக விளங்குவதால் வாழ்வியலிலிருந்து கலைகளைப் பிரித்துப்பார்க்க இயலாது. கலைகளில் சிறந்து விளங்கும் நாடே பண்பட்ட நாடாகக் கருதப்படும். ஒரு நாட்டின் பண்பாடு அந்நாட்டில் உருவாக்கப்பட்ட கலைகளின் வளர்ச்சியைக் கொண்டு நிர்மானிக்கப்படுகிறது. மனிதர், பண்டைக் காலம் முதலே கலை ஆர்வமுடையவர்களாக இருந்துள்ளனர். அவர்கள் கலை வேறு வாழ்க்கை வேறு என்று அறியமுடியாதபடி கலையோடு இணைந்தே வாழ்ந்தனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோற்றம் பெற்ற கலைகள் பல்வேறு பரிணாம வளர்ச்சிகளைக் கடந்து வந்துள்ளன. அவ்வகையில் மனித வாழ்க்கையோடு தொடர்புடைய கட்டடக்கலையின் பல்வேறு கால வளர்ச்சி நிலை பற்றி இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## கலைகள்

ஆதிமனிதன் நாகரிகமற்ற நிலையில் வாழ்ந்த காலங்களில் அவனது அறிவு பண்படாநிலையில் விலங்கினை ஒத்திருந்தது. மனிதன் பகுத்தறிவு பெற்ற பின்னரே சிந்திக்கத் தொடங்கினான். அச்சிந்தனையின் வெளிப்பாடே எண்ணங்களாயின. மனித மனங்களின் உயரிய எண்ண வளர்ச்சி நிலையே நாகரிகமானபோது, அதனைச் சார்ந்திருந்த கருத்தாழம் மிக்க உணர்ச்சிப்பெருக்கின் உயிரோட்ட செயற்பாடுகளையே கலைகள் என்று குறிப்பிடலாம். இதனை,

> **“கலை என்பது மனிதனின் உள்ளத்தைத் தன்வயமாக்கி நிரப்பி, அவ்வளவோடு நில்லாமல் வெளிப்படுத்தும் ஆற்றலே’’[1]**

என்று மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுவார்.

பறவைகள், விலங்குகள் எழுப்பும் ஒலிகளைப் போலவே மனிதனும் ஒலியை எழுப்ப ஆரம்பித்தான். இவ்வொலிகளை சில வரையறைகளுக்கு உட்படுத்தி ஏற்ற இறக்கங்களை உண்டாக்கி ஓர் ஒழுங்குமுறைப்படுத்தினான். இத்துடன் தனது இன்பதுன்ப உணர்வுகளைச் சேர்த்துக் கொண்டு பாட ஆரம்பித்தான். இவை பின்னாளில் இசைக்கலை பிறப்பதற்கு மூலமாக இருந்தது. 'போலச் செய்தல்' என்னும் அடிப்படையில் மனிதன் தான் கண்டு ரசித்து, கேட்டு உணர்ந்த உணர்வுகளைப் பிறருக்கு வெளிப்படுத்தினான். அவ்வுணர்வுகள் தொடக்கத்தில் இயற்கையின் வெளிப்பாடாகவும், பின் விலங்குகளின் வெளிப்பாடாகவும் அவற்றைத் தொடர்ந்து தன்னுடைய செயலாகவும் மாறின. மொழிகள் தோற்றம் பெறாத காலத்தில் சைகையின் மூலமே மனிதன் தன் உணர்வுகளை வெளிப்படுத்தியுள்ளான். மொழிகளுக்குக்கெல்லாம் மூலமாக சைகை மொழியும், அதனைச் சார்ந்து உணர்வுடைய ஒலிக்குறிப்புமே இருந்துள்ளது. கலைகள் மேற்கண்டவாறே பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளன.

பண்டைக் காலத்தில் தமிழர்களிடையே வழங்கப்பட்டு வந்த கலைகள் பல்வேறு பரிணாமங்களைக் கடந்துள்ளன. ஆரம்ப காலங்களில் உணர்வுகளை வெளிப்படுத்தும் ஒலிக்குறிப்புகளைப் பயன்படுத்தினான். பேச்சு உண்டாயிற்று. ஒலிக்குறிப்புகளை மறவாமல் இருக்க ஒலிகளுக்கு உருவக் குறியீடு கொடுத்தான். எழுத்து உண்டாயிற்று. தனது எண்ணங்களைப் பிறருக்கு எழுத்து மூலமாய்ச் சொல்ல இலக்கியம் உண்டாயிற்று. மலைகளில் தனது உணர்வுகளைக் கற்களால் செதுக்கச் சிற்பக்கலை உண்டாயிற்று. ஊனை உண்ட பின் தோல்களை ஆடைகளுக்காக மரத்தில் கட்டி வைத்தான் தோற்கருவி உண்டானது என்று கலைகளின் ஆரம்ப வளர்ச்சியை அறியமுடிகிறது.

ஒரு நாட்டின் நாகரிக வளச்சி என்பது அந்நாடு அடைந்துள்ள கலை வளர்ச்சியையும் உள்ளடக்கியதாகும். மனிதனுக்கு இயல்பாகத் தோன்றுகின்ற உணர்வாகக் கலை உள்ளது. அவ்வுணர்வு இயற்கையோடியைந்து படைப்பாற்றல் மூலம் கலையாக வெளிப்படுகிறது. இதனை,

**"கலைகளெல்லாம் உணர்வை (Emotion) வெளியிடும் சாதனங்களே''**[2]

என அ.ச. ஞானசம்பந்தன் உரைக்கிறார்.

**"கலையென்றால் உணர்ச்சிகளைக் கவரவேண்டும். களிப்பூட்டி அறிவினைப் போய்க் கவ்வ வேண்டும்''**[3]

என்பார் நாமக்கல் கவிஞர்.

கலை என்பது அகத்தினுள்ளே தோன்றும் ஓர் உள்ளார்ந்த பண்பாகும். அதாவது அகத்தே தோன்றுவதை புறத்தே வெளிப்படுத்துவதே கலை ஆகும்.

கலை மனித இனத்திற்குப் பெரிதும் பயன்தருவதோடு, மனித மனத்தின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்களையும் உண்மைகளையும் அழகுணர்ச்சியோடு வெளிப்படுத்துகிறது. மனிதனின் ஆக்கும் திறனோடு அழகுணர்ச்சியும் சேரும்போது கலையாக உருவெடுத்து மகிழ்ச்சியைத் தருகிறது.

> **''கலை என்பது அழகை வெளிப்படுத்துவதும் செயல்திறமையைக் காட்டுவதும் நலம் தரும் காரியங்களுக்கு அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்துவதுமேயாகும்''[4]**

என்பர் அ. இராகவன்.

ஆதிமக்கள் நாள்தோறும் தம் வாழ்க்கையில் பயன்படுத்திய கருவிகளும் அடையாளங்களும் முறைகளுமே கலைகளாக மாறியுள்ளன. அவர்கள் தமது செயல்களை அறிவிப்பதற்காகக் கல்லிலும் மண்ணிலும் மரத்திலும் வரைந்தவை சித்திரக் கலையாகவும், சிற்பக் கலையாகவும்ஆயின. இவ்வுண்மையை அவர்கள் குகைகளில் வரைந்துள்ள ஓவியங்களிலிருந்தும், இறந்தோரைப் புதைத்துக் கற்குவியல்கள் அமைத்திருப்பதிலிருந்தும் அறிந்து கொள்ளலாம். மேலும் போர்க்களத்தில் ஆடிய வெற்றி ஆட்டங்களும், முழங்கிய ஒலிகளும் நாட்டியமாகவும் பாட்டாகவும் உருவெடுத்தன. உழவர்கள் உழவு முதலிய தொழில்களைச் செய்யும்போது மகிழ்ச்சியோடு பாடி வந்தனர். இப்போது பாடல்கள் தனிக்கலையாக மாறியிருக்கின்றன. இவ்வாறு ஆதிமனிதன் குடும்ப வாழ்விற்கும் சமுதாய வாழ்விற்கும் ஏற்படுத்திக் கொண்டவைகளே நாளடைவில் கலைகளாக மாறியுள்ளன.

## கலைகளின் வகைகள்

நாகரிகம் அடைந்த சமுதாயத்தின் படைப்புகளுள் ஒன்று கலையாகும். கலை என்பது அறிவிலும் அனுபவத்திலும் பிறந்து அனுபவத்திற்கு உரியதாகி அனுபவத்தை வளர்த்துச் செழுமைப்படுத்துவது. கலைத்துறையில் தமிழினம் வரலாற்றுக் காலந்தொட்டு புகழ் பெற்று வளர்ந்து வந்துள்ளது.

> “மனிதனை வாழ வைக்கும் பணியில் முக்கிய அங்கம் வகிக்கும் இக்கலைகள் தற்காலத்தில் மரபு நிலைகளையும் கடந்து பல்கிப் பெருகியுள்ளன. அவ்வாறு பரந்து கிடக்கும் கலைகள் யாவற்றையும் ஒருங்கிணைத்துப் பார்ப்போமானால் அவற்றை இரண்டு வகைகளாகக் கூறமுடியும். கலைகலைகளுக்காகவே உள்ளது ஒன்று. கலை வாழ்க்கைக்காக உள்ளது மற்றொன்று. கலைவாழ்க்கைக்காகவே என்ற பிரிவில் தொழில்முறைக் கலைகளை அடக்க வேண்டியிருக்கிறது. தொழில்களின் அடிப்படையில் பிறக்கும் கலைகளைத் தொழில் முறைக் கலைகள் என்பர்’’[5]

என துளசி இராமசாமி குறிப்பிட்டுள்ளார்.

கலைகள் பற்றி குறிப்பிடுகையில், அவை ‘எண்ணெண் கலை’ எண்ணான்கு இரட்டி இருங்கலை என இளங்கோவும், ‘ஆயகலைகள் அறுபத்து நான்கு’ எனக் கம்பரும் கூறுகின்றனர். அறுபத்து நான்கு கலைகள் எவையெவை என்பது குறித்துச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் குறிப்பிட்டுள்ளன. மாதவி அறிந்திருந்த கலைகள் இவைஇவை என்பதை அவருடைய தாய் சித்திரபதி கூறுவதாக ஆசிரியர் கூறியுள்ளார். இதனை,

> “வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்துக்
> 
> கூத்தும் பாட்டும் தூக்கும் துணிவும்
> 
> பண்யாழ்க் கரணமும், பாடைப் பாடலும்
> 
> தண்ணுமைக் கருவியும், தாழ்தீம் குழலும்
> 
> கந்துகக் கருத்தும், மடைநூல் செய்தியும்
> 
> சுந்தரச் சுண்ணமும், தூநீர் ஆடலும்
> 
> பாயல் பள்ளியும், பருவத்து ஒழுக்கமும்
> 
> காயக் காரணமும், கண்ணியது உணர்தலும்
> 
> கட்டுரை வகையும், கரந்துறை கணக்கும்
> 
> வட்டிகைச் செய்தியும், மலராய்நுது தொடுத்துதலும்

**கோலம் கோடலும், கோவையின் கோப்பும்**

**காலக் கணிதமும், கலைகளின் துணிவும்**

**நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த**

**ஓவியச் செந்நூல் உரைநூல் கிடக்கையும்**

**கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை’’[6]**

என்று குறிப்பிடுகிறார்.

ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் ஏழுவகைக்குள் அடக்குவார் முனைவர் க.த.திருநாவுக்கரசு. அவை:

**“1. பயன் கலைகள்**

**2. மதி நுட்பக்கலைகள்**

**3. உடற்பயிற்சிக் கலைகள்**

**4. விளையாட்டுக் கலைகள்**

**5. பொழுதுபோக்கிற்குரிய கலைகள்**

**6. இன்பக் கலைகள்**

**7. அழகுக்கலைகள்’’[7]**

என்பன.

## நுண்கலைகள்

கட்டடம், சிற்பம், ஓவியம், இசை, நடனம், நாடகம், இலக்கியம் என்பவை நுண்கலைகளாகக் கொள்ளப்படுகின்றன. இவை கலைகள் என்ற பொது வரையறைக்குள் அடக்கப்பட்டாலும் சில தனித்துவமான சித்திரிக்கும் பண்புகளைக் கொண்டுள்ளன. அதனால்தான் இவை நுண்கலைகள் எனப்படுகின்றன.

> **"கலைகளை அவற்றின் தன்மை நோக்கி கலைகள் என்றும் நுண்கலைகள் என்றும் பிரித்திருக்கின்றனர். கட்டிடம், சிற்பம், ஓவியம், இசை, கவிதை என்பன இவ்விரண்டாவது தொகுப்பினுள் அடங்கும்''[8]**

என்பர் அ.ச. ஞானசம்பந்தன். மேலும்,

நுண்கலைகள் எனப்படுவது அழகியலுக்கு முதன்மை தந்து, உள்ளத்தின் உணர்வுகளை வெளிப்படுத்தும் கலையாகும். மனத்தினால் உணர்ந்து அறிவினால் இன்புறுவது நுண்கலையாகும். இதனை,

> **"அழகு நிறைந்த அர்த்தம் தருகிற மதிப்பு வாய்ந்த கலையே நுண்கலையாம்''[9]**

என்பார் தமிழ்நாடன்.

> **"கட்டிடம், ஓவியம், சிற்பம், இசை, நடனம் என்பன நுண்கலைகள் எனப்படும். இவற்றின் அருமைப்பாடு நுண்ணியதாக உணரப்படுதலின், இவை இப்பெயர் பெற்றன. இவை வளர்ச்சி பெற்றுள்ள நாடே நாகரிக நாடு என்பர் அறிஞர். இத்துறையில் சங்க காலத் தமிழகம் சிறந்திருந்தது என்பதைச் சங்க நூல்கள் இனிது உணர்த்துகின்றன''[10]**

என்பர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார்.

ஓவியம், சிற்பம் என்பவை கட்புலனால் பார்த்து மகிழும் நுண்கலைகள். இசை செவிப்புலனால் கேட்டு மகிழும் நுண்கலையாகும். நாடகம், நடனம் என்பவை கட்புலன். செவிப்புலன் என்ற இரு புலன்களாலும் பார்த்தும் கேட்டும் மகிழும் நுண்கலைகளாகும். இலக்கியம் என்பது கண்களால் வாசித்து சிந்தனையால் புரிந்து கொள்ளும் நுண்கலையாகும். இதனை,

> **"நுண்கலையும் இரண்டாகப் பிரிக்கலாம். அவை ஒன்று கண்ணால் அனுபவிக்கப்படுபவை, மற்றொன்று காதால் அனுபவிக்கப்படுபவையாகும். கட்டிடம், சிற்பம், ஓவியம் இவை கண் சார்ந்தவையாகும். இசை, கவிதை இவை காதுசார்ந்தவையாகும்.''[11]**

என்பர்.

## கட்டடக்கலை

கட்டடக்கலையே நுண்கலை என்ற ரீதியில் முதன்மை பெறுகிறது. இது ஏனைய கலைகளிலிருந்து தனித்துவமான பண்புகளைக் கொண்டுள்ளது. தொன்மையும் சிறப்பும் வாய்ந்த தமிழரின் கட்டிடக்கலை மிகவும் பழமை வாய்ந்தது. தொல்மனிதர்கள் இயற்கையில் அமைந்த மரப்பொந்துகளிலும் குகைகளிலும் வாழ்ந்தனர். ஆனால் அவ்விடம் அவர்களுக்குப் பாதுகாப்பாக அமையவில்லை. தனக்கென பாதுகாப்பான இடம் தேவை என்பதை உணர்ந்ததன் பயனாகக் கட்டடக்கலைத் தோற்றம் பெற்றது.

> **‘‘மனிதன் தொடக்கத்தில் நூறாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் விலங்குகளுடன் விலங்காய் வாழ்ந்து வந்தான். அவன் குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்தான். அவனுக்கு நாடு, நகர், வீடு கிடையாது. அவனுக்கு ஆடையணி கிடையாது. வெயில் மழைகளிலிருந்தும் குளிர், வெப்பங்களிலிருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள, அவன் இலை தழைகளையே பயன்படுத்தினான்’’**[12]

என்பர் கா.அப்பாதுரை.

மனிதர்களின் வாழ்க்கையில் கட்டடம் என்பது அதன் கலை நயத்தால் மகிழ்ச்சியைத் தருவதோடு பாதுகாப்பு அரணாகவும் விளங்குகின்றது. கட்டடக்கலையின் மொழிபெயர்ப்பான,

> **‘‘ஆர்கிடெக்சர் எனும் ஆங்கிலச் சொல் இலத்தீன் சொல்லான ‘ஆர்கிடெக்ஸீரா’ என்பதிலிருந்து உருவானதாகும். ஆர்கிடெச்சர் (Architecture) என்ற சொல் ‘ஆர்க்’ என்ற வார்த்தையிலிருந்து தோன்றியது. ஆர்க் என்றால் வளைவு அல்லது வளைவான நுழைவாயில்’’**[13]

எனப் பொருள்படும்.

மேலும் கட்டடம் என்ற சொல்லிற்குத் தமிழ் லெக்சின்,

> **‘‘வீடு**

**புத்தகக் கட்டடம்**

**பொன்னான் உம்மிசத்திற் கற்பதிற் செய்யும் வேலைப்பாடு''[14]**

என்று பொருள் கூறுகிறது.

ஒரு நாட்டின் உயர்ந்த நாகரிகம், பண்பாடு, சமுதாயம், வாழ்க்கை முறை, மக்களின் நிலை, நாட்டின் வளர்ச்சி நிலை போன்றவற்றை வெளிப்படுத்தும் வகையிலும் கட்டடக்கலை அமைந்துள்ளது. கட்டடங்களின் அமைப்பு முறையும், வேலைப்பாடும் மக்களின் அறிவையும் முயற்சியையும் எடுத்துக்காட்டுவனவாக உள்ளன.

உலகின் நாடோடிகளாய் திரிந்த காலக்கட்டத்தில் மனிதன் அகப்புற காரணிகளின் பாதிப்பிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள தற்காலிக இருப்பிடங்களைத் தீர்மானித்து இருக்கலாம். பின்னர், அம்மனிதன் இடம் பெயர்ந்து, ஆற்றங்கரையில் தங்கி பல இனக் குழுக்களாகப் பிரிந்து ஒரு சமுதாய நிறுவனமாக, நிலவுடைமைச் சமுதாயமாகத் திகழ்ந்த ஒரு காலக் கட்டத்தில் தான் தனக்கென நிலையான ஓர் இருப்பிடம் 'உறையுள்' தேவை என நினைத்து அதனை நிர்மானித்தான்.

நாகரிகம் வளரவளர கட்டடங்களை மண், செங்கல், மரம், சுண்ணாம்பு, உலோகம் ஆகியவற்றைக் கொண்டு அழகுறக் கட்டியுள்ளனர்.

> **"தொழில்நுட்பமும் கலைநுட்பமும் இணைந்து உருவாக்கப்பட்டது கட்டிடக்கலை''[15]**

என்பார் கோ. தெய்வநாயகம்.

கட்டடத்தை வடிவமைத்துக் கலை நயம் மிளிரும் வகையில் கட்டப்படும் கலைக்கு கட்டடக்கலை என்று பெயர். இக்கலை தொழில் நுட்பம், அழகு, கற்பனை போன்றவற்றை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது. இதனையே,

> **"செங்கல், கருங்கல், சுண்ணாம்பு, மண், மரம் முதலியவற்றைச் சேர்த்து ஒரு கட்டடத்தை அழகுற அமைப்பது தான் கட்டடக்கலைக்கு அடிப்படையாகும்''[16]**

என்பர் தமிழரசன். கட்டடக்கலையின் மாண்பு குறித்து வை.மு. நரசிம்மன் அவர்கள்,

> **“நமது கட்டடக் கலை தேச வரம்புகளைக் கடந்து மிகப் புனிதமாக என்றும் பிரகாசிக்கக் கூடிய பெருமையுடையது. பல நூற்றாண்டுகளுக்கு முன் எழுப்பப்பட்ட கட்டடங்கள் பல இன்றைக்கும் பார்ப்போர் மனதைக் கவரும்படி நிற்கின்றன. அத்தகைய கட்டடங்களைப் பார்க்கவன்றோ அன்னிய நாட்டவர் பல்லோர் நம் நாட்டை நாடி வருகின்றனர். பல வகைப்பட்ட இயந்திர வசதிகளைக் கொண்டுள்ள இன்றைய உலகோர் அத்தகைய கட்டங்களை எழுப்ப முடியுமா என்று ஐயுறச் செய்யும் வண்ணம் அக்கட்டங்கள் தொழில் நுட்பம் வாய்ந்தவையாய் மிளிர்கின்றன. நம் நாட்டின் தட்ப வெப்பநிலை, எளிதிற் கிடைக்கக் கூடிய பொருள்கள், நிலத்தின் வளம் முதலியவைகளுக்கு ஏற்பக் கட்டடங்களை அமைக்கும் முறைகளை நமது பண்டைச் சிற்ப நூல்கள் வெகு தெளிவாகக் கூறுகின்றன. அம்முறைகளை வாழையடி வாழையாகத் தமிழகத்தில் கையாண்டு வந்ததால், நம் நாட்டுச் சிற்பிகள் இன்றைக்கும் செய்ய முடிகின்ற சிற்ப வேலைகளைக் காண எவரும் அதிசயிக்கின்றனர்’’**[17]

என்று குறிப்பிடுகிறார்.

தொழில்களில் சில தொழில்கள் பொருள் சார்ந்தும் சில தொழில்கள் கலை சார்ந்தும் இயங்குகின்றன. பொருள் பெற வேண்டும் என்ற எண்ணம் குறைந்த நோக்கிலும் செயல்பட்டுக் கொண்டிருக்கின்ற கலை கட்டடக்கலை ஆகும். மனிதனின் வாழ்வியலில் குடிசை முதல் அரண்மனை வரை கட்டடக் கலைக் கூறுகள் பல்வேறு பரிணாமங்களைக் கண்டு மேம்பட்டிருக்கின்றன. கற்குகை, மரப்பொந்துகள் முதல் கற்கோட்டைகள், மாடங்கள் என அமைத்து கட்டடக்கலைக் கூறுகள் அமைப்பதில் மனிதன் உன்னத வளர்ச்சியைப் பெற்றான்.

வரலாற்று அடிப்படைச் சான்றுக்கு மிக சிறந்ததாகக் கொள்ளப்படும் கட்டுமான அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி சங்ககாலத்திலே தமிழகத்தில் வளர்ச்சி அடைந்துள்ளது. வளர்ச்சி அடைந்த கட்டிடக்கலையில் சில அறிவு சார்ந்த நுட்பம் சங்க மக்களிடையே இருந்ததை அறியமுடிகிறது. மனித வாழ்க்கையில் அடிப்படைத் தேவைகளில் ஒன்றாக அமைவது கட்டிடக்கலை. இப்படி முக்கியத்துவம் வாய்ந்த கட்டிடக்கலையைச் சிறப்புடனும்,

நேர்த்தியுடனும் வடிவமைப்பதில் சங்ககாலத்து மக்கள் கைத்தேர்ந்தவர்களாகக் காணப்பட்டனர்.

பண்டைய தமிழர்கள் தங்கள் வசதிக்கேற்ப இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். வைக்கோல் முதலிய சிறுபுல்லால் வேயப்பட்ட சிறுகுடில் முதல் மாடமாளிகை வரை மக்கள் தங்கள் வசதிக்கேற்றவாறு இல்லங்களை அமைத்துள்ளனர்.

## சிந்துவெளி நகரமைப்பு

சிந்துவெளி நகரங்கள் வல்லுநர்களால் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தன. பொதுவாக நகரின் வடபகுதி குறுகலாகவும் உயரமாகவும் இருந்தது. அந்நகரின் கிழக்குப்பகுதி விரிந்தும் சற்றுத்தாழ்வாகவும் அமைக்கப்பட்டிருந்தன. நகரத்தின் கீழ்ப்பகுதியில் பொதுமக்கள் வாழ்ந்தார்கள். உயரமான மேல் பகுதியில் நகரின் கோட்டை அமைந்திருந்தது. பொதுக்குளம், பொதுமண்டபம், தெரு விளக்குகள், தெருக்களில் குப்பைத்தொட்டில்கள் மிகச் சிறந்த பாதாள சாக்கடைத் திட்டம் குடிநீர் விநியோகத் திட்டம் இங்கே காணப்பட்டன. இவற்றைக் கொண்டு இந்நகரங்களில் மிகச் சிறந்த ஆட்சிமுறை இருந்திருக்க வேண்டுமென்று வரலாற்று வல்லுநர்கள் கருதுகின்றனர். இதனை,

> **“மொகஞ்சதாரோவிலும் ஹரப்பாவிலும் ஊருக்குப் புறத்தே கோட்டை கொத்தளங்கள் கட்டப்பட்டிருந்தன. அக்கோட்டைக்குள் மன்னரின் மாளிகைகளும், பெரிய பெரிய நீராடும் குளங்களும், நேருக்கு நேரான சாலைகளும், பெரிய வீடுகளும், நெற்களஞ்சியங்களும் அமைக்கப்பட்டிருந்தன. கோயில் குருக்கள் குடியிருப்பதற்காகவே தனித்தனி வீடுகள் ஒதுக்கப்பட்டிருந்தன’’[18]**

என்கிறார் கே.கே. பிள்ளை.

நகரங்கள் ஒரே மாதிரியாகத் திட்டமிட்டு அமைக்கப்பட்டு இருந்தன. ஒவ்வொரு நகரமும் கோட்டை மற்றும் அதனை அடுத்த சிறு நகரம் என இரண்டாகப் பிரிந்து இருந்தது. இவை செவ்வக வடிவில் செங்கற்களாலும் கற்களாலும் கட்டப்பட்டு இருந்தன. கோட்டையைச் சுற்றி மிகப் பெரிய செங்கற் சுவர் கண்காணிப்பு மதில்களோடு எழுப்பப்பட்டு இருந்தது. இந்த மதில்கள் இச்சிந்து நதியில் அடிக்கடி ஏற்படும் வெள்ளப் பெருக்கில் இருந்து மக்களைப் பாதுகாத்துள்ளது. கோட்டைகளில் அரசர்களும் அதிகாரிகளும் இருந்துள்ளனர்.

மக்கள் கூடுவதற்கான அரங்கங்கள், கடைவீதிகள் ஆகியவையும் அமைக்கப்பட்டு இருந்தன. பெரிய குளியல் அறைகள் அமைக்கப்பட்டு இருந்தன.

## குடியிருப்புகள்

கோட்டைகளை அடுத்து குடியிருப்புப் பகுதிகள் இருந்தன. இங்கு வணிகர்கள் கைவினைக் கலைஞர்கள் எனப் பலரும் வாழ்ந்தனர். ஒவ்வொரு வீட்டின் நடுவிலும் திறந்த முற்றம் இருந்தது. அதைச் சுற்றிலும் அறைகள் இருந்தன. அனைத்து வீடுகளிலும் கிணறுகளும், அடுப்பங்கரைகளும் இருந்தன. பாதுகாப்பிற்காகவும், தூசிவராமல் இருக்கவும் வீடுகளின் கதவுகளும் சன்னல்களும் முற்றத்தை நோக்கியவாறு அமைந்திருந்தன. வீடுகள் நல்ல காற்றோட்டத்தோடு அமைக்கப்பட்டு இருந்தன. தெருவோரச் சுவரில் சன்னல்கள் இல்லை. பாதுகாப்பின் பொருட்டு அச்சுவரில் சன்னல்கள் வைக்கவில்லை. வீட்டின் கூரைகள் மரத்தால் வேயப்பட்டு இருந்தன. ஒவ்வொரு வீட்டிலும் குளியலறைகள் இருந்தன. அவை தெருவில் உள்ள கழிவு நீர் வடிகால்களோடு இணைக்கப்பட்டு இருந்தன.

## தெருக்கள்

நல்ல காற்றோட்டத்தை எதிர்பார்த்து நகரத்தின் தெருக்கள் கிழக்கு மேற்காகவும் தெற்கு வடக்காகவும் வளைவுகள் இல்லாமல் நேராக ஒன்றையொன்று செங்குத்தாக சந்திப்பது போல் அமைக்கப்பட்டிருந்தன. காற்று நகரின் அகன்ற தெருக்களில் வீசும்பொழுது குறுக்கேயுள்ள சிறிய தெருக்களிலும் புகுந்து எல்லா மக்களும் நற்காற்று நுகர வசதி செய்யப்பட்டு இருந்தது. இந்நோக்கம் கருதியே சிறிய தெருக்கள் பெரிய தெருக்களில் வந்து கலக்குமாறு செய்யப்பட்டுள்ளன. தெருக்களில் தெரு விளக்குகள் இருந்துள்ளன. தெருக்கள் தோறும் சீரான இடைவெளிகளில் குப்பைத் தொட்டிகள் வைக்கப்பட்டுப் பராமரிக்கப்பட்டுள்ளன.

## கழிவுநீர் வடிகால் அமைப்பு

சிந்துவெளி நாகரிகத்தின் சிறப்பம்சம் கழிவுநீர் வடிகால் அமைப்பு ஆகும். உலகினர் வியந்து பார்க்கக் கூடிய அளவில் சிறப்பாக வடிவமைத்து இருந்தனர். தெருக்களின் இரண்டு புறமும் கழிவு நீர் ஓடைகள் கட்டப்பட்டு இருந்தன. ஒவ்வொரு வீட்டில் இருந்தும் கழிவு நீர் சிறு குழாய்கள் மூலமாக தெருக்களில் உள்ள பெரிய கழிவுநீர் ஓடைக்கு வந்து

சேரும். கழிவு நீர் வடிகால்கள் சுத்தம் செய்வதற்கு ஏற்ற வகையில் துவாரங்களோடு இருந்தன. அத்துவாரங்கள் மூடிகள் போட்டு மூடப்பட்டு இருந்தன. இந்த அமைப்புகளைப் பார்க்கும் பொழுது அந்த மக்கள் ஆரோக்கியத்திலும் தூய்மையான வாழ்க்கை முறையிலும் அக்கறை கொண்டவர்களாக இருந்தனர் என்பது தெரிய வருகிறது.

## பெருங்குளம்

பெருங்குளமானது நன்கு அகன்று செவ்வக வடிவத்தில் அமைந்திருந்த நீர்தேக்கம் ஆகும். இது நகரின் நடுவில் அமைக்கப்பட்டிருந்தது. இக்குளத்தில் அவர்கள் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டு நீர் கசியாமல் இருப்பதற்காக சுவரிலும், தளத்திலும் பல அடுக்குகள் தார் கொண்டு பூசப்பட்டிருந்தது. வடபுறத்திலிருந்தும், தென்புறத்திலிருந்தும் குளத்திற்குச் செல்ல படிக்கட்டுகள் அமைக்கப்பட்டிருந்தன. குளத்தைச் சுற்றிலும் பல குளியலறைகள் இருந்தன. அருகில் இருந்த கிணற்றிலிருந்து நீர் இறைக்கப்பட்டு பெருங்குளத்தில் விடப்பட்டது. உபயோகப்படுத்தப்பட்ட நீர் வெளியேறவும் வகை செய்யப்பட்டிருந்தது.

## கட்டடங்கள்

மொகஞ்சதாரோ மக்கள் கட்டடங்களுக்குச் சுட்ட செங்கற்களையும் உலர்ந்த செங்கற்களையும் பயன்படுத்தி உள்ளனர். மழை, வெயில், வெள்ளம், புயற்காற்று இவற்றுக்கு எளிதில் ஆட்படுபவை கட்டடங்களின் புறச்சுவர்களே ஆகும். ஆதலின் அவ்வறிஞர்கள் அப்புறச் சுவர்களைச் சுட்ட செங்கற்களாலேயே அமைத்துள்ளனர். மேற் சொன்னவற்றால் துன்புறுத்தப்படாத உட்புறச் சுவர்களை உலர்ந்த சூளையிடப்படாத செங்கற்களால் அமைத்துள்ளனர். களிமண் சாந்தையே அவர்களின் மேற்பூச்சாகப் பயன்படுத்தினர். சுவர், தரை, கூரை இம்மூன்றும் களிமண் சாந்தால் ஆனவை. சுவர்களையும், தரையையும் ஒழுங்குபடுத்த மட்டப் பலகையைப் பயன்படுத்தினர். அப்பலகைகள் பல மொஹெஞ்சொதரோவில் கிடைத்துள்ளன. அவை பல அளவுகள் உடையனவாக உள்ளன.

தெருக்களின் இரண்டு ஓரங்களிலும் வீடுகள் வரிசையாகக் கட்டப்பட்டிருந்தன. சில வீடுகளில் இரண்டு அறைகள் மட்டும் உள்ளன. சில வீடுகளில் பல அறைகள் உள்ளன. இதன்மூலம் பணக்காரர்கள் மிகப் பெரிய வீடுகளிலும், ஏழைகள் சிறிய வீடுகளிலும்

வாழ்ந்துள்ளனர் என்பது தெரிகிறது. அழகியல் உணர்வோடு கட்டிடங்களை வடிவமைத்துள்ளனர்.

## ஹரப்பாவின் கட்டிட அமைப்பு

மொஹஞ்சதாரோ மக்களைப் போலவே ஹரப்பா நகர மக்களும் மிகச் சிறந்த நகரங்களைக் கட்டி வாழ்ந்தார்கள். சிறிய இல்லங்களின் சுவர்களை உடைந்த மண்ணோடுகள் செங்கற்கட்டிகள், மண்பாண்ட ஓடுகள் முதலியவற்றை கொண்டு அமைத்தனர். பெரிய கட்டடங்களின் சுவர்கள் மிக உறுதியாக இருப்பதற்கும் வேண்டி சூளையிடப்பட்ட செங்கற்களைக் கொண்டு அமைத்தனர். பெரிய கட்டடங்களின் சுவர்களும் தரைகளும் சாக்கடைகளும் ஒருவிதக் கல்கொண்டு நன்றாக வழவழப்பாகத் தேய்த்து இன்றைய சிமெண்டுத் தரைபோல் அமைத்துள்ளனர். மாடிப் படிக்கட்டுகள், குப்பைத்தொட்டிகள், கழிவுநீர் வடிகால்கள் முதலியனவும் மொஹஞ்சதாரோவிலுள்ளவை போலவே அமைக்கப்பட்டன.

ஹரப்பாவிலுள்ள கட்டடங்களைக் குடியிருக்கும் கட்டடங்கள், பொதுக் கட்டடங்கள் என இரு வகையாகப் பிரிக்கலாம். குடிக்குரிய இல்லங்கள் பெரும்பாலும் மாடிகளுடன் அமைந்துள்ளன. தனித்தனியறைகளுடனும் முற்றங்களுடனும் காணப்படுகின்றன. பொதுக் கட்டடங்களில் செங்கற்களால் கட்டப்பட்ட வட்டவடிவமான மேடைகள் அமைந்துள்ளன. ஹரப்பாவிலும் தொழிலாளர் இல்லங்கள் காணப்படுகின்றன. ஒரு வரிசையில் ஏழு வீடுகள் வீதம் இவ்வில்லங்கள் இரண்டு வரிசைகளாகக் காணப்படுகின்றன. இவ்வில்லங்களுக்கிடையில் குறுகிய பாதை ஒன்று சென்று இருபக்கங்களிலுமுள்ள பொதுத் தெருக்களில் கலக்கிறது. இவ்வில்லங்கள் எகிப்து நாட்டிலுள்ள தெல்–எல்–அமர்னா என்னுமிடத்திலுள்ள தொழிலாளர் இல்லங்களைப் போலவே இருக்கின்றன.

ஹரப்பாவில் கோட்டையின் நடுவே அமைக்கப்பட்ட பெரிய தானியக் களஞ்சியத்தைத் தொல்லியல் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். தானியக் களஞ்சியம் இரண்டு வரிசைகளாகக் கட்டப்பட்டுள்ளன. இரண்டு பகுதிக்கும் இடையே அகன்ற பாதை அமைக்கப்பட்டிருந்தன. இந்த இரு வரிசை நெடுஞ்சுவர்களுள் ஒவ்வொரு வரிசையிலும் ஆறு மண்டபங்களும் அதனுள் சிறு சிறு அறைகளும் காற்றோட்டம் இருக்குமாறு கட்டப்பட்டு இருந்தன. தரைப்பகுதியில் மரப்பலகைகள் பதிக்கப்பட்டிருந்தன. இவ்வளவு அற்புதமான வேலைப்பாடுகளுடன் விளங்கும் இம்மண்டங்கள் தானியங்கள்

கொட்டிவைக்கப் பயன்பட்ட களஞ்சியங்களாகும். தானியக் களஞ்சியங்களுக்கு அருகில் செங்கற்களால் ஆன மேடைகள் காணப்படுகிறது. ஆய்வாளர்கள் இவை கதிரடிக்கும் இடங்களாக இருந்திருக்கும் என்கிறார்கள்.

## வேதகால இல்லங்கள்

வேதகாலத்தில் முதிராப் பண்புடைய (Primitive) கரடுமுரடான கலையறிவே இருந்திருக்க வேண்டுமென கலையறிஞர் பெர்சி பிரவுன் என்பார் கருதுகிறார். ஆயினும் இத்தகைய கலையறிவே பிற்பட்ட இந்தியக் கலைகளுக்கெல்லாம் மூலக் கூறுபாடாய் அமைந்தது என பெர்சி பிரவுன், சேம்சு பர்குசன், பர்.வி.ஏ.சிமிது ஆகியோருடைய கருத்தாகும். வேதகாலத்துக் கலைகளில் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுவது அவர்களது கட்டடக்கலையே ஆகும். ஏறத்தாழ கி.மு. 2000–ல் இந்தியாவிலுள்ள சிந்துவெளிப் பகுதியில் குடியேறிய ஆரியர்கள் அங்கு ஏறக்குறைய வாழ்ந்திருந்த சிந்து வெளி நாகரிகத்தை உருவாக்கிய மக்களின் நாகரிகத்திற்கு முற்றிலும் மாறுபட்ட புதியதோர் வாழ்க்கை முறையைப் பின்பற்றினார்கள். நாடோடிகளாகவும், அரைகுறை நாகரிகமுடையவர்களாகவும் இந்தியாவில் குடியேறிய இவர்கள் ஆடு, மாடு மேய்த்தலையும், வேளாண்மையையும் தங்கள் தொழில்களாகக் கொண்டார்கள். அக்காலத்தில் தருப்பைப் புல்லாலும், தழைகளாலும், கொடிகளாலும் வேய்ந்த குடிசைகளிலும் பின்னர் மூங்கிற்கழிகளைப் பரப்பி அதன்மேல் கொடிகளாலும், கோரைகளாலும், இலைகளாலும் பின்னப்பட்ட பாயகளைப் பரப்பிக் கூரையாக வேய்ந்த வீடுகளிலும் வாழ்ந்தார்கள். இக்கூரை வீடுகளின் சுவர்கள் மண்ணால் எழுப்பப்பட்டவையாகும். ஆகவே வேத காலத்தின் தொடக்கத்தில் சாதாரணக் கூரைக் குடிசைகளாக இருந்தன. இக்காலத்துக் கட்டடக் கலைகளை ‘கூரைக்காலம்’ என்று அழைத்தனர்.

## கூரை வீடுகள்

ஆரியர்கள் வட்டவடிவப் பரப்பளவில் மண்சுவரை ஏற்றி, அவ்வட்டத்தின் மையத்தில் ஒரு மூங்கிற் கழியைத் தாங்குகோலாக நட்டு, அதனை மையமாகக்கொண்டு வட்டத்தை சுற்றிலும் மூங்கில் கழிகளைப் பரப்பி, அம்மூங்கிற்கழிகளைக் கொடிகளால் இணைத்து, அவற்றின்மேல் தருப்பைப் புல், கோரைப்புல், செடி கொடிகள் மரப்பட்டைகள் முதலியவற்றைப் பரப்பிக் கூரையாக அமைத்தார்கள். அவ்வட்ட வீட்டின் ஒரு புறத்தில் வாயிற்படியும் அமைக்கப்பட்டது. நடுவில் நடப்பட்ட தாங்குகோலின் முனையின் வழியாக மழைநீர்

கசிவதைத் தடுப்பதற்காக வட்டவடிவமான அல்லது குவிந்த மூடியொன்றை பொருத்தியிருந்தனர். வீட்டின் உட்புறத்தில் அத்தாங்குகோலுக்கு அருகில் குளிரைப் போக்கிக் கொள்வதற்காக எப்போதும் கனன்றுகொண்டிருக்கும் நெருப்புச் சட்டியொன்று வைக்கப்பட்டிருந்தது.

வட்டவடிவில் அமைக்கப்பட்ட கூரை வீடுகள் நாளாவட்டத்தில் பல்வேறு மடிப்புகளையுடைய கூரைகளைக் கொண்டும், மேலும் பல மாற்றங்களைக் கொண்டும் கலையழகோடு திகழ்ந்தன. சுவர்கள் உள்ளும் புறமும் நன்றாக மெழுகி வெள்ளையடிக்கப்பட்டன. வாயிற்படியின் மேற்பக்கத்தில் சிறிது மாற்றம் செய்யப்பட்டு நீள்சதுர அரை வட்ட வடிவங்களில் மூங்கிற்பத்தைகள் வளைத்து செருகப்பட்டன. மூங்கிற்பத்தைகளால் கதவுகளும் செய்யப்பட்டன. சுவர்களில் சாளரங்கள் அமைக்கப்பட்டு அவற்றின் குறுக்கும் நெடுக்குமாக மூங்கிற்பத்தைகள் பொருத்தியிருந்தனர். வாயிற்படிக்கு எதிரில் இரு வாயிற்கால்கள் நடப்பட்டு அவற்றின் முனைகள் ஒரு குறுக்குக்கம்பால் இணைக்கப்பட்டன. இது பரணின் ஒரு பகுதிபோல் காட்சியளித்தது. இதனை மையமாகக் கொண்டு வாயிற்படிக்கு மேற்புறத்தில் ஒரு மூங்கில் இணைக்கப்பட்டு, அதனை மேட்டு வாரையாக வைத்து அதிலிருந்து இருபுறத்திலும் மூங்கிற் கழிகளைத் தொங்கவிட்டு அதன் முனைகள் இருமருங்கும் வாயிற்படிக்கு நேராக எழுப்பப்பட்ட சுவர்களின்மேல் பொருத்தப்பட்டன. அவற்றின் மேல் கூரை வேயப்பட்டது. இப்பொழுது பார்ப்பதற்கு இது ஒரு நாற்கரக் கூரைவீடு ஒரு வட்டக் கூம்பு வீட்டோடு இணைந்திருப்பது போல் காணப்படும்.

## மர வீடுகள்

ஆரியர் மரத்தைப் பயன்படுத்திக் கட்டடங்களைக் கட்டும் அரிய கலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். கூரைக் காலத்தையடுத்து ஆரியக் கட்டடக் கலையில் மரத்தைப் பயன்படுத்திய காலம் ‘மரக்காலம்’ (Wooden Period) என்று அழைக்கப்பட்டது.

பண்டைய வட்டவடிவில் கட்டப்பட்ட வீட்டின் கூரைப் பகுதியை மரச் சட்டங்களாலும் வரைப்பத்தைகளாலும் அமைக்கப்பட்டன. பின்னர் வழக்கில் வந்த உருள் தொட்டி வடிவிலான கூரையையும் இதைப்போலவே மரக்கூரையால் அமைத்தனர். வாயிற்படிக்கு மேல் அரைவட்ட வடிவத்தில் ஒரு வாரையை வளைத்து அதில் துளையிட்டு மரப்பத்தைகளை அல்லது மூங்கிற்பத்தைகளை நுழைத்து அதேபோன்ற வாரை வளைவில் அவற்றின் மறுமுனைகளை இணைத்து உருள் தொட்டிக் கூரைகளை (Barrel Roofs) உருவாக்கினர்.

பின்னர் ஒரே வளைவு வாரை (Single Bent Bamboo) பதிலாகப் பிறைபோல் செதுக்கிய இரு மரச் சட்டங்களை அல்லது மூங்கிற் பத்தைகளை இணைத்து முகப்பை உண்டாக்கினான். இப்பொழுது இது முன்னர் அரைவட்ட வடிவிலிருந்து முகப்பைப்போல் காட்சியளித்தாலும், அவ் அரைவட்ட வடிவத்தில் நடுவில் இருபிறைகள் கூடுமிடத்தில் அதன் முனைகள் சற்று மேலே கூராக உயர்ந்து நின்றன. இக்காட்சி ஒரு வளைமாடம் போலவும், கூப்பிய கைகளைப் போலவும் காட்சியளித்தது. மேலும் இதில் மாற்றம் செய்து இதேபோன்ற சிறிய, பெரிய இணைச் சட்டங்களை அமைத்து அவற்றை மர ஆணிகளால் (Wooden Rods) கோத்து மலர்கள் போலவும், இதழ்கள் போலவும், மாடங்கள் போலவும் காட்சியளிக்குமாறு செய்தான். இதுபோன்ற பல்வேறு மாற்றங்களை வீட்டின் வாயிற்படியும், சாளரங்களும், பிறபகுதிகளும் பெறலாயின. மரச்சட்டங்களையும், மூங்கிற்பத்தைகளையும் சிறிதும் பெரிதுமாக இழைத்து இணைக்கவும், துளையிட்டு நுழைத்தும், ஆணிகளைப் பயன்படுத்தியும், கோக்கவும் நன்கு பயிற்சி பெற்ற தச்சர்கள் தங்களின் விருப்பத்திற்கேற்ப வளைவுகளையும், வளை மாடங்களையும் (Arches and Domes) நீள், சம சதுரங்களையும் மற்றும் பல்வேறு கோணங்களையும் மனத்தில் கொண்டு, அவ்வனங்களிலெல்லாம் கட்டடங்களையும் அவற்றின் பகுதிகளையும் அமைத்துக் கட்டடக்கலைச் செல்வத்தைப் பெருக்கினார்கள். வட்டவடிவ வீட்டின் கூரை மரத்தாலானபோது ஓர் அரையுருண்டையை மேலே கவிழ்த்துவைத்தாற்போல் அதன் தோற்றம் காட்சியளித்தது.

## மௌரியர் காலக் கட்டடங்கள்

சந்திரகுப்த மௌரியர், சாணக்கியர் உதவியுடன் நந்த வம்சத்தின் மகதப் பேரரசன் தனநந்தனை வென்று கி.மு. 325ல் மௌரியப் பேரரசை நிறுவினார். பழங்கால இந்தியாவில் பரப்பளவில் விரிவானதாகவும் அரசியல் படைத்துறை தொடர்பில் மிகவும் வலுவானதுமாகவும் இப்பேரரசு விளங்கியது.

மௌரிய அரசின் ஒப்பற்ற தலைநகரம் பாடலிபுத்திரமாகும். இது சோன்நதி கங்கையுடன் கலக்குமிடத்தில் அமைக்கப்பட்ட நகரமாகும். இன்றைய பாட்னா நகரமே பாடலிபுத்திரமாக விளங்கியது. இந்நகரம் திட்டமிட்டுக் கட்டப்பட்டதாகும். அரண்மனை பொன்னாலும் வெள்ளியாலும் மெருகிடப்பட்ட கலைக்காட்சியால் அலங்கரிக்கப் பட்டிருந்தன. அரண்மனையைச் சுற்றிலும் தோட்டங்களும் அழகிய குளங்களும் இருந்தன. அடுத்த கடைவீதிகள் அமைக்கப்பட்டிருந்தன. கடைவீதிகளை சுற்றி மக்கள் வாழ்ந்த

வீடுகள் இருந்தன. நகரைச் சுற்றிலும் மர வேலைப்பாடுகள் நிறைந்த மதில் சுவர்களும் அகழிகளும் இருந்தன. இந்நகரின் நிர்வாகம் நகர நிர்வாகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது. சந்திரகுப்த மௌரியன் தன் கோநகரமாகிய பாடலிப்புரத்திற்குப் பாரசீகக் கலைஞர்களை வரவழைத்துச் சிறந்த கட்டடக்கலையையும் மற்ற கலைகளையும் உருவாக்கினான். அக்கலைஞர்கள் இந்திய உள்ளத்தோடு பாரசீகக் கைகளால் இக்கலைகளை உருவாக்கினார்கள்.

பாடலிபுத்ர நகரத்தில் கோயில்கள், சாலைகள், கால் பாதைகள், கிணறுகள், தண்ணீர் தொட்டிகள், மருத்துவமனைகள், தோட்டங்கள் மற்றும் பொழுதுபோக்கு எனப் பல்வேறு அம்சங்களைப் பெற்று காணப்பட்டது. பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் மற்றும் பொது நெடுஞ்சாலைகள் கட்டுமானம் மற்றும் பராமரிப்பு ஆகியன மாநிலத்தில் பொறுப்பில் இருந்தது. மௌரிய ஆட்சியாளர்கள் அதிக எண்ணிக்கையிலான கால்வாய்களைக் கட்டினர். பாசன திட்டங்களை நிறுவினர். பாடலிபுத்திரம் நன்கு திட்டமிடப்பட்ட நன்கு நிர்வகிக்கப்பட்ட ஒரு அழகிய நகரமாகத் திகழ்கிறது.

## அசோகர்

மகதப் பேரரசை ஆண்ட மௌரிய மன்னர்களில் அசோகர் மிகச் சிறந்தவர். அவர் உலகம் முழுவதும் பெருமளவில் புத்த மதத்தைப் பரப்பினார். தெற்காசியா மற்றும் மத்திய ஆசியாவில் புத்த துறவிகள் தியானம் செய்வதற்காக 84,000 ஸ்தூபங்கள் கொண்ட பல மண்டபங்களைக் கட்டினார்.

## குடைவரைகள்

இந்தியாவில் மலையைக் குடைந்து கோவில் அமைக்கும் குடைவரைக் கலை அசோகரால் துவக்கப்பட்டது. முதல் குடைவரை இன்றைய மாநிலம் மகதம்பூர் பகுதியில் உள்ள பராபர்க் குன்றுகளிலுள்ள ஒரு மண்டபமும் நாகார்ச்சுனக் குன்றுகளிலுள்ள மூன்று மண்டபங்களுமாகும். பராபர்க் குன்றுகளிலும், நாகார்ச்சுனக் குன்றுகளிலுமுள்ள குடைவரை மண்டபங்கள், மாந்தர் நடமாட்டம் இல்லாத அடர்ந்த காட்டின் நடுவில் தனித்த இடத்தில் அமைந்திருப்பது இவற்றின் சிறப்புக்கு முதன்மைக் காரணமாகும். இவற்றில் காணப்படும் பல்வேறு பட்டையங்களிலிருந்து பேரரசர் அசோகரின் ஆணையின் படி ‘அசிலிகா’ எனப்படும் சமணத்துறவிகளுக்காக கி.பி.245ல் இவை குடையப்பட்டவையாகும். தனிப்

பாறைகளைக் குடைந்து குடைவரை மண்டபங்களை ஆக்கும் கலையில் இந்தியர்கள் கைதேர்ந்தவர்களென்பதை இப்பழம் பெருங்குகைகள் காட்டுகின்றன.

இக்குடைவரை மண்டபங்கள் உட்புறம் முழுவதும் கண்ணாடிபோல் வழவழப்பாகச் செதுக்கி மெருகிடப்பட்டுள்ளன. இத்தகைய மெருகிடும் ஆலையை அசோகர் காலத்துக் கலைஞர்கள் கிரேக்கர்களிடமிருந்து கற்றார்கள். குடைவரைகள் அக்கால கல் தச்சர்களின் திறமையையும் கைவண்ணத்தையும் கலை நுட்பத்தையும் காட்டுவதோடு இவை பொறியாளரின் திறமையையும் எடுத்துக்காட்டுகின்றன.

## தூண்கள்

அசோகர் காலத்தில் கல்தூண்கள் நிறுவப்பட்டன. இத்தூண்கள் கொடிக் கம்பங்கள் (Dhwaja stambhas) அல்லது புனிதக் கம்பங்கள் என்று அழைக்கப்பட்டன. கட்டடத் தூண்களில் அடிப்பகுதியில் வெண்தாமரைக் கனியின் உருவமும், தலைப்பின் அடியில் தாமரை மலரின் உருவமும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. சில கம்பங்களின் அடிப்பகுதிகள் நீர்கலய (Water Pot) வடிவில் செதுக்கப்பட்டுள்ளன. அண்ட கோளங்களிலுள்ள கருப்பையைக் குறிப்பதற்கும் அவை தூய்மை பெற்று மெய்யறிவில் கலப்பதைக் காட்டுவதற்கும் இத்தகைய நீர்க்குடமும் வெண்தாமரையும் சின்னங்களாய்க் கொள்ளப்பட்டன. இந்துக் கோயிற் கம்பங்களில் இதையே நீர்க்கலயமாகவும், செந்தாமரை மலர்ந்து உலக உயிர்களின் உள்ளக் கதவுகளைத் திறப்பதைக் காட்டுவதாகவும் கொள்கின்றனர்.

அசோகர் காலத் தூண்களில் தாமரையேயல்லாமல் பிற மலர்களும், செடி கொடிகளும் வாழை, தென்னை போன்ற மரங்களும் மற்றும் இயற்கைக் காட்சிகளும் செதுக்கப்பட்டிருந்ததை அறியலாம். இத்தகைய கல் தூண்களை கி.மு. 242லிருந்து செதுக்கியிருக்க வேண்டுமென்றும் சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இந்தியாவில் காணப்படும் கற்றூண்களில் மிகவும் தொன்மையானதும், ஒரே கல்லினால் செதுக்கப்பட்டதும் அசோகருடைய கற்றூண்களேயாகும். இத்தூண்கள் டில்லி, அலகாபாத், சாரநாத் முதலிய இடங்களில் காணப்படுகின்றன. சாரநாத் கற்றூண் முகப்பு அழகிற்கும் கம்பீரத்திற்கும் புகழ் பெற்றது. அத்தூணின் மீது காணப்படும் வடிவமே இன்றைய இந்திய அரசின் தேசியச் சின்னமாக அமைந்துள்ளது.

## ஸ்தூபி

அசோகர் நிறுவிய ஸ்தூபிகளைச் சுற்றிலும் சிற்ப வேலைப்பாடமைந்த சுற்று வேலிகள் இடப்பட்டுள்ளன.

## அசோகர் நிறுவிய ஸ்தூபிகள்

ஸ்தூபி வட்ட வடிவமுள்ள அழகிய கட்டடம். அதனுள் புத்தரின் புனிதச் சின்னங்கள் புதைக்கப்பட்டன. சாஞ்சியிலுள்ள ஸ்தூபி புகழ் வாய்ந்ததாகும். இது மத்தியப் பிரதேசத்தில் போபாலுக்கு அருகில் உள்ளது. அசோகர் காலத்தில் அமைக்கப்பட்ட பராபர் குன்றுகளே நாட்டில் தோன்றிய முதல் குகைக் குடைவுகளாகும். பிற்காலக் குகைக் கோவில்களுக்கு இவையே அடிகோலின.

## சாதவாகனர் கால கட்டடக்கலை

மௌரியப் பேரரசு வலிமைகுன்றிய காலத்தில் ஆந்திரம் விடுதலை பெற்றுச் சிமுகனால் ஒரு தனியாட்சியாக அமைக்கப்பட்டது. இவனுக்குப்பின் அரசனானான் கௌதமி புத்திர சதகர்ணி என்பவன் அரசனானான். இவன் ஆந்திர அரசர்களிலேயே மிகவும் சிறப்பு வாய்ந்தவனாவான். இவன் காலத்தில் நாசிக், கர்லி முதலிய இடங்களில் எழுந்த கலைப் பொருள்களும், கல்வெட்டுகளும் வரலாற்று முகாமைப் பெற்றவைகளாயுள்ளன. சாதவாகனர் காலத்தில் புத்த, ஆரிய சமயங்கள் தனித்தனியே சிறப்புற்று விளங்கின.

சாதவாகனர் காலத்தில் புத்த சமயமும் புத்தக் கலைகளும் சிறப்புற்று விளங்கினவென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. பிதால்கோரா, நாசிக், பாச்சா (Bhaja), பெத்சா, கொண்டேனி, குடா முதலியவிடங்களில் இவர்கள் காலத்தில் புத்தர் குடைவரை மண்டபங்களும், கோயில்களும் செதுக்கப்பட்டன. பத்திரிப்புரோலு, அமராவதி, கோலி, கண்டசாலா, கும்மாதிடுர்ரு ஆகியவிடங்களில் புத்தத் துமுளிகள் ஆக்கப்பட்டன.

சாதவாகனர்களால் குடையப்பட்ட குகைகளை வழிபாட்டு மண்டபங்கள் அல்லது புத்தக் கோயில்கள் என்றும் புத்தத் துறவிகளின் (பிக்குகள்) வாழ்விடங்கள் என்றும் இருவகையாகப் பிரித்துள்ளனர். இத்தகைய புத்தக் கோயிற் கட்டடங்கள் கனைகக்கூரை (Vaulted Root) களையும், குதிரைக் குளம்பாணி வடிவிலான சாளரங்களையும் உடையன.

இச்சாளரங்கள் நுழைவாயிலுக்குமேல் அமைந்துள்ளன. இவற்றின் உட்பரப்பில் சுற்றிச்செல்லும் பக்கச்சிறைகளும், அவை இணையும் தலைமாட்டில் ஒரு சகடக்குட உருவமும் அமைந்துள்ளன. இதனையடுத்து உட்புறத்திலுள்ள வட்டத்தில் ஒரு சிறிய தூணும் குடத்திற்குமேல் காணப்படும் பொதுவான அமைப்பாகும்.

புத்தக் கோயில்களில் இடம்பெற்றுள்ள மடங்கள், மேற்கண்ட கோயிற்கட்டட அமைப்பிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றன. ஒவ்வொரு மடத்திலும் பல அறைகள் உள்ளன. ஒவ்வோர் அறையிலும், ஒரு துறவி படுத்து உறங்குவதற்காகக் கற்பலகைமேடு உள்ளது. ஒவ்வோர் இறைக்கும் பக்கவாட்டில் சாளரங்கள் உள்ளன. அத்தோடு ஒவ்வொரு மடத்திலும் ஒன்று அல்லது இரண்டு கல்லாலான நீர்த்தொட்டிகள் உள்ளன. இதுபோன்ற ஏந்துகளேயல்லாமல் துறவிகளுக்கான பல்வேறு ஏந்துகளும், அவர்கள் தங்கும் மடங்களையும், கோயில்களையும் பாதுகாக்கும் திட்டங்களையும் மானியங்களையும் ஆந்திர அரசர்கள் தாராளமாக வழங்கினார்கள். புத்த சமய ஆண் துறவிகளும், பெண் துறவிகளும் தனித்தனியே வாழ்ந்தார்களென்றும், தனித்தனியே அவர்களுக்கு மடாலயங்கள் கட்டப்பட்டனவென்றும் பட்டையங்களிலிருந்து அறியலாம்.

## சாஞ்சித்துமுளி

சாஞ்சி பண்டைய போப்பாலிலும், இன்றைய மைய மாநிலத்திலும் உள்ளது. சாஞ்சிகானகெதா என்ற ஊரில் அமைந்துள்ள இதற்குச் சாஞ்சித்துமுளி என்னும் பெயராயிற்று.

இத்துமுளியை முதன்முதலில் கி.மு.250–ல் அசோகர் கட்டினார். இதற்குப்பிறகு இதன் துமுளியைச் சுற்றிலும் இதைப்போலவே இரண்டு மடங்கு பெரிதாகக் கட்டப்பட்டுள்ளன. அசோகரால் கட்டப்பட்ட மூலத்துமுளி அழிக்காமலேயே அதன் மேல் அதனைச் சுற்றிலும் பெருந்துமுளி கட்டப்பட்டதால் சாஞ்சித்துமுளி அசோகர், சுங்கர்கள் ஆகியோரின் கட்டடமாகக் காணப்படுகிறது. இதனை 'துமுளிக்குள் துமுளி' என்று அழைப்பர். இதுபோன்ற துமுளிகள் பிற்காலத்தில் சாரநாத், பஞ்சாப் முதலிய இடங்களிலும் கட்டப்பட்டுள்ளன. சாஞ்சித் துமுளியின் குறுக்களவு 120 அடி, இதன் உயரம் 54 அடி; இதனைச் சுற்றிலும் தரைமட்டத்திலிருந்து 16அடி உயரத்திற்கு மாடியொன்று எழுப்பப்பட்டுள்ளது. இம்மாடியைச் சென்றடைவதற்கு இருபக்கங்களிலும் மாடிப்படிகள் (Sopana) கட்டப்பட்டுள்ளன. இக்கட்டடம் முழுவதும் உளியால் செதுக்கப்பட்டு மெருகேற்றிய

கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. இந்தியக் கற்கட்டடங்களில் பொறியியல் அறிவையும், கட்டடக் கலையறிவையும் பயன்படுத்தி முழுக்கட்டடமும் கல்லால் கட்டப்பட்ட முதல் கட்டடம் இதுவே ஆகுமெனப் பெர்சி பிரவும் கூறுகிறார்.

## தோரண வாயில்கள்

சாஞ்சிப் பெருந்துமுளியில் நான்கு பெரிய தோரண வாயில்கள் காணப்படுகின்றன. இந்நான்கு தோரண வாயில்களும்ஆந்திரர்களால் கட்டப்பட்டன. முதலில் தெற்கிலும் (தோரா கி.மு.25–ல்) பின்னர் வடக்கிலும், பின்னர் கிழக்கிலும், இறுதியாக மேற்கிலுமுள்ள தோரணவாயில்கள் இவர்களால் கட்டப்பட்டன. பாரத்திலுள்ள துமுளியின் கிழக்கிலுள்ள தோரணவாயில் கிமு. 184–72–ல் சுங்கர்களால் கட்டப்பட்டதென்பதை அங்குள்ள பட்டையத்தால் அறிகிறோம்.

சாஞ்சித் தோரணவாயில்களின் உயரம் 34 அடியாகும். இதன் அகலம் 20 அடியாகும். வாயிற் கம்பங்களின் குறுக்கே 15 அடி உயரத்திற்குமேல் மூன்று குறுக்குச் சட்டங்கள் தக்க இடைவெளிவிட்டு இணைக்கப்பட்டுள்ளன. கம்பங்களின் குறுக்களவு சாதாரண கம்பங்களைத் தரையில் நட்டு ஆக்கப்பட்டிருந்தபோதிலும், கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக எத்தகைய புயலுக்கும் மழைக்கும் வெயிலுக்கும் பனிக்கும் அஞ்சாமல், அழகு குறையாமல், எவ்வகை ஊன்றுகோலுமில்லாமல் நிலையாக நின்று காட்சியளிகின்றது.

## குஷானர் கால கட்டடக்கலை

மௌரியர்களின் வீழ்ச்சிக்குப்பின் இந்தியாவில் நிறுவப்பட்ட வலிமையான அரசு குஷானப் பேரரசு. இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் குஷான பேரரசை கி.பி. முதலாம் நூற்றாண்டில் முதலாம் காட்பிளஸ் நிறுவினார். கனிஷ்கர் இரண்டாம் காட்பிஸ்ஸிற்குப் பிறகு ஆட்சி பீடம் ஏறினார்.

குஷானர்களில் பெயர்பெற்ற அரசன் கனிஷ்கர். கனிஷ்கா புரம் என்னும் ஒரு புதிய நகரத்தை உருவாக்கினான். புருஷபுரம் அல்லது பெசாவர் என்னும் நகரத்தில் ஒரு சிறந்த மகாயாணத் துமுளியையும், மடாலயத்தையும் அமைத்தான். இவற்றை அமைப்பதற்குப் பெயர்பெற்ற கிரேக்கக் கலைஞனான அசிலாஸ் (Agesilaus) என்பானின் தலைமையில் சிறந்த கிரேக்கக் கலைஞர்கள் முழு உருவமான கனிஷ்கனின் படிமம் இவர் காலத்துப் படிமக் கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

கனிஷ்கர் ஒரு பெரிய கட்டிட அமைப்பாளர். அவர் பல நகரங்களையும் அழகான கட்டிடங்களையும் கட்டினார். அவர் தனது தலைநகரான புருஷப்பூரில் 600 அடி உயரமான கோபுரத்தைக் கட்டினார். பதினான்கு மாடிகளைக் கொண்ட அதன் மேல் பகுதி இரும்பால் செய்யப்பட்டிருந்தது. அதைச்சுற்றிலும் பல புத்தர் சிலைகள் வைக்கப்பட்டிருந்தன. காஷ்மீரை வெற்றிகொண்ட பிறகு ஸ்ரீநகருக்கு அருகில் கன்னியாகுபுரா நகரத்தை அவர் கட்டினார். இது இன்றும் ஒரு பெரிய கிராமமாக உள்ளது. மதுராவில் பல ஸ்தூபிகள், மடாலயங்கள் மற்றும் கோவில்களையும் கட்டினார். கனிஷ்கரின் கலை முயற்சியின் காரணமாக, காந்தாரா பள்ளி புகழ் பெற்றது. கங்டிங்கா கட்டிடக்கலை மற்றும் சிற்பக்கலை ஆகியவற்றை ஆதரித்த பெரும் கலைப் புரவலராக இருந்தார்.

## சங்ககாலக் கட்டடங்கள்

சங்க காலத்தில் எளிய மக்களின் வீடுகள் திட்டமிட்ட கட்டுமான அமைப்பு இல்லாமல் வாழும் நிலப்பகுதிகளில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு இல்லங்களை அமைத்துக் கொண்டனர். எளிய வீடுகள் களி மண்ணால் கட்டப்பட்டுக் கூரைகள் புல், தென்னை, பனை ஓலைகளால் வேயப்பட்டிருந்தன.

சங்ககால நகரங்கள் திட்டமிட்டுக் கட்டப்பட்டவையாக விளங்குகின்றன. நகருக்கு அழகூட்டுவன தெருக்களேயாகும். இத்தெருக்கள் ஆறு கிடந்தாற்போன்று அகலமாக அமைந்திருந்தன. நேராகவும், வளைந்து செல்லும் தெருக்கள் இருந்தன. தெருக்களின் இருமருங்கிலும் கட்டடங்கள் அமைக்கப்பட்டன. வணிகர்கள், செல்வர்கள், அரசியலதிகாரிகள் முதலனோர் மாடமாளிகைகளில் வாழ்ந்தனர்.

மாளிகைகள் உயர்ந்தோங்கிய மாடங்களாக விளங்கின. இம்மாடங்களின் தளம் பரந்து விரிந்தும், மேலே செல்ல செல்ல முனைப்பரப்பு குறுகிச் சென்று முடிவுற்றதாகத் தெரிகிறது. இம்மாடங்களின் மேன்முனை உயரமாக இருந்ததால் மிகவுயரத்தில் பறக்கும் பருந்து முதலான பறவைகள் ஓய்வு கொள்ளும். இவற்றின் சுவர்கள் அகலமாகவும் திண்மையாகவும் கட்டப்பட்டன. சுவருக்கு வெள்ளையடித்தும், காவி கலந்து செம்பு போன்ற வண்ணம் பூசி வெள்ளையடித்த சுவர்களில் ஓவியங்கள் வரைந்து அழகுபடுத்தினர். மாளிகைகளில் அமைக்கப்பெற்ற தூண்கள் வனப்பு மிகுந்து காணப்பட்டன.

சங்ககால அரசர்கள் இறைவனுக்கு நிகராக மதிக்கப்பட்டனர். அரண்மனை நூலறி புலவர்களைக் கொண்டு ஆராய்ந்து கட்டப்பெற்றது.

## கல்லணை கட்டடக்கலை மேலாண்மை

மழைநீர் வீணாகக் கடலில் சென்று கலப்பதால் எவ்விதப் பயனும் இல்லை. ஓடிவரும் ஆற்றுநீரினைத் தடுத்து அதன் நடுவே நீர்த்தேக்கங்களை ஏற்படுத்தி மழைநீரைச் சேகரிக்கும் திட்டத்தை நடைமுறைப்படுத்தி வேளாண்மையைப் பெருக்கவும் அன்றாடத் தேவையை நிறைவேற்றிக் கொள்ளவும் அணைகட்டி நீரைத் தேக்கிப் பயன்படுத்தும் உத்தியைச் சங்கத்தமிழர் நன்கறிந்திருந்தனர். அதனால் பல நீர்த்தேக்கங்களை ஏற்படுத்தினர்.

தஞ்சையில் காவிரி ஆற்றின் மீது கட்டப்பட்டுள்ள கல்லணை மிகவும் பழமையானது. இந்த அணை கரிகாற்சோழ மன்னனால் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. மணல் அடித்தளம் அமைத்து கல்லணையைக் கட்டிய பழந்தமிழர் தொழில்நுட்பம் இன்றுவரை வியத்தகு சாதனையாகப் போற்றப்படுகிறது.

> **“கொள்ளிடத்திற்குக் குறுக்கே மேலணை என்ற சிறந்த அணை கட்டப்பட்டுள்ளது. உள்ளாறு காவிரியையும் கொள்ளிடத்தையும் இணைக்கம் இடத்தில் வெள்ளாற்றுக்குக் குறுக்கே கல்லணை எனும் அணை கட்டப்பட்டுள்ளது. இவ்வணை கரிகாற்சோழனால் கட்டப்பட்டதாகும். கரிகாலன் கட்டிய கல்லணை வரலாற்றுப் புகழ் வாய்ந்தது. இரண்டாம் நூற்றாண்டில் சோழப் பேரரசனாக விளங்கிய கரிகாலனால் கட்டப்பட்டது. இந்த அணை, இலங்கையிலிருந்து கொண்டு வரப்பட்ட கைதிகள் மூலம் கரிகாலனால் இவ்வணை கட்டப்பட்டதாபக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கல், களிமண் இரண்டும் சேர்த்துக் கட்டப்பட்டதால் தான் ‘கல்லணை’ என்று பெயர் பெற்றது. பிற்காலத்தில் இந்த அணையின் மீது பாலமும் புதிய வகை மதகுகளும் ஆங்கில அரசு இருந்தபோது அமைக்கப்பட்டன’’[19]**

என மனசை கீரன் குறிப்பிடுகிறார்.

மிகுதியாக வரும் வெள்ளத்தைக் கல்லால் கட்டப்பட்ட கல்லணை தேக்குவதால் நீர் குளம் போலத் தேங்கி நிற்கும். அந்த அணையில் மதகுகள் அமைத்து வேண்டும்போது வேண்டிய அளவு தண்ணீரைத் திறந்து விடுவதுண்டு. கல்லால் கட்டப்பட்ட அணையைக் கற்சிறை என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

தொல்காப்பியர் கல்லால் அணைகட்டி நீரைத் தேக்கியதைப் பற்றி தெளிவாகக் குறிப்பிடுகிறார். மழைக்காலங்களில் ஆற்றில் பெருக்கெடுத்து ஓடிவரும் நீரை ஒரு கற்சிறை தடுத்து நிறுத்துவதுபோல் முன்னேறிவரும் ஒரு படையை உறுதியோடு முன்சென்று நிறுத்தக் காரணமாவதன் மூலம் ஒரு வீரன் பெருமையடைகிறான் என்று தொல்காப்பியம் கற்சிறையை வீரனின் வெற்றிக்கு உவமை கூறுவதனை,

**‘‘வருவிசைப் புனலைக் கற்சிறை போல**

**ஒருவன் தாங்கிய பெருமையானும்’’**[20]

என்னும் நூற்பா விளக்குகிறது. பகைவர்களின் படையைத் தடுத்து நிறுத்த அகன்ற ஆற்றைத் தடுத்து நிறுத்தும் மலையைப் போல் மன்னன் நின்றான் என்றும், வருகின்ற வெள்ளத்தைக் கல்லணை கட்டித் தடுத்து நிறுத்தினாற் போல பகைவரைத் தடுத்து நிறுத்தி, புறமுதுகிட்டு ஓடச் செய்த போரை விரும்புகின்ற படைத்தலைவன் என்றும், கரையை உடைத்துச் செல்லும் வெள்ளத்தைத் தாங்கும் அணையைப் போல் வில்லினின்று வெளிவந்த அம்புகளை ஒருவன் தான் மட்டுமே தாங்கி நின்றான் என்றும் கூறுவதன் மூலம் சங்கத்தமிழர் இயற்கை அரணாகக் கல்லால் அணைகட்டி நீரைத் தேக்குவதில் கைத்தேர்ந்தவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை,

**‘‘குன்றுவிலங்கு சிறையி னின்றனை யெனாஅ’’ (புறம். 169:4–6)**

**‘‘வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்**

**கொல்புனற் சிறையின் விளங்கியோன் கல்லே’’ (புறம். 263:7–8)**

**‘‘வருபுனற் கற்சிறை கடுப்ப இடையறுத்து**

**ஒன்னா ரோட்டிய செருப்புகன் மறவர்’’ (மதுரைக். 725–726)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. இதனால் தொல்காப்பியம் தோன்றிய காலத்திலேயே கற்சிறை என்னும் கல்லணைகளிருந்தன என்று அறியமுடிகிறது. மிக்கு வரும் ஆற்று நீரிடத்துக் கல்லணை நின்று தாங்கினாற் போல பகைவர் படையைத் தடுத்துத் தோற்று ஓடச்செய்த, காவிரியில் கரிகாலன் கல்லணை கட்டிய செய்தி பொருநராற்றுப் படையில் கூறப்படுகிறது. இதனை,

**''நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்**

**புனலாடு மகளிர் கதுமெனக் குடைய'' (பொரு. 240–241)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. வரைப்பகம் என்னும் சொல் அணையைக் குறிக்கும் என்பர். திருவாலங்காட்டுச் செப்பேடும் சோழன் கரிகாலன் காவிரிக்குத் கரை கட்டினான் என்று கூறுகின்றது. அணை கட்டிய செய்தியும் பேசப்படுகின்றது. நீர்தேக்கங்கள் அமைப்பதில் மணல் தளத்தை அடிப்படையாகக் கொண்டு கட்டிடங்கள் எடுப்புவது ஒப்பற்ற தலையாகும். அணையின் மேல் வழிந்து செல்லும் நீர் அதன்கீழ் கசிந்து செல்லும் நீர் இரண்டாலும் பாதிக்கப்படாத வகையில் அணை அமைந்திருக்கும்.

## அணை சூத்திரம்

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழகத்தை ஆண்ட கரிகால் சோழன் காவிரியில் அடிக்கடி பெருவெள்ளம் வந்து மக்கள் துயரப்பட்டதைக் கண்டார். அதை தடுத்து காவிரியில் ஒரு பெரிய அணையைக் கட்ட தீர்மானித்தார். ஒரு நொடிக்கு 2 லட்சம் கனஅடி நீர் பாயும் காவிரியின் தண்ணீர் மேல் அணை கட்டுவது சாதாரண விஷயமல்ல. அதற்கு ஒருவழியை கண்டுபிடித்தார்கள் தமிழர்கள். நாம் கடல் தண்ணீரில் நிற்கும்போது அவை நம்கால்களை அணைத்துச் செல்லும். அப்போது பாதங்கள் கீழே குறுகுறுவென மணல் அரிப்பு ஏற்பட்டு நம் கால்களை இன்னும் மண்ணுக்குள்ளே புதையும் படி செய்யும். இதைத்தான் சூத்திரமாக மாற்றினார்கள்.

## கிராண்ட் அணைகட்டு

ஓடும் நீரில் அணைகட்டுவது மிகவும் கடினமான பணி, காரை மற்றும் சுண்ணாம்பு கரைந்து கொண்டே போய்விடும். நீரை வேறு பக்கம் திருப்பி விட்டு, அதன் பின்பு அணையைக் கட்டியாக வேண்டும். நீரை பாதை மாற்ற வேண்டும். ஆனால் காவிரியில் இது முடியாது. வெள்ளம் ஏற்படும் காலங்களில் நொடிக்கு இரண்டு லட்சம் கனமீட்டர் நீர்

பாய்கிறது. எனவே, ஆற்றை திருப்புவது என்பது கடினம். இருப்பினும் இந்த அணையை அருமையான தொழில் நுட்பத்தின் மூலம் கட்டி முடித்து சாதித்துக் காட்டியுள்ளனர். ஆற்றங்கரையிலோ,

ஓடும் நீரோட்டத்தின் மீது பெரிய பாறைகளை வைத்துள்ளனர். இது மெல்ல மெல்ல மணலுள் பதிந்து அடியில் பாறைப்பகுதியை அடையும். அதன்பின் அதே இடத்தில் மற்றொரு பாறை வைக்கப்படும். இவ்வாறு வைக்கும்போது இரண்டு பாறைகளுக்கு இடையில் ஒரு வகையான கரையாத தன்மை கொண்ட களிமண்ணைப் பயன்படுத்தி உள்ளனர். தஞ்சை பகுதியில் பெரும் பாறைகள் கிடைப்பது அரிதான விஷயம். அதனால் புதுக்கோட்டை அல்லது திருச்சி பகுதிகளில் இருந்து கற்களை கொண்டு வந்திருக்க வேண்டும். இப்படி பல இடையூறுகளைக் கடந்து கல்லணைக் கட்டப்பட்டதை நினைத்தால் வியப்பும் பெருமையும் பொங்குகிறது.

போர்டு ஸ்மித் என்பவர் இது ஒரு மிகச் சிறந்த சாதனை என்கிறார். ஏனென்றால் ஆற்றுப்படுகையில் அணைகட்டும் தொழில் நுட்பம், 19ம் நூற்றாண்டின் இறுதியில் தான் மேலை நாடுகளில் கண்டுபிடிக்கப்பட்டது. அதற்கு பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்த அணை தமிழகத்தில் கட்டப்பட்டுள்ளதால், இதற்கு 'கிராண்ட் அணைகட்' என்று பெயர் வைத்தனர். இந்த பெயரில்தான் இந்த அணை உலகம் முழுவதும் அழைக்கப்படுகிறது.

## கலங்கரை விளக்கம்

மரக்கலங்கள் கடற்பரப்பில் திசைதப்பிச் செல்லாதவாறு தடுத்துத் துறைமுகத்துக்கு வழிகாட்ட கலங்கரை விளக்கத்தினை அமைத்திருந்தனர். அந்த கலங்கரை விளக்கங்கள் விண்ணைத் தொடும் அளவுக்கு மிக உயர்வாகக் கட்டப்பட்டிருந்தன.

கடலில் ஓடுகிற கப்பல்கள் இராக்காலத்தில் துறைமுகம் உள்ள இடத்தையறிந்து கரை சேர்வதற்காகக் கலங்கரை விளக்குகள் துறைமுகங்களில் அமைப்பது வழக்கம். இதனை,

**"வானம் ஊன்றிய மதலை போல**

**ஏணி சாத்திய ஏற்றுஅருஞ் சென்னி**

**விண்பொர நிவந்த வேயா மாடத்து**

**இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**

**உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்**

**துறைபிறக்கு ஒழியப் போகி'' (பெரும்பாண். 346–351)**

என்னும் பாடல் மெய்ப்படுத்தி நிற்கிறது.

வானம் விழாதபடி முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒரு பற்றுக்கோல்போல விண்ணைத் தீண்டும்படி உயர்ந்து, ஏணி சாத்தியும் ஏறுதற்கு அரிய தலையினையுடையதாய், வேயாது, சாந்து பூசப்பட்ட மாடத்திடத்தே, இரவு நேரத்தில் கொளுத்திய விளக்குச் சுடர், திசை தப்பிப்பெருங்கடற் பரப்பிலே ஓடும் மரக் கலங்களை அழைக்கும். இவ்வாறு கலங்கரை விளக்கத்தின் அமைப்பு பற்றி பெரும்பாணாற்றுப்படையில் விளக்கப்பட்டுள்ளது.

துறைமுகங்கள் தோறும் கலங்கரை விளக்கங்கள் கட்டப்பட்டிருந்தன. மீகாமர் கலங்கரை விளக்கின் உதவியினால் மரக்கலங்களை இராக்காலத்தில் துறைமுகங்களுக்கு ஓட்டினார்கள். கலங்கரை விளக்குக்கு மாடவெள்ளொளி என்ற பெயரை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

**''உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**

**புலவுத்திரைப் பெருங்கடல் நீர் இடைப்போழ**

**இரவும் எல்லையும் அசைவுகன்று ஆதி**

**விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்ட**

**கோடு உயர் திணிமணல் அதன்துறை நீகான்**

**மாட ஒள்ளரி மருங்கு அறிந்து ஒய்ய'' (அகம். 255:1–6)**

காவிரி பூம்பட்டினத்தில் இருந்த துறைமுகத்திலும் அக்காலத்தில் கலங்கரை விளக்கு நிலையம் கட்டப்பட்டிருந்ததை இளங்கோவடிகள்சிலப்பதிகாரத்தில் கூறுகிறார்.

**''இலங்குநீர் வரைப்பின் கலங்கரை விளக்கமும்**

**விலங்குவலைப் பரதவர் மீன்திமில் விளக்கமும்**

**மொழிபெயர் தேத்தோர் ஒழியா விளக்கமும்**

கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமும்

எண்ணுவரம்பு அறியா இயைந்து ஒருங்கு ஈண்டி’’[21]

என்று சிலப்பதிகாரம் உரைக்கிறது.

## கட்டுமானப் பொருட்கள்

கட்டுமானத்திற்குப் பயன்படுத்தும் அத்தியாவசியமான மூலப்பொருட்கள் கட்டுமானப் பொருட்கள் எனப்படும். பழந்தமிழர்கள் ஆரம்ப காலங்களில் மண்,கல், மரம் போன்ற இயற்கையான பொருட்களைக் கொண்டு கட்டிடங்களை எழுப்பியுள்ளனர். பின்னர் கட்டுமானத் தொழில் நுட்ப முன்னேற்றத்தின் விளைவாகச் செங்கல், கதை, செம்பு போன்றப் பொருள்களையும் பயன்படுத்தியுள்ளனர். மண், கல், மரம், சுதை போன்ற எளிமையானப் பொருட்களைக் கொண்டு வானை முட்டும் அளவிற்கு மாட மாளிகைகளைக் கட்டினர் என்பது கட்டுமானத் துறையில் தமிழர்கள் சிறந்து விளங்கினர்.

## கற்கள்

கட்டுமானத் துறையின் கட்டுமானப் பொருட்களின் பெரும் பங்கினை வகித்தது கற்கள் ஆகும். கற்காலம் தொடங்கி இன்று வரை மனிதன் கற்களைத் தனது வாழ்வில் ஏதேனும் ஒரு வகையில் பயன்படுத்திக் கொண்டே வருகிறான். சங்கத் தமிழர்கள் கற்களைப் பயன்படுத்தி அணைகளையும், கோயில்களையும் பிற கட்டுமானங்களையும் ஏற்படுத்தியுள்ளனர். பழந்தமிழர்கள் கட்டுமானத் துறையில் பயன்படுத்திய கற்களின் பயன்பாட்டினை அறிய துணை நிற்பன. கரிகாலனால் எழுப்பப்பட்டதாகக் கருதப்படும் கல்லணையும், அகழ்வாய்வுகளின் மூலம் வெளிப்படும் கல்லறைகளும் சங்க இலக்கியச் சான்றுகளுமே ஆகும்.

தமிழகத்தில் பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்களை முதன்முதலில் கி.பி.7ஆம் நூற்றாண்டில் மகேந்திரவர்ம பல்லவன் தான் ஏற்படுத்தினான் என பண்டகப்பட்டு குகைக் கல்வெட்டு தெரிவிக்கிறது.

ஆனால், சங்க காலத்திலேயே தமிழர்கள் பாறைகளைக் குடைந்து கிணறுகளைத் தோண்டியுள்ளனர். மேலும், அந்தணர்கள் மலையை உள்வெளியாகக் குடைந்து அதனைத் தனது இருப்பிடமாகக் கொண்டனர் என மதுரைக்காஞ்சியில் குறிப்பு காணப்படுகிறது.

இதன் வாயிலாகப் பாறைகளைக் குடைந்து கட்டுமானங்களை ஏற்படுத்துவதில் சங்கத் தமிழர்கள் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர் என்பது தெளிவாகிறது. இதனை,

**''கல்லுறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்'' (புறம். 331:1)**

**''களைபொறி பிறப்ப நூறிவினைப் படர்ந்து**

**கல்லறுத்து இயற்றிய வல்உவர்ப் பருவில்'' (அகம். 321:7–8)**

**''குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்'' (மதுரைக். 474)**

என்ற பாடல்களின் மூலம் அறியமுடிகிறது.

**மண்**

கட்டுமான மூலப்பொருட்களில் இன்றியமையாததாக மண் இருந்தது. கட்டுமானங்களின் உறுதிப்பாட்டிற்காக மண்ணைக் குழைத்து அணைகள், கோட்டைகள், வீடுகள் போன்ற கட்டுமானங்களைக் கட்டினர். மண்ணாலான கட்டுமானங்கள் எளிதில் மழை போன்ற இயற்கை சீற்றங்களுக்கு உட்படுவதால் அவை எளிதில் அழிந்துவிட்டன.

சங்க காலத்தில் மண்ணைச் சிறிய துகள்களாக அரைத்துக் கட்டுமானப் பணிகளுக்குப் பயன்படுத்தியுள்ளனர். இதனைத் தற்கால சிமெண்ட்டின் முன்னோடியாகக் கருதலாம். மண்ணை மிகச் சிறிய துகள்களாகக் கையால் அரைத்து பயன்படுத்துதல் என்பது இயலாத ஒன்றாகும். எனவே, மண்ணை அரைப்பதற்கென ஒரு கருவியினைப் பயன்படுத்தியிருக்க வேண்டும் என்பதை உய்த்து உணரமுடிகிறது என்பதனை,

**''மண்புனை இஞ்சி மதில் கடந்தல்லது'' (பதி. 58:6)**

**''அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்'' (புறம். 341:5)**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகின்றது.

**மரங்கள்**

பழங்காலத்தில் கட்டுமானங்களில்மரம் முக்கிய இடம் பெற்றிருந்தன. குறிஞ்சி நில மக்கள் மரங்களின் மீது பரண் வீடுகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். திணை சார்ந்த

குடியிருப்புகளில் மரங்களின் பங்களிப்பு அதிகமாகயிருந்தது. மரக் கட்டடங்கள் வெயிலினாலும் மழையினாலும் தாக்குண்டு விரைவில் அழிந்துவிட்டன. இன்றளவும் கேரளத்தில் மரக் கட்டடங்களே அதிக அளவில் காணப்படுகின்றது. இதனை,

**''வெளிறுஇல் நோன்காழ்ப் பணைநிலை முனைஇக்'' (புறம். 23:11)**

**''நெடுவரை ஆசினிப் பணவை ஏறி'' (கலி. 41:8)**

**''வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ**

**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**

**குறியிறைக் குரம்பை'' (பெரும். 263–265)**

என்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகின்றது.

## செங்கல்

சங்க காலத்தில் செங்கற்களை அடிப்படையாகக் கொண்டு கோயில்கள் கட்டப்பட்டன. செங்கல் கட்டிடங்கள் உறுதியாகவும் நீண்ட நாள் நீடித்திருக்கக் கூடியதாகவும் இருந்தன. சங்க காலத்துச் செங்கல் கட்டடம் பூம்புகாரில் கண்ணகி சிலைக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் செங்கல்லை இட்டிகை, சுடுமண் என்னும் பெயர்களில் குறித்துள்ளன.

மரக் கட்டடங்கள் விரைவில் பழுதடைந்தன. எனவே, பிற்காலத்தில் சுடு மண்ணாகிய செங்கற்களினால் கட்டிடங்களைக் கட்டியுள்ளனர். அகநானூற்றில் செங்கற்களையும் மரவிட்டங்களையும் கொண்டு அமைக்கப்பட்ட கோயில் கட்டிடம், செப்பனிடாமல் விட்டதால் சிதைந்த நிகழ்வு பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க காலத்தில் கோவிலின், கீழ் தளத்தை செங்கல்லால் அமைத்து, மேலே மரத்தால் மாடம் அமைத்துள்ளனர். இதனை,

**''இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென'' (அகம். 167:13)**

**''தாமரைப் பொகுட்டில் காண்வரத் தோன்றி'' (அகம். 167:404–405)**

**''வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்**

**சுடுமணோங்கிய நெடுநிலை மனைதொறும்''[22]**

என்ற பாடல்களின் மூலம் அறியமுடிகிறது.

**சுதை**

சங்க காலத்தில் சங்கினைச் சுட்டுச் சுதையினை உருவாக்கியுள்ளனர். மதில்கள் போன்ற உறுதியான கட்டுமானங்களுக்குச் சுதையினைப் பயன்படுத்தியுள்ளனர். சுதையைச் செங்கல்லுடன் இணைத்தே பெருமளவில் பயன்படுத்தப்பட்டுள்ளது. கட்டி முடிக்கப்பட்ட கட்டுமானங்களுக்குப் பூசி அழகு செய்துள்ளனர். சங்க காலத்தில் சோழன் செருப்பழி எறிந்த இளஞ்சென்னியின் அரண்மனை சாந்தால் கட்டப்பெற்ற மாடத்தை உடையதாக இருந்துள்ளது. இதனை,

**''நல்தார் கள்ளின் சோழன் கோயில்**

**புதுப்பிறை அன்ன சுதைசெய் மாடத்து**

**பனிக்கயத்து அன்ன நீள்நகர் நன்று'' (புறம். 378:5–7)**

**''பலர்தொகுபு இடித்து தாதுஉகு சுண்ணத்தார்'' (மதுரைக். 3)**

**''நீடுகொடி இலையினர், கோடு சுடுநூற்றினர்' (மதுரைக். 401)**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகிறது.

## செம்பு

பழந்தமிழர்களால் கட்டுமானத் துறையில் பயன்படுத்தப்பட்ட உலோகப் பொருட்களில் செம்பும் ஒன்றாகும். கட்டுமானங்களில் உறுதி தேவைப்படும் இடங்களில் இரும்புக் கம்பிகளை ஊடமைத்துக் கட்டுவர். அதுபோல, சங்க காலத்தில் மதில் சுவர் இரும்புக் கம்பிகளுக்குப் பதிலாகச் செம்புக் கம்பிகளை ஊடமைத்துன் கட்டியிருக்கலாம்.

**பல்லவர் காலக்கட்டடங்கள்**

பல்லவர்கள் தொண்டை மண்டலத்தையும் அதனைச் சார்ந்த நாடுகளையும் கி.பி.3ஆம் நூற்றாண்டு முதல் 9ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செலுத்தியுள்ளனர். இவர்கள்

தமிழகத்தைக் கலைச்செல்வங்களின் கருவூலமாக மாற்றி கலையுலகில் புதுமை படைத்த காலம் கி.பி. 7ஆம் நூற்றாண்டாகும். பல்லவர்கள் காலத்திற்கு முன்பு வரை செங்கல், சுண்ணாம்பு, மரம் போன்ற அழியக் கூடிய பொருட்களை வைத்துக் கட்டிடங்கள் கட்டப்பட்டன. பல்லவர்களுக்கு முன்பே பாண்டியர்கள் கற்கோயில்களை அறிமுகப்படுத்தியிருந்தனர். எனினும் கற்கோயில்களை குடவரைக்கோயில்களாக நுட்பமாக அமைத்தவர்கள் பல்லவர்கள்தான். செங்கல், சுண்ணாம்பு, மரம், உலோகம் இவை இல்லாமல் மும்மூர்த்திகளுக்குக் கோயில் அமைத்தான் கட்டுவிசித்திர சித்தன்.

மகேந்திரவர்மன் மலைச்சரிவுகளில் குடைந்து கோயில் அமைத்தான். இவன் கட்டிய கோயில் மலை உச்சியிலும் இல்லாமல் அடியிலும் இல்லாமல், நடுப்பகுதியைக் குடைந்து குடைவரைக் கோயில்களை அமைத்தான். மகேந்திரவர்மன் மாமண்டூர், மகேந்திரவாடி, சிங்கேசுவரம், நாமக்கல் போன்ற இடங்களில் உள்ள குடைவரைக் கோயில்களை பெருமாளுக்காக எழுப்பினான். சீயமங்கலம், வல்லம், திருக்கழுக்குன்றம், பல்லாவரம், திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் உள்ள குடைவரைக் கோயில்களைச் சிவனுக்காக எழுப்பினான். மண்டபப் பட்டில் மும்மூர்த்தி கோவிலும், சித்தன்ன வாசலில் சமணர் கோயிலையும் எழுப்பினான்.

பல்லவர் காலத்தில் கற்கோவில்கள் முதன்முதலில் கட்டப்பெற்றன. அவர்களது கட்டடக்கலை கோவில் எழுப்புதலில் மிக நேர்த்தியாயிருந்தது. மகேந்திரவர்மனே அழியாத கற்கோவில்களைக் கட்டுவதில் முதன்மை முன்னோடியாகத் திகழ்ந்தான். மகேந்திரவர்மன் பல்வேறு திறமைகளைக் கொண்டதால், விசித்திர சித்தர், மாமல்லன் என்றழைக்கப்பட்டான். இதனை,

> **''மகேந்திரவர்மன் கற்களில் கோவில்களை நிர்மானிப்பதில் ஈடுபாடு காட்டினான். இதனால் அவனுக்கு விசித்திர சித்தன் என்ற பட்டப் பெயர் வந்தது. மாமல்லன் என்றழைக்கப்படும் நரசிம்மன் ஒற்றைக் கல்லாலான இரதவடிவக் கோவில்களை எழுப்புவித்தான்''[23]**

என்று மயிலை. சீனி வேங்கடசாமி பிள்ளை குறிப்பிடுகிறார்.

மகேந்திரவர்மனைப் பின்பற்றிக் குகைக் கோவில்களை அமைத்தான். குகைக் கோவில்களில் ஓவிய வேலைப்பாடு மிகுந்து காணப்பட்டது. குகைக் கோவிலின்

முன்மண்டபச் சுவர்களில் அழகிய சிலைகளும் அன்னப்பறவைகளும் சிறுமணிக் கோவைகளும் இருக்கும். தூண்களின் போதிகைகள் உருண்டு காடிகள் வெட்டப்பட்டு இருக்கும். போதிகைக்குக் கீழ்த்தூணின் மேற்புறம் உருண்டும் பூச்செதுக்கப்பட்டும் இருக்கும். தூண்களின் அடியில் ஏறக்குறைய இரண்டு முழ அகலமும் இரண்டு முழ உயரமும் கொண்டு திறந்த அகலமும் இரண்டு முழு உயரமும் கொண்டு திறந்த வாயுடன் இருக்கும். சிங்கங்கள் தூண்களைத் தம் தலைமீது தாங்கி இருத்தல் போன்று வேலைப்பாடு காணப்படும்.

நாமக்கல் மலையடியில் இருக்கும் நரசிங்கப் பெருமாள் குகைக்கோயில் இம்மன்னனால் குடையப்பட்டது. திருச்சிராப்பள்ளி மலையடியில் தென்மேற்கு மூலையில் உள்ள குகைக் கோயில் இவனால் குடையப்பட்டவை. கிழக்கு பக்கத்தில் உள்ள சிவன் கோயிலும், மேற்குப் பக்கம் பெருமாள் கோயில் இவற்றிற்கு இடையேயுள்ள மண்டபச் சுவரில் சிவன், பிரமன், இந்திரன், துர்க்கை, கணபதி ஆகியோர் உருவங்கள் மிகச் சிறப்பாகச் செதுக்கப் பெற்றன. கோவில்முன் மரவிட்டங்கள் போலக் கல்லில் அமைந்துள்ள வேலைப்பாடுகளும் கல் விட்டங்களின் நுனியில் குபேரன் உருவமும் மிக நுட்பமாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

> **“திருச்சிராப்பள்ளிக்கு வடமேற்கே உள்ள திருவெள்ளறையில் மலைமீது பழைய பெருமாள் கோவில் ஒன்று இருக்கிறது. அம்மலையினடியில் பெரிய குகைக் கோவில் குடையத் தொடங்கி வேலை முடியாமல் நிறுத்தப்பட்டது. குடைந்த அளவு காணப்படும் வேலைப்பாடு நரசிம்மன் காலத்தென்று கூறலாம். புதுக்கோட்டையைச் சார்ந்த குடுமியா மலையில் மகேந்திரனது இசையைக் குறிக்கும் கல்வெட்டிற்கு அண்மையில் உள்ள குகைக் கோவில் நரசிம்மவர்மன் காலத்தது. அதன் அமைப்பு மேற்சொன்ன திருச்சிராப்பள்ளிக் குகைக்கோவில் அமைப்புப் போன்றே இருக்கின்றது. புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யத்தில் மகேந்திரவர்மன் அமைத்த சிவன் கோவிலுக்குப் பக்கத்தில் உள்ள வைணவக் குகைக் கோவிலும் நரசிம்மன் அமைத்ததே ஆகும்”**[24]

என்பார் அய்யங்கார்.

நரசிம்மவர்மன் மகாபலிபுரத்தில் மூவகை வேலைப்பாடுகளுடன் குகைக்கோயில்களைக் கட்டியுள்ளான். அவை :

1. குகைக்கோவில்கள்
2. தேவர்கள்
3. கற்சிலைகள்

என்பன.

தமிழகத்தில் பழைய கோவில்கள் மண், செங்கல், மரம் இவற்றால் அமைந்தவை. அவற்றை நினைவூட்டும் வகையில் இக்கோயிலானது அமைக்கப்பட்டுள்ளது. இதனையே,

> **“மரத்தாலும் மண்ணாலும் செய்யப்பட்ட கோவில்களில் பல வேலைப்பாடுகள் இருந்தன. இவை இக்கற்கோவில்களில் அப்படியே காணப்படுகின்றன. மரவேலைகள் எல்லாம் கல்லிற் செதுக்கி காணப்பட்டன. திருச்சிராப்பள்ளியில் மகேந்திரவர்மன் குகைக் கோவில்கள், மரத்தால் எளிதிற் கட்டும் வேலி கல்லில் செதுக்கப்பட்டுள்ளது காண்க. நாமக்கல் கோவிலில் வளைந்த மூங்கில்களை வைத்து சிறக்கப்பெற்ற தாழ்வாரம் போன்ற அமைப்பை மலையில் குடைந்துள்ளமை காண்க. திருச்சிராப்பள்ளியில் உள்ள கீழ்க் குகைக்கோவிலில் மாவட்டம் போலக் கல் நீட்டிக்கொண்டிருத்தல் காணத்தக்கது’’**[25]

என்பார் ஐயங்கார்.

ஒரே கல்லைச் செதுக்கி விமானம், விமானத்தில் மாடங்கள், கருவறை, தூண்கள், சிற்பங்கள் கொண்டு கோயிலாக்கினார்கள். கோயிலைப் பிற்காலத்தில் ‘ரதம்’ என்று அழைக்கத் தொடங்கினர். இம்மாதிரியான ஒரே கல்லாலான ஒன்பது கோயில்கள் மல்லையிலுள்ளன. ஊருக்குள் வரும்பொழுதே நம்மை இரண்டு ரதங்கள் வரவேற்கின்றன. ஊருக்குப் புறத்தே பிடாரி ரதம், வளையன் குட்டை ரதம் இருக்கின்றன. அக்கோயில்களில் சிலை ஏதுமில்லை பூர்த்தியாகாத நிலையிலிருக்கும் அவை மாமல்லையைக் காவல் புரிகின்றன. ஊருக்குள்ளே ‘பகீரதன் தவம்’ அமைந்துள்ள பாறைக்கருகில் ஒரு ரதம் உள்ளது. அதற்கு கணேசர்ரதம் என்று பெயர். மேற்குத் திக்கு நோக்கியுள்ள இக்கோயிலின்

வேலைப்பாடுகள் நுட்பமாக அமைந்துள்ளது. இரண்டு அடுக்குகளும் குதிரை லாடவடிவமுள்ள மேல் விதானமும், உச்சியில் ஏழு கலசங்களும் வேலாயுத வடிவத்துடன் கூடிய இந்த ரதத்திலுள்ள தூண்களைப் பல சிங்கங்கள் தாங்குகின்றன. இக்கோயிலின் கூடு சந்திரனின் முகங்கொண்டது.

பல்லவர்களின் ரதங்களில் பஞ்சபாண்டவர் ரதம் அல்லது ஐந்து ரதங்கள்தாம் உலகப் புகழ் பெற்றவையாகத் திகழ்கிறது. ஐந்து கோவில்கள் ஒரே வரிசையில் இருத்தல் கண்டு மக்கள் பாண்டவர் தேர்கள் என்று பெயரிட்டனர். பின்னாளில் அப்பெயரே அமைந்துவிட்டது. இந்த ரதங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான அமைப்பை உடைதாயிருக்கிறது. முதலில் நம்மை வரவேற்பது கம்பீரமான ஆறடி உயரத்திலிருக்கும் ஒரே கல்லால் ஆன சிங்கம்தான். சிங்க உருவத்திற்கு அருகே சிங்க வாகனத்துடன் அமைக்கப்படட திரௌபதியின் ரதமானது சிறுகுடிசையின் அமைப்பை ஒத்துள்ளது. அடுத்து விளங்கும் ஒரே கல்லாலான கோயிலை அர்ஜீனன் ரதம் என்கிறார்கள். அர்ஜீனன் ரதமும் திரௌபதி ரதமும் ஒரே மேடையில் அமைந்துள்ளது. மேற்கு நோக்கி அமைந்த தர்மராஜரதக் கோயிலில் மூன்று தளங்கள் உண்டு. ஒவ்வொரு தளங்களிலும் நரசிம்ம பல்லவனின் சிற்பம் உட்பட பல்வேறு சிற்பங்கள் காணப்படுகின்றன. பீமரதக் கோயிலானது நீண்ட சதுரமான அமைப்பைக் கொண்டிருக்கிறது. நீண்ட சதுர வடிவப் பாறைக்கு ஏற்றபடி இக்கோயிலின் விதமானமானது கிடைமட்டமாக நீண்டு காணப்படுகின்றது. சிங்கங்களும் யானைகளும் சுமக்கும்படி இக்கோயிலானது சதுர அமைப்புடைய இரண்டு நிலைமாடக் கோயில் வகையைச் சார்ந்தது. யானையின் பின்பகுதியை ஒத்த அவமானத்தைக் (கஜபிருஷ்டம்) கொண்ட மூன்று நிலை மாடக்கோயிலாக விளக்குகிறது நகுல சகாதேவ இரதம்.

இராசசிம்மன் தரைவழி, மலைவழி, கடல்வழி ஆகிய மூவிடங்களிலும் அழகு வண்ணத்துடன் கலைக்கோயில்களை அமைத்தான். இராசசிம்மன் கட்டிய கோவில்கள் கட்டுமானக் கோவில்களைச் சார்ந்தவையாகும். அவை கற்றளிகள் என்று அழைக்கப்பட்டன.

> **“இராசசிம்மன் காலத்துக் கோவில்கள் அனைத்திலும் கருவறையின் மீது சதுரவடிவ விமானம் அமைப்பது வழக்கமாகக் கொள்ளப் பெற்றது’’[26]**

என்பார் ஜி. சேதுராமன்.

இராசசிம்மன் குடைவரைக் கோயில் கட்டியுள்ளான். நாடகச்சாலை போன்ற அமைப்பில் சாளுவன் குப்பத்தில் புலிக்குகை ஒன்றினையும் தோற்றுவித்துள்ளான். மாமல்லபுரத்துக் கடற்கரை ஆலயமும், ஈஸ்வர ஆலயமும், முகுந்த ஆலயமும், பனமலை என்ற இடத்தில் உள்ள கோயிலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலும், வைகுந்த பெருமாள் கோயிலும் இவன் காலத்தில் கட்டப்பட்டவை. இராசசிம்மனின் புகழ்பாடும் காஞ்சி கைலாசநாதர் கோயில் பேரழகு வாய்ந்தது. இக்கோயில் விமானம் கொண்டு விளங்குவதோடு அதில் பல நுட்பமான வேலைப்பாடுகள் காணப்படுகிறது. இக்கோயில் இராசசிம்மேஸ்வரம் என்று அழைக்கப்பட்டது. இக்கோயில் பல்லவர் காலத்திலேயே கட்டப்பட்ட மிகப்பெரிய கற்கோயிலாகும்.

காஞ்சி முத்தீஸ்வரர் ஆலயம், மதங்கேஸ்வரர் ஆலயம் போன்றவை நந்திவர்மன் காலத்தவை. இரண்டாம் நந்திவர்மன் மனைவி தன் பெயரலால் தர்ம மகாதேவீசுவரம் என்ற அழகிய சிறிய கோயில் ஒன்றைக் கட்டியுள்ளான் என்று கல்வெட்டுச் சான்று மூலமாக அறியமுடிகிறது. செங்கல்பட்டிற்கு அருகிலுள்ள உரகடம் எனுமிடத்திலுள்ள வாடாமல்லீசுவரர் ஆலயம். குடிமக்கள் எனுமிடத்திலுள்ள பரசுராமேசுரம் திருவதிகையில் அமைந்த வீரட்டானேசுவர் கோயில் போன்றவை இக்காலத்தைச் சேர்ந்தவையே. இரண்டாம் நந்திவர்மனை அடுத்து நந்திவர்ம பல்லவன் காலத்ததாகத் திருச்சி ஆலம்பாகத்திலுள்ள கோயிலைக் கூறலாம்.

## பாண்டியர் காலக் கட்டடங்கள்

பாண்டியர்களின் தலைநகரம் மதுரையாகும். பாண்டியர்கள் கலைகளை வளர்ப்பதில் கட்டிடக் கலையிலும் குறிப்பிடத்தகுந்த அளவு பங்காற்றியுள்ளனர். கோயிற் கட்டிட கலையில் கருவறை விமானம், பிரகாரம், கோபுரம் ஆகிய கட்டுமானப் பணிகளில் பாண்டியர்களின் கலைப்பாங்கு தனித்துவம் பெற்றது. பாறைகளைக் குடைந்து குடைவரைக் கோயில்களை உருவாக்குவதிலும் இவர்கள் முத்திரை பதித்துள்ளனர். பாண்டியர்கள் ஐம்பதுக்கும் மேற்பட்ட குடைவரைக் கோயில்களை உருவாக்கியுள்ளனர். மலையடிக் குறிஞ்சிக் குகைக்கோயில் (கி.பி.637) திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. சிறிய மண்டபம் போன்ற எளிய அமைப்புக் கொண்ட இக்கோயிலில் ஒரு கருவறை மட்டும் உள்ளது. ஆனைமலை நரசிம்மர் குகைக்கோயில் (கி.பி.770) நரசிங்கப் பெருமாளுக்கு எழுப்பட்டதாகும். மதுரையை அடுத்துள்ள ஆனைமலை என்னும் மலையின் மேற்குப்பக்க அடிவாரத்தில் இக்குகைக்கோயில் குடையப்பட்டுள்ளது.

## திருப்பரங்குன்றம் குகைக்கோயில்

மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தில் சுப்பிரமணியர் கோயில் என்று இப்பொழுது வழங்கப்படும் கோயில் பாண்டிய அரசன் நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்தில் அவனது சேனாதிபதியான சாத்தன் கணபதியால் தோற்றுவிக்கப்பட்ட மிக அழகியதோர் குடைவரைக் கோயிலாகும். பாண்டியர் குகைக் கோவில்களுக்குள் சிற்ப அமைப்பிலும் செறிவிலும் இது ஈடு இணையற்றது.

மேல்நிலையில் விஷ்ணு, சுப்ரமணியர், துர்க்கை, கணபதி, சிவபிரான் என்னும் ஐவருக்கும் தனிச் சன்னதிகள் இருக்கின்றன. அதற்குக் கீழ்நிலைகளில் ஜேஷ்டாதேவி (சேட்டை), கஜலட்சுமி, தேவி புவனேஸ்வரி போன்ற சிற்பங்களைக் காணலாம். இக்குகைக் கோயிலின் தூண்கள் இரு சதுரங்களும், தரங்க போதிகையும் கொண்டு கனத்த அளவில் அமைந்துள்ளன.

திருப்பரங்குன்றத்தில் மலைக்கு தென்புறம் உமையாண்டார் கோயில் உள்ளது. இது 8ஆம் நூற்றாண்டில் குடையப்பட்ட மண்டபக் கோயிலாகும். கோயிலின் எதிர்புறச் சுவரில் தெற்கு நோக்கி நடராசப் பெருமானும் ஒரு பக்கம் சன்னதியில் அர்த்தநாரீஸ்வரரும் செதுக்கப்பட்டுள்ளன.

திருச்சி மலையடிவாரக் குகைகோயில் திருச்சி மலைக்கோட்டை அடிவாரத்தில் உள்ள குன்றின் கீழ்ப்பகுதியில் தென்மேற்கு மூலையில் காணப்படுகிறது. குகையின் பின்புறச் சுவரில் வரிசையாகக் கணேசர், சுப்ரமணியர், பிரம்மா, சூரியன், துர்க்கை முதலிய உருவங்கள் செதுக்கப்பட்டு உள்ளன. குகையின் இருபக்கச் சுவர்களிலுமுள்ள சன்னதிகளில் ஒரு பக்கம் திருமாலும் மற்றொரு பக்கம் சிவபிரானும் இருக்கின்றனர். அவர்கள் சன்னதிகளும் முன்னே அழகிய தூண்களுடன் கூடவே முகமண்டபமும் துவாரபாலகர்களும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

பாண்டியரின் குடைவரைக் கோவில்களில் கணேசர், துர்க்கை, சூரியன், கார்த்திகேயன், பிரம்மா, ஜேஷ்டா லட்சுமி, சரஸ்வதி போன்ற தெய்வங்களின் சன்னதியமைக்கும் முறை காணப்படுகிறது. இம்முறை பாண்டியர் நாட்டில் வெகுவாக ஆதரிக்கப்பட்டது. இந்து மதத்திலுள்ள பல தெய்வ மாறுபாடுகளையும் ஒன்றுசேர்த்து சமரச நிலையை அவர்கள் ஏற்றனர் என்பது விளங்குகிறது.

பாண்டியர்கள் பல குடைவரைக் கோயில்களை எழுப்பினர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை திருச்செந்தூரிலுள்ள வள்ளிக் குகைக் கோயில். கழுகுமலையிலுள்ள முருகன் குடைவரைக் கோயில், திருமெய்யத்திலுள்ள சத்தியகிரீஸ்வரர் கோயில். மேலும் குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, சீவலப்பேரி, திருமலப்புரம், மூவரை வென்றான். அரிட்டாபட்டி, சேந்தமாரம், திருக்கோலக்குடி, சொக்காம்பட்டி போன்ற இடங்களில் குகைக்கோவில்கள் உள்ளன.

## கட்டுமானக் கோவில்கள்

கட்டுமானக்கோவில் வழக்கில் வந்த பிறகு குடைவரைக் கோவில்கள் குறையத் தொடங்கின. இதனை,

> **“பல்லவர்களுக்கு எளிதாகக் கிடைத்த மென்மையான மணற்கற்கள் பாண்டியர்களுக்குக் கிடைக்காத காரணத்தால் குகைக் கோவில்களே தொடர்ந்து அதிக காலம் பழக்கத்தில் இருந்ததாகவும், கட்டுமானக் கற்கோவில்களைக் கட்டடக்கூடிய சாத்தியக் கூறுகள் இல்லாமையால் சோழநாட்டைப்போலவே செங்கற் கோவில்கள் அதிகமாகப் பழக்கத்தில் இருந்து வந்துள்ளது’’[27]**

என கே.வி. சவுந்தரராசன் குறிப்பிடுகிறார். ஒன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்து கட்டுமானக் கோவில்கள் பரவலாகப் பாண்டியர் நாட்டில் தோன்றலாயின. அவற்றில் பின்வரும் கோவில்கள் குறிப்பிடத்தக்கவை.

1. ஏனாதி – சிவன் கோவில்
2. கோவில் பட்டி – பூவணநாதஸ்வாமி கோவில்
3. மதுரை – கூடல் அழகர் கோவில்
4. திருவாலீஸ்வரம் – வாலீஸ்வரர் கோவில்
5. உக்கிரன் கோட்டை – வடவாயில் அமர்ந்தான் கோவில், சொக்கலிங்கேஸ்வரர் கோவில்
6. ஸ்ரீவில்லிபுத்தூர் – வடபத்ரசாயி கோவில்
7. சின்னமனூர் – லஷ்மி நாராயணர் கோவில்
8. கோட்டை கருங்குளம் – இராசசிம்மேஸ்வரர் கோவில்

9. குற்றாலம் – குற்றாலநாதர் கோவில்

10. உத்தரகோசமங்கை – உமா மகேஸ்வரர் கோவில்

11. பெருங்குளம் – திருவழுதீசுவரர் கோவில்

12. திக்கோட்டியூர் – சௌம்ய நாராயணப் பெருமாள் கோவில்

மேலே குறிப்பிட்ட கோவில்கள் முதற் பாண்டியப் பேரரசு காலத்தில் தோன்றியன.

இடைக்காலப் பாண்டியர்களும் பிற்காலப் பாண்டியர்களும் புதிதாகக் கோவில்களைக் கட்டவில்லை. மாறாகப் புதிய கோபுரங்கள் எழுப்புவது. பிரகார வீதிகள் அமைப்பது, மண்டபங்கள் கட்டுவது ஆகிய விரிவாக்கப் பணிகளில் ஈடுபட்டனர்.

## சோழர்காலக் கட்டடக்கலை

கிபி. 850இல் விஜயாலய சோழன் தஞ்சாவூரை முத்தரையர்களிடமிருந்து கைப்பற்றி சோழப் பேரரசை நிறுவினான். இவனால் நிறுவப்பட்ட இப்பேரரசு 13ஆம் நூற்றாண்டு வரை நிலைப்பெற்றது. வடக்கில் கங்கையையும் தெற்கில் இலங்கையையும் வென்ற சோழர்கள் தென் கிழக்காசியாவில் கடாரத்தையும் வென்று கடல்கடந்த நாடுகளிலெல்லாம் செல்வாக்குச் செலுத்தலாயினர். ஆட்சிச் சிறப்பாலும், கடல் கடந்த வாணிபத்தாலும் ஈட்டிய பெரும்பொருள் கொண்டு கோயில் திருப்பணிகளைச் செய்து சோழர்கள் பெரும் புகழடைந்தனர்.

> **“பல்லவர்களுக்குப் பிறகு சோழப் பேரரசு 430 ஆண்டுகள் நிலைத்திருந்தது. இந்த நீண்ட கால கட்டத்தில் கட்டடக்கலை சிறப்புடன் வளர்ந்தது. இவற்றின் வளர்ச்சியை ஆட்சியின் அடிப்படையில் பிரிக்கின்றனர். விஜயாலயன் காலம் முதல் உத்தம சோழன் காலம் வரை (கி.பி. 850–985) முற்காலச் சோழர் கலைப்பணி என்றும், முதலாம் இராசராசன் காலம் முதல் அதிராசேந்திரன் காலம் வரை (கி.பி.985–1070) இடைக்காலர் சோழர் கலைப்பணி என்றும், முதலாம் குலோத்துங்கன் காலம் முதல் மூன்றாம் இராசேந்திரன் காலம் வரை (கி.பி.1070–1270) உள்ள பகுதியைப் பிற்காலச் சோழர் கலைப்பணி என்றும் கொள்வர்”[28]**

என சு.ஆர். பாலசுப்பிரமணியம் குறிப்பிட்டுள்ளார்.

ஆரம்பகாலத்தில் சோழர்கள் பல்லவமன்னர்கள் கையாண்ட கட்டட மரபையே பின்பற்றிக் கட்டங்களை அமைத்தனர். நார்த்தா மலையில் உள்ள விஜயாலயன் கோயில், திருக்கட்டளை என்னும் சுந்தரேஸ்வரர் கோயில் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியல் கட்டப்பட்டதால் அவையே சோழர்காலக் கட்டடங்களில் காலத்தால் முந்தியவை. பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஸ்ரீனிவாச நல்லூரிலுள்ள குரங்கநாதர் கோயில் கட்டப்பட்டதாக கருதப்படுகிறது. இன்று நிலைத்திருக்கும் ஆரம்ப சோழர் காலக் கோயில்கள் அனைத்தும் முழுமையாகக் கருங்கற்களினால் ஆனவை. இவற்றிலே முந்தைய பல்லவர் காலக் கோயில்களின் அம்சங்கள் காணப்பட்டாலும் அவற்றைவிட இச்சோழர் காலக் கோயில்கள் திருத்தமாகக் கட்டப்பட்டுள்ளன. இதனை,

> **“சோழர்காலக் கலைஞர்கள் கல்லினும் வெண்கலத்தினும் தங்களுடைய கை வண்ணத்தைக் காட்டினர். பல்லவர் கலையைத் தொடர்ந்த போதிலும் தனித்தன்மையைச் சோழர்காலக் கலைகள் காட்டுகின்றன. இவை வேற்றுமையுடன் விளங்குகின்றன. பல்லவர்களைப் போன்று அவர் முழுவதும் சிற்பங்களால் நிறைக்கவில்லை. மாறாகக் கோயிற் சுவர்களின் வெளியிடங்களில் இட்டு அழகு கண்டனர்’’[29]**

என்பார் வீ.ரேவதி.

விஜயாலய சோழனின் மகனான ஆதித்த சோழன் காவிரியின் இரு கரையிலும் நூற்றுக்கும் மேற்பட்ட சிவன் கோயிலைக் கட்டியதாக அன்பில் செப்பேடு குறிப்பிடுகிறது. இவர் காலத்தில்தான் பல செங்கற்றாளிகள் கற்றளிகளாக மாற்றி அமைக்கப்பட்டன. திருவண்ணாமலையில் உள்ள அண்ணாமலையார் கருவறை இவர் காலத்தில் புதிப்பிக்கப்பட்டுள்ளது. தொண்டைமன்னூர் அருகே கோதண்ட ராமேசுவரர் கோயிலைக் கட்டினான். கோதண்டராமேசுரர் கோயில் செவ்வக வடிவச் சுற்றுச் சுவர் கழை அகன்ற பிரகாரங்களுடன் காணப்படுகிறது. மூன்று நிலைகளுடன் கூடிய இராஜகோபுரம், பலிபீடம், நந்தி மண்டபம் எல்லாம் ஒரே நேர்கோட்டில் அமைந்துள்ளது. அதை உருவங்கள் விமானத்தை அலங்கரிக்கின்றன. மூலவரின் விமானம் அளவில் சிறியதாகவும் சதுரவடிவிலும் அமைந்துள்ள கருவறையையும், அர்த்த மண்டபத்தையும் பெற்றுள்ளது. உபானம் முதல் பிரஸ்தரம் வரையிலான உறுப்புகள் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளன.

காளஹஸ்திக்கு அருகில் தொண்டை மாநாடு என்னுமிடத்தில் பராந்தகனின் தந்தையாகிய ஆதித்த சோழன் இறந்ததால் அவ்விடத்தில் தந்தைக்குப் பள்ளிப்படையை அமைத்தான். புள்ளமங்கையில் பசுபதி கோயில் கட்டினான். இக்கோயில் 'பிரமபுரீஸ்வரர்' கோயில் என்றும் திருவாலந்துரை மகாதேவர் கோயில் என்றும் அழைக்கப்பட்டது. சிதம்பரத்தில் உள்ள நடராஜர் ஆலயத்திற்குப் பொன்னால் கூரை வேய்ந்தார். எனவே 'பொன் வேய்ந்த சோழன்' என்று அழைக்கப்பட்டார். ஆதித்த சோழன் கட்டாது விட்ட பல கோயில்கள் இவன் காலத்தில் முற்றுப் பெற்றன.

செம்பியன் மாதேவி சோழர் பேரரசர் கண்டராதித்யானாரை மணந்தார். கணவரைப் போலவே செம்பியன் மாதேவியும் சிவத்தொண்டர். முதலாம் பராந்தகச்சோழன், கண்டராதித்த சோழன், அரிஞ்சயசோழன், சுந்தரசோழன், உத்தம சோழன், ராசராசசோழன் முதலிய ஆறு சோழப் பேரரசர்களின் வழிகாட்டியாக இருந்தவர் செம்பியன் மாதேவியார். கி.பி. ஏழாம் நூற்றாண்டிலும் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலும் சோழப் பேரரசுகளினால் மண்ணாலும் செங்கற்களாலும் கட்டப்பட்ட சிவ கோயிலாக இருந்த திருநல்லம், திருமுதுகுன்றம், திருவாரூர் அறநெறி, திருமணஞ்சேரி, தென்குரங்காடுதுறை, திருக்கோடிக்காவல், ஆதாங்கூர், குற்றாலம், திருவக்கரை, திருச்சேலூர் முதலிய பத்து கோயில்களைக் கற்றளியாக மாற்றினார். புதிதாக இவர் கட்டிய கோயில் செம்பியன் மாதேவியில் இருக்கும் ஸ்ரீகைலாசநாதர் திருக்கோயிலாகும். பல சிவன் கோயிலுக்குப் பொன்னும் பொருளும் கொடுத்துள்ளார். சோழர் கால கோயில்கள் இன்றளவும் நிலைத்திருக்க செம்பியன் மாதேவியாரின் கற்றளி மாற்றமே காரணமாக உள்ளது.

இக்கோயில் கோபுரம் தரைத்தளத்திலிருந்து 216அடி உயரம் உடையது. இக்கோயில் கோபுரம் கர்ப்பக் கிரகத்திலிருந்து 190 அடி உயரத்திற்கு அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கோயில் கோபுரத்தின் உச்சியில் உள்ள பிரம்ம மந்திரக்கல் என்னும் ஒரே கல்லிலான வட்ட வடிவமான கல் சுமார் 80டன் அளவுடையது. இக்கோயிலின் மூலவரான பிருகதீசுவரர் (பெருவுடையார்) லிங்க வடிவில் காட்சி அளிக்கிறார். இந்த லிங்கத்தின் உயரம் 13 அடி ஆவுடை எனும் லிங்கத்தின் கீழ்ப்பகுதியான வட்ட வடிவமான பகுதியின் சுற்றளவு 54 அடியாக திருசுற்று மாளிகையில் எட்டு திக்குப்பாலர்க்கும் கோவில் கட்டப்பட்டுள்ளது. இத்திருச்சுற்று மாளிகையின் வழியே உள்ளே சென்றால் நாயக்கர் கால மண்டபத்துள்ளே இருக்கும் எழிலான நந்தியைக் காணலாம். இம்மண்டபத்தின் இரு தூண்களில் நாயக்க மன்னர் இருவரின் உருவச்சிலைகள் காணப்படுகின்றன. பெருவுடையாருக்கேற்ற பெருநந்தி

ஒரே கல்லால் ஆக்கப்பெற்றது. பத்தொன்பது அடி நீளமும் பன்னிரண்டு அடி உயரமும் உடையதாகக் காணப்படுகிறது. இந்நந்தி பிற்காலத்தில் அமைக்கப்பெற்றது. சோழர் காலத்தில் அமைக்கப்பெற்ற நந்தி தற்பொழுது திருச்சுற்று மாளிகையில் உள்ளது.

முதலாம் இராஜேந்திர சோழன் கங்கை வரை படையெடுத்துச் சென்று வெற்றியடைந்தார். இவ்வெற்றியின் நினைவாக கங்கை கொண்ட சோழபுரம் எனும் தலைநகரை உருவாக்கினார். அத்தலைநகரில் கங்கை கொண்ட சோழீச்சுவரர் கோயிலை எடுப்பித்தார். அந்நகருக்கருகே சோழகங்கம் எனும் மிகப்பெரிய ஏரியை உருவாக்கினார். இங்கு கட்டப்பட்ட அரண்மனை முடிகொண்ட சோழன் திருமாளிகை என்று அழைக்கப்பட்டது.

கங்கை கொண்ட சோழபுரக் கோயிலின் விமானம் கீழே சதுரமாகவும் அதன் மேல் எண்பட்டை வடிவிலும் உச்சி வட்ட வடிவிலும் அமைக்கப்பட்டு சிவலிங்க வடிவில் காட்சி தருகிறது. தஞ்சை விமானத்தைப் போன்று அல்லாமல் இக்கோயில் விமானம் சற்றே உட்புறமாக வளைந்து பெண்மயிலின் நளினத்தைப் போன்று காட்சியளிக்கிறது. கோவிலின் வடக்கிலும் தெற்கிலும் இரு கோயில்கள் அமைந்துள்ளன. அவை வடகயிலாயம் தென்கயிலாயம் எனப்படுகிறது. இக்கோயில் சுமார் நூறு அடி சதுரமான அடித்தளத்தைக் கொண்டுள்ளது. பெரிய உபபீடமானது கருவறை மற்றும் அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகிய பகுதிகளைத் தாங்குகிறது. உபபீடம் முதல் கவசம் வரையிலான விமானப்பகுதி ஒன்பது தளங்களுடனும் **186**அடி உயரமுடையதாகவும் விளங்குகிறது. கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம் மூன்று தளங்களைக் கொண்டதாக உள்ளது. மகா மண்டபத்தின் முன் இருபுறமும் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. மகாமண்டபம் **150** தூண்களைக் கொண்டுள்ளது. தினமும் பகலில் இந்த நந்தியின் மீது சூரியஒளி பட்டு கருவறையில் உள்ள லிங்கத்தின் மீது பிரதிபலிக்கிறது. கோபுர கலசத்தின் நிழல் கீழே விழுவது கிடையாது. லிங்கத்தின் அடியில் சந்திரகாந்தகல் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இக்கல்லின் சிறப்பு வெயில் காலத்தில் குளிர்ச்சியையும் குளிர் காலத்தில் வெப்பத்தையும் தரவல்லது.

## முகலாய கட்டடங்கள்

முகலாயப் பேரரசை நிறுவியவர் பாபர். இப்பேரரசு **1526** இல் பானிப்பட் போரில் இப்ராகிம் லோடியைப் பாபர் தோற்கடித்தபின் நிறுவப்பட்டது. இவ்வாறு இந்தியாவில் ஒரு புதிய சகாப்தம், ஒரு புதிய பேரரசு தொடங்கி **1526** முதல் **1857** வரை நீடித்தது. முகலாய

வம்சத்தைச் சேர்ந்த ஆறு முக்கிய அரசர்களாகப் பாபர், ஹீமாயூன், அக்பர், ஜஹாங்கீர், ஷாஜகான், ஔரங்கசீப் ஆகியோர் இந்திய வரலாற்றில் தங்கள் தடங்களைப் பதித்தனர்.

முகலாயர் காலத்தில் கட்டக் கலையில் ஏற்பட்ட மகத்தான வளர்ச்சி இந்தியக் கலையில் குறிப்பிடத் தக்கதாகும். கூண்டு வடிவிலான குமிழ்களைக் கொண்ட கவிகை மாடங்களாலும் நான்கு மூலைகளிலும் எழுப்பப்பட்டுள்ள ஸ்தூபி மாடங்களாலும் படங்கள் வரையப்பட்டு பதிக்கப்பட்ட ஓடுகளாலும் அலங்கரிக்கப்பட்ட பெரிய வடிவங்களுக்கு முகலாயக் கட்டடங்கள் பெயர் பெற்றவையாகும்.

பாபர் இப்ராகிம் லோடியை வென்றார். அவ்வெற்றியின் அடையாளமாகப் பானிப்பட்டில் காபூலிபாக் என்னுமிடத்தில் ஒரு மசூதியைக் கட்டினான். இதே காலப் பகுதியில் டிஸ்ட் மொராபாத் என்னும் இடத்தில் உள்ள சம்பாலில் இன்னொரு மசூதியும் கட்டப்பட்டது.

உமாயூனின் மனைவி அமிதா பேகம் தன் அன்புக் கணவருக்காகக் கல்லறை மாடத்தைக் கட்டினாள். 35 ஏக்கர் பரப்பளவிலான தோட்டம் ஒன்றில் இந்தச் சமாதி வீற்றிருக்கிறதுஇதனை வடிவமைத்தவர் மிராக் மிர்சா கியாத் என்னும் பாரசீகக் கட்டடக் கலைஞர்.இவ்வளவு பெரிய கட்டிடத்திற்கு முதல் முறையாகச் சிவப்பு மணற்கற்களைப் பயன்படுத்தியுள்ளனர். பாரசீக பாணியிலான இரட்டை குவிமாட அமைப்பைக் கொண்ட முதல் இந்திய கட்டடம் இதுவாகும்.

அக்பர் பதேப்பூர் சிக்ரியைக் குஜராத் வெற்றின் நினைவாகக் கட்டினார். பதேபூர் சிக்ரி கோட்டைகளால் சூழப்பட்ட எழுச்சியூட்டும் பல கட்டடங்களைக் கொண்டுள்ளது. பதேப்பூர் சுக்ரியின் மலைப்பூட்டும் வாயிற்பகுதி புலந்தார்வாசா என்ற நுழைவு வாயில் மிகச் சிறந்த ஒன்றாகும். அக்பர் அக்பரி மஹால், காங்கிரி மஹால், பஞ்ச மஹால், ஜோதபாய் அரண்மனை போன்றவைகளை அழகுற சிவப்பு பளிங்குக் கற்களால் கட்டிமுடித்தார்.

ஜஹாங்கீர் நூர்ஜகானின் தந்தையான இத்திமாத் உத் தௌலாவுக்காக எழுப்பிய கல்லறை முழுவதும் வெள்ளை நிறப் பளிங்குக் கற்களால் கட்டினார். முகலாயர் கட்டிய முதல் வெள்ளை நிறப் பளிங்குக் கட்டடமாகும். இக்கல்லறையின் மேற்பரப்பு முழுவதும் கல்லிழைப்பு (Pietra dura) வேலைப்பாடுகளினால் மூடப்பட்டுள்ளது. காசுமீரின் தால் ஏரிக் கரையில்

சாலிமார் பூங்காவும் மண்டபங்களையும் கட்டினார். இவர் இறந்த பின்பு மனைவி இவருக்கு லாகூரில் கல்லறையைக் கட்டியுள்ளார்.

ஷாஜகான் காலத்தில் முகலாயக் கட்டடக்கலை அதன் சிகரத்தை எட்டியது. ஷாஜகான் தனது மனைவி மும்தாஜீக்கு அழியாப் புகழை அளிப்பதற்காகத் தாஜ்மஹாலைக் கட்டினார். தாஜ்மஹால் முகலாயக் கட்டடக் கலையின் சிறப்புமிக்க வடிவமாகும். அது இந்திய பாரசீக இஸ்லாமியர் கட்டடக் கலையின் கூட்டு கலவையாகும். தாஜ்மஹால் தளத்தின் மீது கட்டப்பட்டதாகும். மையத்தின் இவ்வளாகம் தலைவாயிலுக்கு மேல் குமிழ் வடிவக் கவிகை மாடத்தையும் அதைச் சுற்றி நான்கு ஸ்தூபி மாடங்களையும் நான்கு மூலைகளிலும் நான்கு தனித்தனியான கோபுரங்களையும் கொண்டு அமைந்த இந்நினைவிடம் உலகப் புகழ் பெற்றுள்ளது.

ஷாஜகான் 'ஷாஜஹானாபாத்' என்ற புதிய தலைநகரை உருவாக்கினார். டில்லியில் கண்ணைக் கவரக்கூடிய செங்கோட்டையை உருவாக்கினார். அகபோட்டையிலுள்ள அழகான ரங்மகால், மோதி மகால், முத்து மகால், திவான்–இ–அம், திவான்–இ–கான் ஆகிய பிரமிப்பூட்டும் மாளிகைகளைக் கட்டினார்.

ஷாஜகான் புகழ்மிக்க பெருமை வாய்ந்த 'ஜம்மா மசூதியை' வெள்ளை பளிங்கு கற்களால் கட்டினார். இது உலகிலேயே மிகப்பெரிய பள்ளிவாசல்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இப்பேரரசர் ஆக்ராவில் மூத்த மசூதி என்று அழைக்கப்படுகின்ற மோதி பள்ளிவாசலைக் கட்டிமுடித்தார். ஜஹாங்கீரின் கல்லறையையும் அழகு மிளிரக் கட்டி முடித்தார்.

ஔரங்கசீப் காலத்தில் லாஜரில் பாதுஷா ஆகி மசூதி கட்டப்பட்டது. மாடங்களையும் நான்கு மூலைகளிலும் நான்கு தனித்தனியான கோபுரங்களையும் (மினார்) கொண்டு அமைந்த இந்நினைவிடம் உலகப்புகழ் பெற்றுள்ளது. திவானி ஆம், திவானி தாஸ், மோதி மஹால், ஹீரமஹால் போன்ற பிரமிப்பூட்டும் கட்டடங்களால் சூழப்பட்டுள்ள செங்கோட்டை ஷாஜகான் காலத்துக் கட்டடக்கலைத் திறன்களைப் பிரதிபலிக்கின்றன. ஆக்ரா கோட்டையிலிருக்கும் மோதி மசூதி முழுவதும் பளிங்குக் கற்களாலானது, தில்லியிலுள்ள கம்பீரமான வாயிற் பகுதியில் வரிசையான கவிதை மாடங்கள், உயரமான மெலிதான கோபுரங்கள் (மினார்) ஆகியவற்றைக் கொண்டுள்ள ஜீம்மா மசூதி ஆகியன ஷாஜகானால் கட்டப்பட்ட முக்கிய மசூதிகளாகும். ஷாஜகான், ஷாஜகானாபாத் என்ற பெயரில் ஒரு

நகரத்தையே (இன்றைய பழைய தில்லி) உருவாக்கினார்.இங்குதான் செங்கோட்டையும் ஜீம்மா மசூதியும் அமைந்துள்ளன. ஔரங்கசீப் காலத்தில் லாகூரில் பாதுஷாகி மசூதி கட்டப்பட்டது. மேலும் ஔரங்காபாத்தில் ரபீயா உத் தௌராணியின் பளிங்கிலான கல்லறையும் கட்டப்பட்டது. இக்கல்லறை பீபிமக்பாரா (பெண்ணின் கல்லறை) என்றழைக்கப்பட்டது.

ஜஹாங்கீர், ஷாகான் ஆகியோர் உருவாக்கிய ஷாலிமர் தோட்டங்கள் இந்தியத் தோட்டக் கலையில் குறிப்பிடத்தக்கவை ஆகும். மிகப் பெரும் கட்டிடங்களைத் தவிர பொதுப் பயன்பாட்டிற்காகவும் பல கட்டுமானப் பணிகளை முகலாயர் மேற்கொண்டனர். அவற்றுள் மகத்தானது ஜான்பூரில் கோமதி ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ளப் பாலமாகும். முகலாயரின் மிகவும் போற்றத்தக்கச் சாதனை தில்லிக்கு நீர் கொண்டு வரும் மேற்கு யமுனா கால்வாயைக் கட்டியதாகும்.

முகலாயக் கட்டடக்கலை நாட்டின் பல்வேறு பகுதிகளில் கோவில் கட்டுமானங்களின் மீதும் செல்வாக்குச் செலுத்தியது. மதுராவுக்கு அருகே பிருந்தாவனத்தில் உள்ள கோவிந்தேவ் கோவிலிலும், மத்தியப்பிரதேசம் ஓரிசாவிற்கு அருகேயுள்ள சதுர்டிஜ் என்னும் இடத்திலுள்ள பீர்சிங் கோவிலிலும் முகலாயக் கட்டிடக்கலையின் தாக்கத்தைக் காணலாம்.

## நாயக்கர் காலக் கட்டடக்கலைகள்

இஸ்லாமிய சுல்தான் ஆட்சியின் பிடியிலிருந்து மீட்கப்பட்ட பகுதிகள் விஜயநகர ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டன. மதுரை, ஸ்ரீரங்கம், திருவாரூர், ராமேஸ்வரம், சிதம்பரம், திருநெல்வேலி, திருவண்ணாமலை மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இடங்களில் இருந்த கோவில்கள் பழுது பார்க்கப்பட்டுப் புதுப்பிக்கப்பட்டன. மேலும் சில கோவில்களில் கோபுரங்கள், பிரகாரங்கள், நுழைவாயில்கள், நடைபாதைகள், மண்டபங்கள் போன்றவைகள் கட்டப்பட்டு விரிவுபடுத்தப்பட்டன. காஞ்சிபுரம், கும்பகோணம், வேலூர் ஆகிய இடங்களில் புதிய கோவில்கள் கட்டப்பட்டன. தூண்களில் சிற்பங்கள் வடிக்கப்பட்டன.

விஜய நகர மன்னர்கள் காலத்தில் தமிழ்நாட்டில் கலை, கட்டிடக்கலையில் புதிய முறை அறிமுகப்படுத்தப்பட்டது. திராவிடக் கட்டடக் கலையும், இந்தோ – சரசானிக் கட்டடக் கலையும் விஜயநகர மன்னர்கள் காலத்தில் சிறப்புற்று விளங்கின. பல்லவ சோழர் காலத்தில் விமானம் உயரமாகவும், கோபுரம் உயரமற்றதாகவும் காணப்பட்டது. இரண்டாம் இராஜராஜன்

மற்றும் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில்தான் உயரமான அளவில் கோபுரங்கள் எழுப்பப்பட்டன. இந்நிலை பாண்டியர் காலத்தில் தொடர்ந்ததோடு விசயநகர நாயக்கர் காலத்தில் வானளவிய கோபுரங்கள் உருவாவதற்குக் காரணமாய் அமைந்தன. நாயக்கர் காலக் கோவில்களின் அடிப்பகுதி பெரிதாகவும், மேற்பகுதி சற்று குறுகியும் காணப்பட்டது. ஸ்ரீ வில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில் கோபுரம் மதுரை நாயக்கர் படைப்பாகும். இது பதினொரு நிலைகளைப் பெற்றுள்ளது. கிருஷ்ண தேவராயர் திருநெல்வேலியில் கிருஷ்ணாபுரத்தில் திருவேங்கடநாதன் கோவிலைக் கட்டினார். பல உயர்ந்த கோபுரங்களைக் கட்டினார்.

இவர்களது காலத்தில் கட்டப்பட்ட கோபுரங்கள் முதல்தளம் அல்லது இரண்டாம் தளம் வரை கல்லினாலும் அதன்மேல் செங்கலாலும் கட்டப்பட்டன. இக்கோபுரங்கள் மேலெல்லையாகப் பதினோரு அடுக்குகளைக் கொண்டுள்ளன. விழாக்களில் பெரும்பான்மையான விழாக்கள் கோயில்களோடு தொடர்புடையதாக இருந்தமையால் விழாக்கள் கோயில்களில் கொண்டாடப்பட்டன. விழாக்களில் வருகையினால் கோயில்களில் புதிய மண்டபங்கள் தேவைப்பட்டன. அதன் காரணமாக புதிய மண்டபங்கள் உருவாக்கப்பட்டன.

விசயநகர நாயக்கர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட மண்டபங்களில் குறிப்பிடத்தக்கவை கல்யாண மண்டபம் நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், வசந்த மண்டபம், ஊஞ்சல் மண்டபம், கிளி மண்டபம், நீராளி மண்டபம் ஆகியனவாகும். வைணவக் கோயில்களில் இராப்பத்து மண்டபம், பகற்பத்து மண்டபம் எனப்பல மண்டபங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இத்தகு மண்டபங்கள் திறந்த வெளித்தூண் மண்டபங்களாகவும் மூடிய அமைப்புடைய மண்டபங்களாகவும் விளங்கின.

இறைவன் இறைவியரது திருமணங்களை ஆண்டுக்கு ஒருமுறை நிகழ்த்துவதற்கென திருமண மண்டபங்கள் விசயநகர நாயக்கரது காலத்தில் அதிக அளவில் கட்டப்பட்டன. இத்தகு மண்டபங்கள் பெரும்பாலான கோயில்களில் தூண்களுடன் கூடிய திறந்தவெளி மண்டபங்களாக அமைந்துள்ளன.

நீண்ட செவ்வக அமைப்புடைய திருமண மண்டபங்களின் இருபுறமும் தூண்கள் வரிசையாக இடம்பெறும். மண்டபத்தின் கடைசியில் விழாக்காலங்களில் உற்சவத்

திருமேனிகளை எழுந்தருளச் செய்வித்து விழாச் சடங்குகளை முழுமையாகச் செய்வதற்கேற்ப குறடு எனும் மேடை அமைப்பு காணப்படும்.

சோழர்களது காலத்திலேயே நூற்றுக்கால் மண்டபங்கள் தொடங்கப்பட்டாலும் விசயநகர நாயக்க மன்னர்களது ஆட்சிக்காலத்தில்தான் இத்தகு மண்டபங்கள் அதிக அளவில் நிறுவப்பட்டுள்ளன. இவை பெரும்பான்மையாக அவ்வக்கோயில்களின் ஈசான மூலையில் அமைந்துள்ளன. இவை பொதுவாக விழாக் காலங்களின் போது பயன்படுத்தும் நோக்குடனே நிறுவப்பட்டுள்ளன. மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ளது நூற்றுக்கால் மண்டபம் ஆகும்.

ஆயிரங்கால் மண்டபம் என்ற பெயரினைப் பெற்றிருந்தாலும் இதில் 985 தூண்கள் மட்டுமே உள்ளது. இந்த மண்டபத்தில் நாம் எந்த இடத்தில் நின்று பார்த்தாலும் தூண்கள் ஒரே வரிசையில் தான் தெரியும். ஒரு தூண் மற்றொரு தூணை மறைக்காது. இந்த மண்டபத்தின் நடுவில் நிற்பவர்களைக் கூட நம்மால் காணமுடியும். தூண்கள் அனைத்தும் 12 அடியைத் தொடும். இங்கு உள்ள வர்ணம் தீட்டப்படாத தூண்களும், வரிசையாக அமைந்துள்ள கட்டமைப்புகளும், மண்டபத்தைச் சுற்றி அமைக்கப்பட்ட காற்று துவாரங்கள் இவைகள் அனைத்தும் ஒளியைக் கட்டுப்பாடாக வைத்துக்கொள்ள உபயோகப்படுத்தப்பட்ட யுத்திகளாக இருக்கின்றன.

ஆயிரங்கால் மண்டபத்தில் இசைத் தூண்களும் உள்ளன. இந்தத் தூண்கள் அனைத்தும் ஒரே கல்லின் இருந்து உடைத்து எடுக்கப்பட்டுச் செதுக்கப்பட்டவை. இந்தத் தூண்களை நாம் தட்டும்பொழுது ஒவ்வொரு தூண்களும் ஒவ்வொரு ஒலியை எழுப்புகிறது. விஜயநகர கட்டடக்கலைக்குச் சிறந்த உதாரணங்களாக விளங்குகின்றன. விஜயநகர மன்னர்கள் வேலூர் கோட்டையின் உட்புறம் புகழ்பெற்ற கோயிலைக் கட்டினார்கள். கோயில் வளாகத்தில் கல்யாணமண்டபமும் இணைக்கப்பட்டுள்ள அமைப்புமுறை வேலூர்க்கோயிலின் சிறப்பு அம்சமாகும். விஜயநகர மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்ட மதுரை அரண்மனை இந்தோ–சரசானிக் கட்டடக்கலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. கிருஷ்ணதேவராயர் சிதம்பரகோவிலின் வடபகுதி கோபுரத்தின் ஒரு பகுதியினையும் கட்டியுள்ளார்.

வேலூர், கும்பகோணம், ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் புதிய கோயில்கள் கட்டப்பட்டன. விஜயநகர மன்னர்கள் பின்பற்றிய கடைசி கட்டடக்கலை முறை மதுரை

கட்டடக்கலை முறையாகும். இவர்கள் காலத்தில் அமைக்கப்பட்ட வெண்கலச்சிலைகள் சிறப்பு வாய்ந்தவை.

## பிரகாரங்கள்

விசயநகர நாயக்கர் காலத்தில் கருவறை, அர்த்த மண்டபம் ஆகியவற்றைச் சுற்றி அல்லது கருவறை, அர்த்த மண்டபம் மகாமண்டபம் ஆகியவற்றைச் சுற்றி பிரகாரம் அமைக்கும் வழக்கம் காணப்பட்டது. இப்பிரகாரம் ஒருபக்கம் சுவர் கொண்டும் மறுபக்கம் அடைக்கப்படாது தூண்களுடன் கூடியதாகவும் அமையும். பின்னர் அரசர்கள் ஒவ்வொருவரும் தமது ஆட்சிக்காலத்தில் குறிப்பிட்ட அக்கோயிலில் பிரகாரம் அமைக்க விரும்பியதால் பல பிரகாரங்கள் தோன்றின.

திருவரங்கம் அரங்கநாதர் கோயில் உள்ளே பல பிரகாரங்கள் கொண்டிருப்பினும் கோயிலைச் சுற்றி ஏழு பிரகாரங்கள் குடியிருப்புக்களோடு அமைந்துள்ளன. இங்கு இவ்வேழு பிரகாரங்கள் திருவிழாக்களுக்காக மட்டுமன்றி காவிரியில் ஏற்படும் வெள்ளப் பெருக்கிலிருந்து கோயிலைக் காக்கவே அமைக்கப்பட்டுள்ளன. நாயக்கரது ஆட்சியின் கட்டடப்பட்ட பிரகாரங்கள் பல கோயில்களில் குறிப்பாக வைணவக் கோயில்களில் மார்கழி மாதத்தில் இராப்பத்து, பகற்பத்து விழாக்கள் நடக்கும் களங்களாகப் பயன்படுகின்றன.

தமிழகத்திலேயே மிகப் பெரிய திருச்சுற்றைக் கொண்ட பிரகாரம் இராமேசுவரம் இராமநாதசுவாமி கோயிலில் இடம் பெற்றுள்ள பிரகாரமாகும். நாயக்க மன்னர்களால் ஏற்கனவே கட்டப்பட்டிருந்த கோயில்களில் மேற்கண்டபடி பிரகாரங்கள், மண்டபங்கள், கோபுரங்கள், அம்மன் சன்னதிகள் முதலியவற்றைக் கட்டி வளாகங்களை விரிவுபடுத்தியதோடு மட்டுமல்லாமல் ஏற்கனவே அவர்களுக்கு முந்தைய ஆட்சியாளர்களான சோழர் மற்றும் பாண்டியர்களால் கட்டப்பட்டு அக்கோயில்கள் இடிபாடு அடைந்த நிலையில் அவைகளைப் புதுப்பிக்கவும் செய்தனர்.

## தொகுப்புரை

- மனிதனைப் பண்பட்டவனாக மாற்றி உயர்வடையச் செய்வது கலை என்ற உண்மையினை அறியமுடிகிறது. கலையானது மனிதனின் உள்ளத்தின் உணர்வுப்

பெருக்கேயாகும். ஆயக்கலைகள் அறுபத்துநான்கு என்று பிரிக்கப்பெற்றாலும் பின்னாளில் அவை பல்கிப் பெருகிவிட்டன. அழகுணர்ச்சியின் வெளிப்பாடாக அமைந்த கலைகளை நுண்கலைகள் என்றும் வழங்கினர். நுண்கலைகளுள் இசைக்கலை காதால் கேட்டு மகிழக்கூடியது. கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவை கண்ணால் கண்டு இன்புறத்தக்கன.

- சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் நகரத்தில் வாழ்ந்தனர். நகர வீதிகள் அகலமாகவும் நேராகவும் அமைக்கப்பட்டிருந்தன. வீடுகள் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. வீடுகளில் தாழ்வாரங்கள் சமையல் அறைகள், குளிக்கும் அறைகள், கிணறுகள், கழிவுநீர்ப் பாதைகள் ஆகியவை அமைக்கப்பட்டிருந்தன. வீட்டின் கழிவுநீர்ப் பாதைகள் தெருவிலிருந்த மூடிய பாதாளச் சாக்கடையில் கலந்தன. நகர மையத்தில் பொது நீச்சல் குளம் ஒன்று இருந்தன. நீச்சல் குளத்தில் நீரை வடிகட்ட வசதி செய்யப் பட்டிருந்தது. தானியக் களஞ்சியங்கள், கால்நடை நிலையங்கள் ஆகியவையும் அமைக்கப்பட்டிருந்தன.
- வேதகால தொடக்கத்தில் இல்லங்கள் சாதாரணக் கூரைக் குடிசைகளாக இருந்தன. கூரைக் காலத்தையடுத்த மரத்தைப் பயன்படுத்திக் கட்டடங்களைக் கட்டும் திறன் பெற்றிருந்தனர் என அறியமுடிகிறது.
- இந்தியாவில் மலையைக் குடைந்து கோவில் அமைக்கும் குடைவரைக் கலை அசோகரால் துவக்கப்பட்டது. அசோகர் காலத்தில் கல்தூண்கள் நிறுவப்பட்டன. இத்தூண்கள் கொடிக் கம்பங்கள் அல்லது புனிதக் கம்பங்கள் என்று அழைக்கப்பட்டன. அசோகர் காலத்தில் பல ஸ்தூபிகளைச் சுற்றிலும் சிற்ப வேலைப்பாடமைந்த சுற்று வேலிகள் இடப்பட்டுள்ளன என்பதனை அறியலாம்.
- சாதவாகனர் காலத்தில் புத்த சமயமும், புத்தக் கலைகளும் சிறப்புற்று விளங்கின. சாளுவர்கள் காலத்தில் புத்தர் குடைவரை மண்டபங்களும் கோயில்களும் செதுக்கப்பட்டன.
- சங்ககாலத்தில் எளிய மக்கள் தங்கள் நிலப்பகுதிகளில் கிடைக்கும் பொருட்களை வைத்து எளிமையான முறையில் இல்லத்தை அமைத்தனர். நகரங்களில் வாழும் மக்கள் நன்கு திட்டமிட்டு பல நுட்பங்களைக் கையாண்டு தங்கள் மனையை அமைத்தனர் என்பதனை தெரிந்துக் கொள்ளமுடிகிறது.
- பல்லவர் காலத்தில் இந்து சமயம் புத்துயிர் பெற்றது. கோயிற்பணிகள் விரிவடைந்து ஆலயங்கள் தோற்றுவிக்கப்பட்டன. ஆலயப் பரிவாரத்துள் கட்டடக் கலைஞர்களும்,

சிற்பிகளும், ஓவியர்களும் இருந்துள்ளனர். பல்லவ மன்னர்கள் குடைவரைக் கோயில்களையும், ஒற்றைக் கல் கோயில்களையும் கட்டுமானக் கோயில்களையும் உருவாக்கினர்.

- சோழர் காலத்தில் நுண்கலையின் வளர்ச்சி மிகுந்து காணப்பட்டது. இவர்கள் பல்லவர்களின் கலைப்பாணிகளைப் பின்பற்றிய போதிலும் தங்களுக்கென்று ஒரு தனித்தன்மைகளை வளர்ந்திருந்தனர். சோழர்கால கோவில்கள் சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்டு காண்போரின் மனதைக் கவரும் தன்மையைப் பெற்றது.
- முகலாயர் காலத்தில் கட்டடக்கலையில் ஏற்பட்ட மகத்தான வளர்ச்சி இந்தியக் கலையில் குறிப்பிடத் தக்கவையாகும். முகலாயர்கள் கோட்டைகள், மசூதிகள், தோட்டங்கள், நகரங்கள் போன்றவற்றை உருவாக்கினர் என அறிந்துகொள்ள முடிகிறது.
- திராவிடக் கட்டடக் கலையும், இந்தோ–சரசானிடக் கட்டடக்கலையும் நாயக்கர் காலத்தில் சிறப்புற்று இருந்தது. வானளாவிய மண்டபங்களையும், பிரகாரங்களையும் உருவாக்கினர். சோழர்களாலும் பாண்டியர்களாலும் ஏற்கனவே கட்டப்பட்ட கோயில்கள் இடிபாடு அடைந்த நிலையில் அவற்றைப் புதுப்பிக்கவும் செய்தனர் என்ற செய்தியினைத் தெரிந்துக் கொள்ளமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. மா. இராசமாணிக்கனார், தமிழ்க்கலைகள், ப. 1
2. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப. 47
3. நாமக்கல் வி.இராமலிங்கம், தமிழிசை, ப. 5
4. அ. இராகவன், நம் நாட்டுக் கப்பற்கலை, ப. 25
5. துளசி. இராமசாமி, தமிழர்ப் பண்பாட்டு மரபுக் கலைகள், ப. 90
6. மணிமேகலை, ஊரலர் காதை, 18–32
7. க.த. திருநாவுக்கரசு, மு.நூல், 1990, பக். 34–35
8. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப. 246
9. தமிழ்நாடன், கலைகள் உறவும் உருமாற்றமும், ப. 72
10. லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார், சங்க காலத் தமிழர் வாழ்வு, ப. 100
11. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப. 246
12. கா. அப்பாத்துரை, தென்னாடு, ப. 31
13. தமிழரசன், பல்லவர் கால கலைப் படைப்புகள், ப. 12
14. தமிழ் லெக்சிகன் – தொகுதி இரண்டு, ப. 645
15. கோ. தெய்வநாயகம், தமிழர் கட்டிடக்கலை முகவுரை, ப. 1
16. ப. சாமியப்பன், வாழ்க்கையை வளமாக்கும் கலைகள், ப. 121
17. வை.மு. நரசிம்மன், தமிழரின் கட்டடக்கலை, பக். 247–248
18. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப. 42
19. ப. மனசை. கீரண், ஊரும் ஆறும், ப. 10
20. தொல். பொருள். அகத். 1009:7–8
21. சிலம்பு. கடலாடு காதை, 141–145
22. மணி., மலர்வனம் புக்க காதை, 126–127
23. மயிலை சீனி. வேங்கடசாமி, களப்பிரர் ஆட்சியில் தமிழகம், ப. 6
24. P.T.S. Iyengar Pallavas Part I, PP. 38-40
25. மேலது, ப. 40
26. ஜி. சேதுராமன், தமிழ்நாட்டுச் சமுதாய பண்பாட்டு கலை வரலாறு, ப. 125
27. K.V. Soundar Rajan, Early pandya muttaraya Irukkkuvel Architecture (Studies on India Temple Architecture, Varanasi, 1967, P. 240

28. சி.ஆர். பாலசுப்பிரமணியன், சோழர் கலைப் பணி, ப. 30

29. வீ. ரேவதி, கால வளர்ச்சியில் கலைநிலை, ப. 312

## இயல் – 2

# சங்ககால நிலவியல் அமைப்பில் குடியிருப்புகள்

### முன்னுரை

சங்க இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்களின் பண்பட்ட சமூக வாழ்க்கையினைப் படம்பிடித்துக் காட்டும் கலைப்படைப்புகளாகும். மக்களால் மக்களுக்காக உருவாக்கப்பட்டது சமுதாயம் என்னும் அமைப்பாகும். சங்ககால சமுதாய மக்கள் இயற்கையுடன் ஒன்றிய வாழ்வினை இயல்பாகவே ஏற்றுக்கொண்டு வாழ்ந்துள்ளனர். சங்ககால மக்கள் நிலத்தின் இயற்கையமைப்பிற்குத் தக்கபடி வாழ்க்கையை ஐந்துவிதமாக அமைத்துஉள்ளனர். இயற்கை அமைப்பின் அடிப்படையில் நிலப்பரப்பை மலை, காடு, வயல், கடற்கரை, பாலைவனம் எனப் பகுத்துள்ளனர். அந்தந்த நிலங்களில் இருக்கும் மரம், கொடி, மலர் முதலியவற்றின் சிறப்புகளால் அந்நிலங்களுக்கு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பெயர் வைத்துள்ளனர். மலையும் குன்றுகளும் உள்ள இடங்கள் குறிஞ்சி நிலம் என்று பெயர் பெற்றன. மலைகளுக்குக் கீழே இருந்த காடுகளும் காடு சார்ந்த இடங்களும் முல்லை நிலம் எனப் பெயர் பெற்றன. ஆறுகள் பாய்வதும் அல்லது ஏரி குளங்கள் உள்ளதுமான சமவெளிகள் மருதம் என்று பெயர் பெற்றன. கடற்கரையோரமாக இருந்த நிலங்கள் நெய்தல் நிலம் என்று பெயர் பெற்றன. வறண்ட பிரதேசம் பாலை நிலம் எனப் பெயர் பெற்றன. இவற்றோடு மட்டுமன்று, ஐந்நிலங்களில் வாழ்ந்த மக்கள் தங்களின் நிலச்சூழல்களுக்கு ஏற்ப குடியிருப்புகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்துள்ளனர். அக்குடியிருப்புகளின் அமைப்புமுறை பற்றி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### ஐவகை நில அமைப்புகள்

சங்ககால மக்களின் வாழ்க்கை முறையும் ஒழுக்கமும் நிலவியற்கைக்கேற்ப அமைந்திருந்தன. திணைப்பகுப்பு முறை வேறு எந்த மொழியிலும் இல்லாது தமிழ்மொழிக்

குரியதாகத் தனித்தன்மையுடன் அமையப்பெற்ற இலக்கியக் கட்டமைப்பாகும். இந்த இலக்கியக் கட்டமைப்பிற்கு அடிப்படை பண்டைத் தமிழர்களின் திணைப் பகுப்பு முறையே எனலாம்.

'திணை' எனும் சொல் இலக்கிய மரபிலும் இலக்கண மரபிலும் ஆளப்பெறுகின்றது. இச்சொல் 'திண்' என்பதன் அடியாகப் பிறந்துள்ளது. திணை என்பதை,

> **''மண் திணிந்த நிலனும்'' (புறம். 2:1)**
>
> **''திணிமணல் அடைகரை'' (குறுந். 15:2)**
>
> **''வான் திணைப் புரையோர்'' (குறிஞ்சி. 205)**

போன்ற தொடர்களால் திண், திணி, திணை உருவான சொல் வடிவை அறியலாம்.

'திணை' என்னும் சொல்லுக்குக் குடி என்னும் ஒரு பொருள் உண்டு. குடிகள் வாழும் நிலமும் திணை எனப்பட்டது.

சங்க இலக்கியப் பரப்பில் திணை என்பது நிலம், திண்ணை, இல்லம், மேடை, உயர்குடி, ஒழுக்கம், இனம் (பகுப்பு) என்னும் பொருள்களில் வழங்கப் பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது. திணை என்பது நிலத்தைக் குறிப்பதாய் அமைந்து பின்பு படிப்படியே கருத்து மாற்றம் பெற்று ஒழுக்கம் எனும் பொருளையும் குறிக்கலாயிற்று எனும் கருத்தும் பெறப்படுகின்றது. இதனை,

> **''ஆதியில் குடியிருப்பைக் குறித்த இச்சொல் காலவளர்ச்சியில் சொற்பொருள் மாறுதலடைந்து குடியிருப்பில் உள்ள மக்களின் ஒழுக்க வடிவங்களைச் சுட்டுவதாக மாறியிருப்பதும் சாத்தியமே''[1]**

என்று பெ.மாதையன் குறிப்பிடுகிறார். திணை என்பது இலக்கண வழக்கில் நிலம், ஒழுக்கம் எனும் இரண்டு பொருளில் கொள்ளப்படுகிறது.

**நிலம்**

உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களும் தோன்றுவதற்குக் களனாக உள்ள நிலத்தைச் சார்ந்த காற்று, தீ, நிர், வானம் ஆகியவற்றை நாம் ஐம்பெரும் பூதங்கள் என

வழங்கி வருகின்றோம். இவை எல்லா உயிரினங்களும் வாழ்வதற்கும் அழிவதற்கும் ஏற்ற ஆற்றல் பெற்றுள்ளமையால் இவற்றைப் பூதங்கள் என அழைத்து வருகிறோம். இவ்வைந்தும் கலந்த இவ்வுலகினைத் தொல்காப்பியர்,

**‘‘நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்**

**கலந்த மயக்கம் உலகம்’’[2]**

என்று கூறியுள்ளார். ஆகாயம் அந்நிலத்தில் உயர்ந்து பரந்துள்ளது என்றும், காற்று அவ்வாகாயத்தைத் தடவிக் கொண்டு வரும் என்றும், காற்றினின்று தீப்பிறக்கும் என்றும் தீயோடு மாறுபட்டு நீர் விளங்கும் என்றும் முடிஞ்சியூர் முடிநாகனார் என்ற புலவர் ஐம்பூத இயல்பை அந்தாதி நடையில் விளக்கியுள்ளார். இதனை,

**‘‘மண்டிணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்**

**விசும் புதைவரு வளியும்**

**வளித்தலைஇய தீயும்**

**தீ முரணிய நீருமென்றாங்கு**

**ஐம்பெரும்பூதத் தியற்கை’’ (புறம். 2:1–6)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. ஐம்பெரும் பூதங்கள் பற்றி மேலும்,

**‘‘நீர் நிலம் தீ வளி விசும் போடைந்தும்’’ (பதிற்று. 24:15)**

**‘‘தீ வளி விசும்பு நிலன்நீர் ஐந்தும்’’ (பரி. 3:4)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. இவ்வாறு பழந்தமிழ் மக்கள் தாங்கள் வாழ்ந்த சூழலை மையமாகக் கொண்டு வாழ்ந்தமையும், அதனடிப்படையில் நிலத்தோற்றம் குறித்த சிந்தனைகள் அமைந்திருந்தமையும் புலனாகின்றது.

மொழிக்கு மட்டுமின்றி மக்களுடைய வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துக் கொண்ட பெருமை பழந்தமிழரைச் சாரும். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி, காடும் காடு சார்ந்த இடமும் முல்லை, சுரமும் சுரம் சார்ந்த இடமும் பாலை, வயலும் வயல் சார்ந்த

இடமும் மருதம், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் என குறிஞ்சி முதலான ஐந்திணைக்கும் உரிய நிலத்தை முத்துவீரியம்,

> **“வரையே வனமே சுரமே மருதந்**
>
> **திரையே யவையவை சேர்தரு மிடனே’’[3]**

எனும் சூத்திரம் மூலம் குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியம் புவியின் நில அமைப்பைப் பற்றி பொதுவாகவும் தமிழகத்தின் நில அமைப்பைப் பற்றிச் சிறப்பாகவும் கூறியுள்ளது. முதலில் புவியின் நில அமைப்பைப் பற்றிய செய்திகள் குறிப்பிடப்படுகின்றன. இதனை,

> **“நில இயலார் ஒரு நாட்டின் நில அமைப்பை, மலை, மேட்டு நிலம், காடு, சமவெளி, கடற்கரை, பாலை எனப் பிரிப்பர்.’’[4]**

என்பார் மே. இராதாகிருஷ்ணன்.

ஐவகை நிலப்பிரிவுகளின் மூலம் அக்கால மக்களின் வரலாற்றை அறியமுடிகிறது. இதனை,

> **“பண்டைத் தமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பகுத்து அந்நிலங்களில் சிற்றூர்கள் அமைத்து வாழ்க்கையை நடத்தினர். குறிஞ்சி நிலத்து ஊர் சிறுகுடி அல்லது குறிஞ்சி என்றும், முல்லை நிலத்து ஊர் பாடி, பட்டி என்றும், மருத நிலத்து ஊர் ‘ஊர்’ என்றும், நெய்தல் நிலத்து ஊர் பாக்கம் என்றும், பாலை நிலத்து ஊர் குறும்பு என்றும் அழைக்கப்பட்டன’’[5]**

என்பார் சு.வித்தியானந்தன்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை நிலத்து மக்கள் தாம் வாழும் நிலவியலின் தட்பவெப்பச் சூழலுக்கு ஏற்றாற்போலவும், செய்யும் தொழிலுக்கு ஏற்றாற்போலவும், தொழிலோடு தொடர்புடையவற்றுக்குப் பயனாகும் வகையில் குடில்களை அமைத்தனர்.

## குடில்கள்

மண்ணைப் பிசைந்து சுவர்களாக வைத்து, அதன் மீது மர விட்டங்கள் அமைத்து ஊகம்புல், வைக்கோல், வரகுத்தாள், தருப்பைப்புல், தென்னை மடல், தாழையின் தூறுகள், பனையோலை, கூவையிலை, ஈந்தின் இலை, தழைகள் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றால் வேய்ந்து சிறு குடில்களை உருவாக்கியுள்ளனர். குடில்களைச் சுற்றிலும் வெப்பத்தைப் போக்குவதற்காக மரங்களையும் செடி கொடிகளையும் வளர்த்து வந்துள்ளனர்.

## குறிஞ்சி

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். குறிஞ்சி மலரினைக் கொண்டே குறிஞ்சி எனத் திணை வகுத்தனர். குறிஞ்சி மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் இயல்பினை உடையது. இதன் தாவரவியல் பெயர் ‘ஸ்பெரிபிலாந்தஸ் குந்தியானா’ ஆகும்.

மலைப் பகுதியில் வளரும் ஒருவகை செடி குறிஞ்சியாகும். இச்செடியின் பூ என்பது ஒன்பதாவது ஆண்டிலிருந்து பன்னிரண்டாவது ஆண்டு வரை மலரும் தன்மையுடையது. இயற்கையில் இத்தகைய வியப்பிற்குரிய பூ வேறின்மையில் மலையினும் மலை சார்ந்த இடத்திலும் காணப்படும் இந்தப் பூவின் பெயராலேயே இந்த இடத்தைக் குறிஞ்சியென அழைத்தனர்.

> **‘‘குறிஞ்சி செடியின் பூ ஒன்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து காணப்படுகிறது’’[6]**

என்பார் பி.எல்.சாமி.

கடல் மட்டத்திற்கு மேல் ஆறாயிரம் அடி உயரத்தில் வளரும் தன்மை வாய்ந்தது. குறிஞ்சித் தேன் மனத்திற்கும் இனிமைக்கும் பெயர் பெற்றது. பூவும் தேனும் கொண்டுள்ள தனித்தன்மையால் குறிஞ்சி என்ற பெயரை இந்நிலத்திற்கு வைத்திருக்கலாம். குறிஞ்சிச் செடியின் கிளைகள் கருமையாகவும் வன்மையாகவும் காணப்படுவதை,

> **‘‘கருங்கோற் குறிஞ்சி யடுக்கம்’’ (புறம். 374:8)**

> **‘‘கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**

பெருந் தேனிழைக்கும் நாடன்'' (குறுந். 3: 3–4)

''கருங்கோற் குறிஞ்சி நும் உறைவின் ஊர்க்கே'' (அகம். 308:16)

என்ற பாடல் அடிகளின் மூலம் உணரமுடிகின்றது. நாட்டின் பல்வேறு வளத்திற்கு அடிப்படையாகயிருப்பது மலையாகும். எந்த நாட்டில் மலைவளம் சிறப்பாக இருக்கிறதோ அந்த நாட்டில் மழை வளம் சிறப்பாக இருக்கும்.

மலைகளில் மக்களின் வாழ்வுக்குத் தேவையான எல்லா வளங்களும் பொருள்களும் கிடைக்கும். நன்கு செழிப்பான மலைகள் மக்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களைத் தந்து தாய் போல் விளங்குகின்றன எனலாம்.

## மக்கள்

குறிஞ்சி நிலத் தலைவன் குன்றநாடன், பொருப்பன், சிலம்பன், வெற்பன் என்னும் திணைப்பெயர் பெற்றான். தலைவி 'கொடிச்சி' எனப்பட்டாள். குடிமக்களுள் ஆடவர், கானவர், குன்றுவர், வேட்டுவர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் குன்றுவித்தியர், வேட்டுவித்தியர், குளத்தியர் எனப் பெயர் பெற்றனர். இவற்றுள் குறவன் கானவன் என்ற இரண்டு இனங்கள் மட்டும் பெரும்பான்மையாகப் பேசப்படுகின்றன. மலைநாட்டில் வாழும் குறவரைப் பற்றி,

> ''மலையாகிய குன்றத்தின் வாழ்ந்தவனுக்குக் குன்றவன் என்று பெயரிட்டனர். அவனே 'ன்' குறுகி குறவன் என்று அழைக்கப்பட்டான். அழைக்கப்பட்டான். குறவன் என்ற சொல்லுக்குப் பாம்பாட்டிகள், சாத்திரம் சொல்பவர், மலைவாணர் என்றும் பொருள் கூறுவர்''[7]

என்பார் எ.சுவாமிநாதன். உயர்ந்த மலையிலுள்ள சிறுகுடியில் வாழும் கொடிச்சி கானவன் அம்பெய்திக் கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுத்த தலைப் பகுதியைக் கிழங்கோடு, தேனையும் சேர்த்துப் பலருக்கும் தருவாள். இதனை,

> ''கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
> 
> தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி கிழங்கொடு
> 
> காந்தள் அம் சிறுகுடிப் பகுக்கும்

**ஓங்க மலை நாடன்'' (நற். 85:8–11)**

என்ற பாடலில் குறிஞ்சி நிலத்து மக்களான கானவன், கொடிச்சியைப் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.

குறவன், குறத்தியர் மலைப்பகுதியில் திணை விளைவித்துப் பிழைக்கும் மக்களாக வாழ்ந்திருந்தனர் என்பதனை,

**''பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்**

**கொழுங்கொடி அவரை பூக்கும்**

**அரும்பனி அற்சிரம் வாரா தோரே'' (குறுந். 82:4–6)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இவ்விரு இனமக்களைப் பற்றிய பாடல்களைக் கொண்டு பார்க்கும் பொழுது குறிஞ்சி நிலத்தில் இருபெரும் பிரிவினராக மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதனையும் இரு இனமக்களின் ஒருவரான குறவர் தினைப்புனத்தைப் பாதுகாத்தும் மற்றொருவரான கானவர் வேட்டையாடி வாழும் இயல்பினை உடையவராகவும் இருந்திருந்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

## தொழில்கள்

குறிஞ்சி நிலமக்கள் திணை பயிரிடுதல், தினைப் புனங்காத்தல், திணை அறுத்தல், கிழங்கு அகழ்தல், தேன் எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டனர்.

## நிலத்தைப் பக்குவப்படுத்துதல்

மலைப் பகுதியில் இருந்த மூங்கிலை அறுத்துச் செய்த தட்டை என்னும் ஒலி பொருந்திய கருவியை இசைத்து மென்மையான கதிர்களைக் கொண்டதாகத் தினைப்புனத்தைக் காத்தனர் என்பதனை,

**''...... நம்மலை**

**அமைஅறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்,**

**நறுவினர ஆரம் அறஎறிந்து உழுத**

**உளைக்குரல் சிறுதினை'' (அகம். 388:1–4)**

என்ற அகநானூற்றுப் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. குறிஞ்சி நில மக்கள் காடுகளை அழித்து நிலங்களை விளைச்சலுக்குப் பயன்படுத்தியுள்ளனர்.

## உழுது விதைத்தல்

குறவர் கார் காலத்து மழை பெய்தவுடன் நிலத்தை உழுது பண்படுத்தி வரகு, தினை, அவரை ஆகியவற்றை விதைப்பர் என்பதனை,

**''கார்ப்பெயல் கலித்த பெரும்பாட்டு ஈரத்துப்**

**பூழி மயங்கப் பலவுழுது வித்தி'' (புறம். 120:2–3)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## விதைத்தல்

குறவர் ஐவனம் எனப்படும் நெல்வகையை விதைத்தனர் என்பதனை,

**''அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி'' (குறுந். 100:1)**

**''மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி**

**அருவியின் விளைக்கும் நாடன்'' (குறுந். 371:2–3)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## களை கட்டல்

சிறிய தினையிடத்தே விளைந்த களையைக் குறவர்கள் கொட்டினைக் கொண்டு களைந்ததனை,

**''……. சிறுதினைத்**

**துளர்எறி நுண்துகள் களைஞர் தங்கை'' (குறுந். 392:4–5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

## கிழங்கு அகழ்தல்

கானவர் கிழங்கினைத் தோண்டியெடுப்பர். அங்ஙனம் தோண்டியமையால் உண்டான குழிகளை உடனடியாக மண்ணிட்டு நிரப்பவில்லை. அக்குழிகளில் வேங்கை மலர்களும், கொன்றை மலர்களும் உதிர்ந்திருந்ததை,

**''……… கானவர்**

**கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கைப்**

**பொன்மலி புதுவீத் தாஅம் அவர்நாட்டு**

**மணிநிற மால்வரை மறைதொறு'' (ஐங். 208:1–4)**

என்ற அடிகளின் மூலம் உணரமுடிகிறது.

## தினைப்புனங்காத்தல்

விலங்கினங்கள், பறவைகள் முதலியவற்றிலிருந்து தினையைக் காக்க தினைப் புனங்காவல் இருந்தனர். இச்செயலில் ஆண், பெண் இருபாலரும் ஈடுபட்டுள்ளனர். தினைப்புனம் கவர வரும் யானையை அஞ்சி ஓடும் பொருட்டுக் கொள்ளிக் கட்டையை இரவு முழுவதும் எரியவிட்டு, வில்லினை உடைய கானவர் ஆரவாரம் செய்தனர் என்பதனை,

**''ஏனலஞ் சிறுதினை காக்கும் சேணோன்**

**ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை**

**மீன்படு சுடர்ஒளி வெரூஉம்'' (குறுந். 357:5–7)**

**''ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்**

**களிறென ஆர்ப்பவர் ஏனல்கா வலரே'' (கலித். 521:13–14)**

**''ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்**

**பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி'' (அகம். 73:14–15)**

என்னும் அடிகளின் மூலம் உணரலாம்.

குறமகளிர் தம் தோழியருடன் கூட்டமாகச் சென்று தினைப்புனங்களில் ஆரவாரம் உண்டாகக் கிளிகளை ஒட்டியதனை,

**''ஒலிகழைந்த தட்டை புடையுநர் புனந்தொறுங்**

**கிளிகடி மகளிர் விளிபடு பூச'' (மலைபடு. 328–329)**

என மலைபடுகடாம் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

தினைப்புனம் காவலில் பெண்கள் ஈடுபட்டிருந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன. அவ்வகையில் தினைப்புனம் காவலுக்குச் செவிலி தலைவியையும் தோழியையும் அனுப்பி வைத்ததை,

**''நெல்கொள் நெடுவெதிர்க்கு அணந்த யானை**

**முத்து ஆர் மருப்பின் இறங்குகை கடுப்பத்**

**துய்த்தலை வாங்கிய புனிறுநீர் பெருங்குரல்**

**நல்கோள் சிறுதினை படுபுள் ஒப்பி**

**எல்பட வருதியர் எனநீ விடுத்தலின்'' (குறிஞ்சி. 35–39)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

## தினை அறுத்தல்

தினை நன்கு முற்றியதும் குறவர் பலரும் கூடி தினையை அறுத்தனர் என்பதனை,

**''குளிர்படு கையள் கொடிச்சி செல்கென**

**நல்ல இனிய கூறி மெல்லக்**

**கொயல் தொடங் கினரே கானவர்'' (நற். 306:3–5)**

என்ற அடிகளின் மூலம் அறியலாம்.

## தேன் எடுத்தல்

குறவர் மலையேறும் நெடிய மூங்கிலின் கணுக்களைப் படிபோல வைத்து ஏறித் தேனை எடுத்த நிகழ்வையும், அந்த ஒற்றை மூங்கில் ஏணி மால்பு என்று அழைக்கப்பட்டதையும்,

**''பெருந்தேன் கண்படு வரைவில் முதுமால்பு**

**அறியாது ஏறிய மடவோன் போல'' (குறுந். 273:5–6)**

**''தேனின் இறாலென ஏணி இழைந்திருக்கும்'' (கலித்.39:9)**

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

## வேட்டையாடுதல்

குறவர்கள் யானை, புலி, பன்றி, முள்ளம்பன்றி, உடும்பு, மான், முயல் முதலியவைகளை வேட்டையாடினர். யானையை வேட்டையாடி அதன் தந்தங்களைப் பெரிய பாறையிடத்துக் காய வைத்து, கால் நகங்களை ஊனின்று பிரித்துப் புதைத்தனர் என்பதனை,

**''வெண்கோடு கொண்டு வியலுறை வைப்பவும்**

**பச்சூன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்'' (நற். 114:1–2)**

என நற்றிணைப் பாடலடிகளின் மூலம் அறியலாம்.

## குறிஞ்சி மக்களின் குடியிருப்புகள்

குறிஞ்சி நிலம் பசுமையான பட்டாடையை உடுத்தியதைப் போன்று மலை முழுவதும் பசுமையைப் போர்த்தி, வெள்ளியைப் போன்று விழும் அருவியையும் இயற்கையாக சுரக்கும் சுனைநீரையும் கொண்டு விளங்கியது. குறிஞ்சி மலைப்பகுதி ஆதலால் இயற்கை வளங்களுள் முதன்மையான இடத்தைப் பெறுவன மரங்களாகும். மரங்களின் வாயிலாகக் குடியிருப்பை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர்.

மலைவாழ் மக்களாகிய குறவர்கள் தாம் வாழும் இடத்தின் மலைச்சரிவுகளிலும் மேடு பள்ளங்களாகிய நில அமைப்பை அறிந்தவராதலால் தங்களிடம் கிடைக்கக் கூடிய

பொருட்களைக் கொண்டே தங்கள் குடில்களை அமைத்துக் கொண்டனர். குறிஞ்சி மலை சார்ந்த நிலமாக இருப்பதால் இந்நிலம் சிறு சிறு மலைகள் உள்ளடக்கிய பகுதியாகக் காணப்படுகிறது.

மலை மீது வளரும் மரம் செடி கொடிகளிலிருந்து உதிரும் மணமிக்க மலர்களால் மலைச்சாரல் மணம் செய்த மனைபோல மணத்தல் இயல்பு. அம்மலைச் சாரலில் கானவர் குடியிருப்பு அமைந்திருக்கும். அது 'சிறுகுடி' எனப்படும். அஃதாவது சில வீடுகளைக் கொண்ட குடியிருப்பு என்பர். இதனை,

**''புலாவஞ் சிறுகுடி'' (நற்.14:3)**

**''குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து'' (மலைபடு. 162)**

**''கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே'' (நற். 82:11)**

**''கானல் நண்ணிய காமர் சிறுகுடி'' (நற். 45:2)**

என்னும் அடிகளால் அறியமுடிகிறது.

குறிஞ்சி மலையில் பல்வேறு வகையான மலர்கள் மலர்ந்து மணம் வீசின. அம்மலர்களின் மணம் அங்கே இருந்த சிறுகுடில்கள் தோறும் மணம் பரப்பின என்பதை,

**''மணஇல் கமழும் மாமலைச் சாரல்'' (மலைபடு. 151)**

என்ற அடியின் மூலம் சுட்டுகிறது.

குறவரில் ஏழு பகுதியினர் காட்டிலிருந்து வெட்டிக் கொண்டு வந்த கால்களை நட்டுக் கட்டிய குச்சி வீடுகளில் வாழ்ந்தனர். இதனை,

**''நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயரும்'' (நற். 285:7)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம். இக்குடிசையை 'நடுகாற் குரம்பை' என்பர்.

## குறியிறைக் குரம்பை

குட்டையான இறப்பையுடைய சிறிய வீட்டில் வாழ்ந்துள்ளனர். இம்மனை குறியினைக்

குரம்பை என்பர். இதனை,

> **‘‘குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்’’ (புறம். 129:1)**

> **‘‘துறுகல் நண்ணியகறி இவர் படப்பைக்**
>
> **குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்’’ (அகம். 272:10–11)**

என்ற பாடல் அடிகளின் மூலம் உணரமுடிகிறது.

## கொன்நிலைக் குரம்பைகள்

குடிசைகள் இலவ மரக்கொம்பும் மற்றும் ஈந்தின் இலையால் வேயப்பட்டு, அதன் இருபுறமும் குரம்பை போன்று அமைக்கப்பட்டிருந்தன. இவ்வகை குரம்பைகள் கொன்நிலைக் குரம்பைகள் என்று அழைக்கப்பட்டன. இதனை,

> **‘‘வரைவின் தாழ்ந்த வால்வெள் அருவி**
>
> **கொன் நிலைக் குரும்பையின் இழிதரும்**
>
> **இன்னாது இருந்த இச்சிறுகுடி யோரே’’ (குறுந். 284:6–8)**

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது. குறிஞ்சி நிலத்தில் அருவிகள் தாழ்ந்து விழும் பகுதியில் இவ்வகைக் குரம்பைகள் அமைக்கப்பட்டிருந்தன.

## திருமணி பெருவரைச் சிறுகுடி

மலையினின்று வீழும் அருவிகள் பாம்பு உமிழ்ந்து வைத்த இரத்தினங்களைக் கீழே கொண்டு வந்து சேர்க்கும். இரத்தினங்களை சிற்றூரில் உள்ளோர் தத்தம் வீடுகளில் அழகுக்காக வைப்பர். தெருவெங்கும் அவற்றின் ஒளி பிரகாசமாக வீசியது. ஒளியினால் இரவானது பகல்போல் காட்சியளித்தது. இதனை,

> **‘‘அருவி தந்த அரவு உமிழ் திருமணி**
>
> **பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக்கு உறுத்தலின்’’ (அகம். 192:11–12)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

## புல்வேய் குரம்பை

குன்றக்குறவனது குடிசை புல்லால் வேடப்பட்டிருந்ததை,

**“குன்றக் குறவன் புல்வேய் குரம்பை**

**மன்றுஆடு இளமழை மறைக்கும் நாடன்’’ (ஐங். 252:1–2)**

என்ற ஐங்குறுநூற்று பாடலடியால் அறியமுடிகிறது.

வெள்ளருவி மலை உச்சியிலிருந்து வீழ்கின்ற இடத்திற்கருகில் புல்லினைக் கொண்டு குறிஞ்சி நில மக்கள் கூரைகளை வேய்ந்தனர். அக்குரம்பையின் முன்பு மான் இனங்கள் நெல்லிக்காய்களைத் தின்றபடி உலவின எனும் கருத்துகளை,

**“தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவிக்**

**கல்உயர் நண்ணியதுவே நெல்லி**

**மரையினம் ஆளும் முன்றிற்**

**புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே’’ (குறுந். 235:1–4)**

என்ற பாடல் அடிகளால் அறியலாம்.

## வேட்டுவன் குடியிருப்பு

குறிஞ்சி நில வேட்டுவனின் குடியிருப்புகள் யானையின் வெண்ணிறக் கொம்பும் புல்லும் கொண்டு வேயப்பட்டு அதன் முன்புறத்தில் சுற்றத்தாருடன் அமர்ந்து களைப்பாற முற்றத்துடன் அமைக்கப்பட்டிருந்தது என்பதனை,

**“இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன்**

**விரிமலர் மராஅம் பொருந்தி தோல்தெரிந்து**

**வரிநுதல் யானை அருநிறத்து அழுத்தி**

**இனல்அடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்**

**புல்வேய் குரம்பை புலர ஊன்றி**

முன்றில் நீடிய முழவு உறழ்பலவில்

பிழிமகிழ் உவகையின் கிளையொடு கல்சிறந்து’’ (அகம். 172:6–2)

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் வெளிக்காட்டுகின்றன. வேட்டுவன் இரும்பை ஒத்த வலிமையான கைகளைக் கொண்டு வெண்கடம்ப மரத்தின் அடியில் நின்று யானையின் மார்பில் அம்பை எய்திக் கொன்றான். அதன் தந்தத்தைத் திண்மையான புல்லால் வேய்ந்த அழகிய குரம்பையில் வைத்தான். அதனால் புலால் நாற்றம் அவ்விடம் எங்கும் பரவியது. இன்றும் கானகப் பகுதிகளில் மக்கள் குடிசைகள் பெரிதும் புல்லில் வேயப்பட்டுள்ளன.

## குறுங்காற் குரம்பை

சங்க காலத்தின் குறிஞ்சி நிலத்தில் பேசப்படும் விளைச்சல் தானியம் தினையாகும். தினைப்பயிர் செய்த சூழல் தினை விளைந்த நிலத்தைப் பாதுகாக்கும் முறை போன்றவை சங்கப்பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன. குரம்பைகள் தினையரிந்த தாளால் வேயப்பட்டிருந்தன. இக்குரம்பைகள் குறுங்கால்களைக் கொண்டு கட்டப் பெற்ற உயரம் குறைந்த குரம்பைகளாக இருந்தன. இதனை,

‘‘இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை’’ (குறிஞ்சி. 153)

எனும் அடி விளக்குகிறது.

## குறிஞ்சி நில செல்வந்தர்களின் குடியிருப்புகள்

கூரை வேய்ந்த குடிசைகளில் வாழ்ந்த மக்கள் ஒருபுறம் இருக்க வசதியும் பாதுகாப்பும் நிறைந்த மக்கள் மாளிகைகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். தலைவி தன்னுடைய தந்தையின் மாளிகையில் இருந்தாள் என்பதை,

‘‘தந்தை

நெடுநகர் வருசிறை நின்றனென் ஆக’’ (அகம். 162:9)

என்ற பாடல் குறிப்பிடுகின்றது. குறிஞ்சி நில குடிகள் விலங்குகளின் தோலைப் படுக்கை விரிப்பாகப் பயன்படுத்தியுள்ளனர். குறத்தியின் தந்தை புலித்தோலைப் பயன்படுத்தியதை,

‘‘விரி அதன்படுத்த சேக்கை தெரிஇழைத்

**தேன்நாறு ததுப்பின் கொடிச்சியர் தந்தை'' (அகம். 55:4–5)**

என்ற பாடலின் அடி மூலம் அறியலாம்.

குறிஞ்சி நில மக்கள் தம்முள் பலர் கூடி வாழும் சமூகத்தை விரும்பினர். அனைவரும் ஒன்றுபட்டு வாழும் நிலையில் அம்மக்களுக்குப் பாதுகாவல் இன்றியமையாத ஒன்றாகியது. ஊரினைக் காவல் செய்ய காவலர்கள் இருந்தனர் என்பதனை,

**''துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்'' (அகம். 122:6)**

என்ற பாடலடியின் வழி அறியலாம்.

குறிஞ்சிநிலத் தலைவியின் இல்லமானது செல்வ வளம் மிக்கதாகவும் அழகுடையதாகவும் காட்சியளித்தது. இதனை,

**''பொன்நகர் வரைப்பில் கன்னம் தூக்கி'' (ஐங். 247:2)**

என்னும் அடியால் அறியலாம்.

உடன்போக்கு சென்ற தலைவி தலைவனோடு தன் வீட்டிற்குத் திரும்பி வருவாள் என்று எண்ணிய செவிலி அழகுறக் கட்டப் பெற்ற வீட்டின் புறச்சுவரில் செம்மண் பூசி, முற்றத்தில் மணல் பரப்பி வாசலில் மாலை தொங்கவிட்டு வீட்டை அணிசெய்தாள் என்பதனை,

**''புனைமான் இஞ்சி பூவல் ஊட்டி**

**மனைமணல் அடுத்து மாலை நாற்றி**

**உவந்து இனிது அயரும் என்ப'' (அகம். 195:3–5)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

**பரண்**

குறிஞ்சி நில மக்கள் தங்களது தினைப் புனங்களைக் கவர வரும் பறவைகள் மற்றும் விலங்குகளிடமிருந்து தினைப் பயிரினைக் காக்க பரண் வீடுகளை அமைத்தனர். பரண்கள்

மனிதர்களைத் தாங்கும் வகையில் வலிமை மிக்கதாகவும், நில மட்டத்திலிருந்து பல அடி உயரமாகக் கொடிய விலங்குகளால் எட்ட முடியாத அளவிற்கு உயரமாகவும், மிகுந்த நுண்ணறிவுடன் அமைக்கப்பட்டிருந்தன.

சங்ககால மக்கள் வேங்கை மரத்தின் மேல் மேற்கூரைகள் வேயப்பட்ட பரண்களை அமைத்து இருந்தனர். தங்களின் பாதுகாப்புக் கருதி மலைக்குகைகளின் மீதும் பரண்களை அமைத்தனர். அப்பரணின் மேல் இருந்துகொண்டு தலைவி தினைப்புனத்தைக் காவல் காத்ததை,

**''கார்அரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்**

**பாஅமை இதனம் ஏறி, பாசினம்**

**வணர்குரற் சிறுதினை கடிய'' (நற். 372:6–8)**

**''யாங்கு வருவது கொல்லோ தீம்சொல்**

**செறிதொட்டு எவ்வளைக் குறுமகள்**

**சிறுபுனத்து அல்கிய பெரும்புற நிலையே'' (நற். 306:9–11)**

**''உளைக்குரல் சிறுதினை கவர்தலின் கிளையமல்**

**பெருவரை அடுக்கத்துக் குரீஇ, ஓப்பி**

**ஓங்குகிருஞ் சிலம்பின் ஒள் இணர் நறுவீ**

**வேங்கையம் கவட்டிடை நிவந்த இதணத்து,**

**பொன்மருள் நறுந்தாது ஊதும் தும்பி'' (அகம். 388: 4–8)**

எனவும் வரும் பாடல்கள் வழி அறியமுடிகிறது. இப்பாடல்கள் மூலம் தலைவி பரண் மீது அமர்ந்து கொண்டு தினைப் புனத்தினத்திற்கு வந்த கிளியை விரட்டி தினைப் பயிரைப் பாதுகாத்தாள் என்ற செய்தியை அறியமுடிகிறது.

உயரமான இடத்தில் பரண் அமைப்பது அவர்கட்குப் பாதுகாப்பாக அமைவதோடு, நான்கு திசைகளையும் பார்க்கமுடியும். வேங்கை மரங்கள் நிறைந்த குன்றிடத்தில் சந்தன மரத்தால் செய்த ஆண் யானையின் வலிமைக்கு அஞ்சாத புலித்தோலால் வேய்ந்த பரணில்

தலைவி தங்கியிருந்து தினைப்புனத்தைப் பாதுகாத்ததை,

**‘‘வேங்கைஅம் கவட்டைச் சாந்தின் செய்த**

**களிற்றுத் துப்பு அஞ்சாப் புலிஅதள் இதணத்து**

**சிறுதினை வியன்புனம் காப்பின்’’ (நற். 351:6–8)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தின் உயரமான இடத்தில் பரண்களை அமைத்துள்ளனர். ஆண்யானைகள் நிமிர்ந்து பார்த்து மேலே பற்ற இயலாத உயரமான மலைக்குகையின் மேலே பரண்கள் அமைக்கப்பட்டிருந்தன.

**‘‘களிறு அணந்து எய்தாக் கல்முகை இதணத்தும்’’ (அகம். 308:8)**

என்னும் அகநானூறு பாடலடியின் மூலம் அறியலாம். பரனுக்கு மேற்கூரை இருந்ததை,

**‘‘சிறுபுனத்து அல்கிய பெரும்புற நிலையே’’ (நற். 306:11)**

என்ற நற்றிணை பாடலடியால் உணரமுடிகிறது.

தினைப்புனக் காவலன் மரங்களின்மீது பரண் அமைத்ததையும் அப்பரணைக் காட்டிலுள்ள மயில்கள் தம் இருப்பிடமாகக் கருதித் தங்கியதையும்,

**‘‘சேணோன் இழைத்த நெடுங்காற் கழுதில்’’ (குறுந். 276:5)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம். மரத்தின் மேல் உண்டாக்கிய பரண் மீது ஒருவரும் இல்லாததால் அப்பரணில் மரம் ஏறுவதில் வல்ல மந்திகள் சென்றன. இதனை,

**‘‘தனிநிலை இதணம் புலம்பப் போகி**

**மந்தியும் அறியா மரம்பயில் ஒருசிறை’’ (நற். 194:6–7)**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

## முற்றம்

முன்றில் என்பது வீட்டின் முன்பகுதியாகும். பழந்தமிழ் மக்களிடையே முன்றில் பயன்பாடு மிகுதியாக இருந்திருக்கிறது எனலாம். ஏனெனில், முன்றில் அமைப்பையும் அதன் பயன்பாட்டையும் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. முன்றில் என்பது வீட்டின் முன் அமைப்பில் பயனுள்ள திறந்தவெளி இடமாக இருந்ததையும், சில பாகுபாட்டிற்கேற்ப வாழ்ந்த மக்களுக்குப் பயன்படுமாறு குடியிருப்பின் ஒரு பகுதியாகவும் இருந்ததையும் இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. தற்காலத்தில் இப்பகுதி முற்றம் என்று அழைக்கப்படுகிறது.

குறிஞ்சி நிலக்குடியிருப்புகளின் கட்டமைப்பில் முன்றில் அமைப்புகள் திறந்தவெளி இடமாகக் காணப்படுகின்றன. முற்றத்தின் அருகில் பழங்கள் நிறைந்த பலாமரங்கள் மிகுதியாக இருந்தன. முற்றத்தில் விலங்குகள் உரசி உடல்தினவைப் போக்கிக் கொள்ள உதவுமாறு குண்டுக்கல்லைப் போட்டு வைப்பத்திருந்தனர் என்பதனை,

**‘‘குறவர் முன்றில் மாதிண்டு துறுகல்**

**கல்லா மந்தி கடுவனோடு உகளும்’’ (ஐங். 277:1–2)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

முற்றங்களில் குறவர்கள் கூடி விளையாடியுள்ளனர். வேங்கைப்பூக்கள் நிறைந்த முற்றத்தில் ஆண்களும் பெண்களும் குரவைக் கூத்தாடினர் என்பதை,

**‘‘குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்**

**வாங்கமைப் பழுவினிய தேறல் மகிழ்ந்து**

**வேங்கை முன்றில் குரவை அயரும்’’ (புறம். 129:1–3)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

குறிஞ்சி நிலக் குடிசைகளின் முற்றத்தில் கிளைகள்தோறும் பழங்கள் தொங்குகின்ற பலாமரங்கள் இருந்தன என்பதை,

**‘‘சினைதொறும் தூங்கும் பயம்கெழு பலவின்**

**களையுடை முன்றில்’’ (நற். 77:5–6)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

முன்றலில் இருந்த பலாச்சுளைகளைத் தின்ற மந்தி விதைகளைத் தரையில் பரப்பப் அதன் அருகே இருந்த கொடிச்சி தன் தந்தையின் மலையைப் பாடிக்கொண்டே ஐவன வெண்ணெல்லைக் குற்றுவாள் என்பதை,

**‘‘முன்றில் பலவின் படுசுளை மரீஇ**

**புன்தலை மந்தி தூர்ப்ப, தந்தை**

**மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி**

**ஐவன வெண்ணெல் குறூஉம்’’ (நற். 373:1–4)**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகிறது. புல்லால் வேய்ந்த குடிசையின் முற்றத்தில் மரைமான்கள் நெல்லிக்காயைத் தின்று முற்றத்தில் பரப்பியதனை,

**‘‘கல்உயர் நண்ணி யதுவே நெல்லி**

**மரையினம் ஆரும் முன்றிற்**

**புல்வேய் குரம்பை’’ (குறுந். 235:3–5)**

**‘‘மரைபிரித்து உண்ட நெல்லி வேலி**

**பரலுடை முன்றில்’’ (புறம். 170:1–2)**

என்ற அடிகளின் மூலம் அறியலாம். மணல் பரப்பப்பட்ட முற்றத்தில் வேலனை அழைத்துக் கழங்கிட்டுக்குறி பார்ப்பர் என்பதனை,

**‘‘பெய்ம்மணல் முற்றம் கடிகொண்டு**

**மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே’’ (நற். 268:8–9)**

என்ற நற்றிணைப் பாடலடிகளின் மூலம்அறியமுடிகிறது.

குறவர்கள் முன்றிலில் விளையாடுவர் என்பதை,

**‘‘குறவர் அல்கு அயர் முன்றில்’’ (நற். 44:8)**

என்ற அடியின் மூலம் உணரமுடிகின்றது. கூரையுடைய நல்ல வீட்டின் முற்றத்தில் வளையணிந்த மகளிர் மணற்பரப்பில் கழங்கு விளையாடினர் என்பதனையும் அறியமுடிகிறது.

## வேலி

சிறுகுடிலானது காட்டு மல்லிகையையும் செங்காந்தளையும் வேலியாகக் கொண்டிருந்தது. இதனை,

**''பருஇலைக் குளவியொடு பசுமரல் கட்கும்**

**காந்தள்அம் சிலம்பில் சிறுகுடிர்'' (குறுந். 100:2–3)**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

மூங்கில் முள்ளால் அமைந்த வேலையுடைய குடியிருப்புகளை,

**''வேரல் வேலி'' (குறுந். 18:1)**

**''வேரல் வேலி சிறுகுடி'' (நற். 232:4)**

என்ற பாடல் அடி மூலம் உணரமுடிகிறது. இயற்கையாக மூங்கில் முள்ளால் அமைந்த வேலியை 'வாழ்வேலி' என்று அழைத்துள்ளனர்.

## முல்லை

காடும் காடு சார்ந்த இடமும் முல்லை எனப்படும். முல்லை என்பது ஒருவகைக் கொடி, காடுகளிலும் காடு சார்ந்த இடங்களிலும் முல்லைக்கொடிகள் அதிகமாகச் செழித்து வளர்ந்ததால், இந்நிலம் முல்லை எனப் பெற்றது எனலாம். முல்லை நிலப்பகுதியில் செம்மண் அதிகமாகக் காணப்படுவதால் செம்புலம் என்றும் அழைத்தனர். இந்நிலம் நீர் வசதியற்ற பகுதியாகக் காணப்படுகிறது. மரம்செடி, கொடிகள் அடர்ந்து நீர் தங்காது வழிந்தோடும் படியான உயரமான மலைகளையும் குன்றுகளையும் கரடுமுரடான மேட்டுநிலங்களையும் உடையதாக இருப்பதால் வன்புலம் என்றும் கூறுவர். இதனை,

**''பொய்யா எழிலி பெய்விடம் நோக்கிமுட்டை கொண்டு**

**வன்புலம் சேரும் சிறுநுண் எறும்பு''[58] (புறம். 173:6–8)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

> **"முல்லை என்பது அகம், புறம் இரண்டிற்கும் உடையதாகும். இங்கும் கற்பு இருத்தல் என்பது அக வாழ்வாகும். இயல்பான வெற்றி என்பது புற வாழ்வாகும். முல்லைநிலத் தலைவன், தலைவி பற்றிய பாடல்களில் அகம் புறம் சார்ந்த வாழ்க்கை காணமுடிகின்றன. இதனை 'முல்லை' என்ற சொற்கு இலக்கிய இலக்கண ஆட்சிகள் நிலம், மலர், கற்பு, இருத்தல், இயல்பான வெற்றி எனப் பல்வேறு பொருள் தருகின்றன. முல்லையென்பது இயல்பின் நடக்கும் வாழ்க்கையில் இயையும் வென்றியைக் குறிப்பதாகும். இப்பொருள் பட முல்லை அகத்திலும் புறத்திலும் வரும்''[8]**

என்பார் ம.ரா.குருசாமி.

முதன்முதலில் முல்லை நிலத்தில்தான் அரச மரபு தோன்றியது என்பர். இதனை,

> **"முல்லை நிலம் உயர்ந்த தாழ்ந்த பகுதிகளிடையே அமைந்த மரங்கள் செறிந்த நிலப்பகுதி என்றும் ஆநிரைகளுக்குரிய பரந்த புல்வெளிகள் கொண்டது என்றும் நாகரிக வளர்ச்சிக்குக் காரணமாக அமையும் என்றும் முல்லை நிலத்தாரிடையே வழங்கிய கோன் கோல் என்ற சொற்கள் முதற்கண் முறையே ஆயர் தலைவன், ஆயர்கோல் என்றுணர்த்த வழங்கி பின்பு நாட்டு மன்னன், செங்கோல் என்ற பொருள்களை வழங்கின.''[9]**

என்பார் பி.டி.சீனிவாச ஐயங்கார்.

மனிதன் ஆரம்ப காலத்தில் மலையிலும் குகையிலும் வாழ்ந்தான். பிறகு காட்டுப் பகுதியான முல்லை நிலப்பகுதிக்குச் சென்றான். அக்காட்டில் தன்னுடைய பாதுகாப்பிற்காகவும் உணவிற்காகவும் விலங்குகளை வளர்க்கவும் கற்றுக் கொண்டான். மனிதனின் நாகரிக வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்தது முல்லை நிலமே எனலாம்.

> **"மனிதன் நாகரிகம் பெற்று வளரத் தொடங்கியது முல்லை நிலத்திலேயே ஆகும். மக்கள் ஓர் இனமாய்க் கூடிச் சமுதாயமாய் அமைந்தது முதன்முதலில்**

**முல்லை நிலத்திலாகும். அதனால் தான் முல்லை நிலத்தில் பசுக்களை மேய்ப்பதற்கு உதவும் கருவியாக, கோல் மக்களினத்தின் தலைவனுடைய ஆட்சிக்கு அறிகுறியாக அமைந்தது. அவன் ஏந்திய கோல் அவனுடைய குடிமக்கள் வணங்கும் கோலாக நின்றது''[10]**

என்பார் மு.வரதராசன்.

### மக்கள்

முல்லை நிலத்தலைவன் அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன் எனப் பெயர் பெற்றான். தலைவி, கிழத்தி எனப் பெயர் பெற்றாள். குடிமக்களுள் ஆடவர், ஆயர், கோவலர், இடையர், பொதுவர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் ஆய்ச்சியர், கோவிச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர் எனப்பட்டனர்.

**"முல்லை நிலத்தில் வாழும் மக்கள் 'ஆயர்' எனப்படுவர். 'ஆ' என்பது பசு. ஆயம் என்பது பசுத்திறன். அதை ஓமும் வாழ்ந்தவர் ஆயர் எனப் பெற்றனர் எனவும் ஆயர் என்னும் குடிப்பெயர் 'அர்' என்னும் பலர்பால் விகுதிபெற்று ஆயர் என ஆயிற்று எனவும் கொண்டு, ஆயர் என்போர் தாம் கொண்டிருந்த பசுத்திரள்களாலும் குடியாலும் பெயர் பெற்றவராவர்''[11]**

என்பார் அ.முத்துசாமி.

**"முல்லை நில மக்கள் கோவலர் எனவும் குறிக்கப்பெறுவர். கையிலே கோலைக் கொண்டிருந்த காரணத்தால் இவர்கள் கோவலர் எனவும் அழைக்கப்பட்டனர்''[12]**

என்பார் ஆ.சிங்காரவேலு முதலியார்.

## தொழில்கள்

முல்லை நிலத்து மக்கள் ஆடுமாடுகளை மேய்த்தல், தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், நெய்யுருக்குதல், பால் கறத்தல் போன்ற பல தொழில்களில் ஈடுபட்டனர். ஆயர் வாழ்க்கை முழுவதும் ஆநிரையைப் பேணிப் பாதுகாத்துப் பயன் பெறுதலை அடிப்படையாகக் கொண்டது. உழவுத்தொழில் செய்வோரும் உளர். கேழ்வரகு, திணை, அவரை முதலிய

புன்செய் தானியங்களையும் பயிரிட்டனர். உழவுத்தொழில் மேற்கொள்ளும் ஆயர்களின் நடைமுறை வாழ்க்கை ஆநிரையைப் பராமரித்து வாழ்பவர்களிடமிருந்து வேறுபட்டதாக அமைந்திருந்தது.

## நிரை மேய்த்தல்

ஆநிரைகளை அதிகாலையிலேயே ஓட்டிச் செல்லுதல், கூட்டமாகச் செல்லுதல், நிரைகளை ஓட்டிச் செல்லும்போது உணவு மற்றும் பிற பொருள்களை எடுத்துச் செல்லல், உணவுப்பொருள்களைப் பகிர்ந்துண்ணல், நிரைகளைப் புல் மிகுந்த இடங்களில் மேயவிடுதல், வேனிற்காலங்களில் பிற நிலங்களுக்கு ஓட்டிச் செல்லுதல், புல்லாங்குழல் ஊதல், மரங்களிலிருந்து தழைகளைப் பறித்துப் போடுதல், நீருக்காகப் பள்ளம்தோண்டுதல், மேய்ச்சலுக்குப் பிறகு வீட்டிற்கு ஓட்டி வருதல் அல்லது மேய்ச்சல் நிலங்களிலேயே தங்குதல், நிரைகளைப் பாதுகாத்தல் போன்றவை ஆயர்கள் நிரை மேய்த்தல் முறைகளாகும். ஆயர்கள் அறம்புரியும் நெஞ்சத்தையுடையவர்கள் என்பதை,

**‘‘அறவை நெஞ்சத் தாயர்’’ (புறம். 390:1)**

என்பார் ஒளவையார்.

ஆயர்கள் ஆநிரைகளை அதிகாலையிலேயே மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வர். இதனை,

**‘‘கன்றுவிட்டு**

**ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்**

**பெரும்புலர் விடியல்’’ (நற். 80:2–4)**

என நற்றிணை கூறுகின்றது.

ஆயர் ஆநிரைகளை ஓட்டிச் செல்லும்போது கூட்டமாகச் செல்வர் என்பதை,

**‘‘கணஞ்சால் கோவலர்’’ (அகம். 253:12)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## நீருக்காகப் பள்ளம் தோண்டுதல்

ஆயர்கள் பசுக்கள் கூட்டம் நீர் உண்ணும் பொருட்டு விளைவின்றி விடப்பட்ட தரிசு நிலத்தின்கண் கற்களை உடைத்து கிணற்றினைத் தோண்டுவர். இதனை,

**''படுமணி இளநிரை உணீஇய கோவலர்**

**விடுநிலம் உடைத்த கலுழ்கண் கூவல்'' (அகம். 321:7–8)**

**''நெடுவினிக் கோவலர் கூவல் தோண்டிய**

**கொடுவாய் பத்தல் வார்ந்துகு சிறுகுழி'' (அகம். 155:8–9)**

என்ற அடிகளின் மூலம் அறியலாம்.

## நிரைகளைப் பாதுகாத்தல்

ஆயர் கள்வர்களிடமிருந்தும் விலங்குகளிடமிருந்தும் நிரைகளைப் பாதுகாப்பர். ஆறலை கள்வர் பசுகளைத் தொழுவங்களின்றும் கவர்ந்து செல்வது உண்டு. ஆயர் பேராரவாரம் செய்து அவர்களைப் பின் தொடர்ந்து சென்று மீட்டு வருவர். இதனை,

**''அத்தக் கள்வர் ஆத்தொடு அறுத்தெனப்**

**பிற்படு பூசலின் வழிவழி யோடி'' (அகம். 7:14–15)**

என்ற அகநானூறு பாடலின்மூலம் உணரமுடிகிறது.

## மகளிரும் மேய்த்தல் தொழில் செய்தல்

ஆயர் மட்டுமல்லாது ஆயர் மகளிரும், ஆநிரைகளை மேய்ப்பதற்காக ஓட்டிச் செல்வர். ஆயர் மகளிர் கன்று மேய்த்தலை,

**''––––––––––– நாளையும்**

**கன்றாடு சேறும் புலத்து'' (கலித். 110:22–23)**

**''பாங்கருப் பாட்டங்கால் கன்றொடு செல்வேமெம்'' (கலித். 116:1)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### மோர் விற்றல்

ஆயர் மகளிர் காலையில் சென்று மோர் விற்பர். மோர் விற்றுச் செல்வம் சேர்த்தலை,

**“–––––––––––––––––––– ஆய்மகள்**

**அனை விலையுணவின் கிளையுடன் அருந்தி’’ (பெரும். 162–163)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### முல்லை மக்களின் குடியிருப்புகள்

குன்றின் அடிவாரத்தில் அமைந்த சிற்றூர்களில் முல்லை நில மக்கள் தங்கள் வாழ்க்கை முறையை நடத்தினர் என்பதனை,

**“புன்புலம் தழீஇய பொறைமுதல் சிறுகுடி’’ (அகம். 284:7)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது.

முல்லை நிலத்து மக்கள் வாழ்ந்த பகுதிகள் சேரி, பள்ளி, பாடி, குறும்பு, சீறூர் என்று வழங்கப்பட்டன. சிறுபான்மை பாக்கம் என்றும் வழங்கப்பட்டது. இதனை,

**“படுநீர்ப் புணரியின் பரந்த பாடி’’ (முல்லைப். 28)**

**“நன்றே காதலர் சென்ற ஆறே**

**குருந்தாய் கண்ணிக் கோவலர்**

**பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே’’ (ஐங். 439:1–3)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### சிறுகுடி

முல்லைப் பகுதி மேய்ச்சல் நில அமைப்பை உடையது. முல்லை நிலத்தின் இயற்கை நிலங்களுக்கு ஊடாக மக்கள் தாங்கள் வாழ்வதற்குரிய இடக் கூறுகளை உருவாக்கி வாழ்ந்தனர். காடுகளை ஊராக்கி, அவ்வூர்களில் நெடிய தெருக்களை ஏற்படுத்தி அழகிய இல்லங்களை அமைத்திருந்தனர். காட்டுப் பகுதியில் ஊரிடங்களும் சிறுகுடிகளும்

சிற்றூர்களும் இருந்தன. காடும் செந்நிலப் பெருவழியும் சூழ்ந்த முல்லை பரப்பில் சிறுகுடி அமைந்திருந்ததை,

**''பேரிசைச் சிறுகுடி'' (நற். 367:6)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

### சீறூர்

கோவலர்கள் வாழ்கின்ற கொல்லைகள் படர்ந்த குறும்புனல் சீறூரை,

**''ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்**

**அகலுள் ஆங்கண் சீறூரேரே'' (நற். 266:3–4)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

### குறுங்கால் குரம்பை

ஆயர்கள் ஆடு, மாடுகளை மேய்க்கும் தங்கள் தொழிலின் வசதிக்கேற்ப குடியிருப்புகளை அமைத்துக் கொண்டனர். ஆயர்கள் தங்கள் வாழ்விடத்திற்கு அருகில் இடத்தில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தங்கள் குடியிருப்புகளை அமைத்தனர் என்பதனை,

**''குளகு அரையாத்த குறுங்கால் குரம்பை**

**செற்றை வாயில், செந்கழிக் கதவின்**

**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**

**அதநோன் துஞ்சும் காப்பின் உதவி**

**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தளி முன்றில்**

**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**

**இருமுள்வேலி எருப்படு வரைப்பின்'' (பெரும். 147–154)**

என்னும் அடிகளால் உணரமுடிகிறது. ஆயர் குடில்கள் ஆடுகள் நின்று உண்பதற்காகத்

தழைகளைக் கயிற்றால் கட்டிய குறுகிய கால்களையுடையன ஆகும். குடிலின் மேல் உள்ள கழிகளின் மீது வரகு கற்றையால் வேயப்பட்டிருந்தன. அக்குடிலின் சிறுவாயில் பல மூங்கிலால் சேர்த்து செதுக்கப்பட்ட கதவுகளைக் கொண்டது. ஆட்டுக்கிடாயின் தோல்களைப் பாயாகப் பயன்படுத்திக் கொண்டனர். அப்பாயில் காவல் காக்கின்ற இடையன் படுத்துக்கொள்வான். வாசலின் முன்பகுதியில் செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் நீண்ட கயிற்றால் கட்டப்பட்டிருக்கும். இக்குடிலைச் சுற்றி இடுமுள்ளால் கட்டப்பட்ட வேலி காணப்படும்.

## புல்வேய்க் குரம்பை

ஆயர்களின் இல்லம் வரகுப் புல்லால் வேயப்பட்டிருக்கும். இல்லின் முற்றத்தே மத்துத் தொங்க அதனைக் கன்று வாயால் சுவைக்கும். முற்றத்துக்கு முன்பு நிழலுக்காகப் பந்தல் வேயப்பட்டிருந்தன. இதனை,

> **"தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்**
>
> **கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்**
>
> **படலைப் பந்தர்ப் புல்வேய்க் குரம்பை" (அகம். 87:3–5)**

என்ற அடிகளின் மூலம் உணரமுடிகின்றது.

## செம்மண் பூசுதல்

திருமண விழா நடைபெறும் போது ஆயர்கள் தங்கள் வீட்டில் புது மணலைப் பரப்பி வீட்டுச் சுவர்களுக்குச் செம்மண்ணைப் பூசுவர். பெண் எருமையின் கொம்பைத் தெய்வமாக வைத்து வழிபட்டுப் பின்பு மணமகனுக்கும் மணமகளுக்கும் மணம் முடிப்பர். இதனை,

> **"திருமணல் தாழப்பெய் தில்பூவ லூட்டி**
>
> **எருமைப் பெடையோ டெமரீங் கயரும்**
>
> **பெருமண மெல்லாந் தனித்தே மொழிய**
>
> **வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த**
>
> **திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த**

**ஒரு மணந் தானறி'' (கலித். 114:2–7)**

என்னும் அடிகள் உணர்த்துகிறது. ஆயர்கள் குடிலைச் சுற்றி முள்ளினால் வேலி அமைந்திருப்பர். வளைந்த கால்கள் நாட்டி பந்தலுடையதும், புதிய மட்பாத்திரம் போன்ற சிவந்த முகப்பையுடையதுமாகிய சிறிய வீடு முழுவதும் செம்மண் பூசியிருப்பர். இதனை,

**“இடுமுள் வேலி முடக்காற் பந்தர்ப்**

**புதுகலத் தன்ன செவ்வாய்ச் சிற்றில்'' (அகம். 394:8–9)**

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றது.

## தொழுவம்

மாலைப் பொழுதில் மேயச் சென்ற ஆடுகள் தொழுவத்தை வந்து அடையும் என்பதை,

**“செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை**

**பாடுஇன் தெள்மணித் தோடுதலைப் பெயர'' (நற். 321:1–2)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. சிவந்த நிலத்தையுடைய காட்டிடத்தில் புல்லிய மயிரைக் கொண்ட தெளிந்த மணிகள் கட்டப்பெற்ற ஆடுகளின் கூட்டம் தாம் மேய்வதைவிட்டு இடம்பெயர்ந்து தொழுவத்தைச் சேரும் எனச் சுட்டுகின்றன. இதன்வழி ஆடுகளைத் தொழுவத்தில் கட்டி வைத்திருந்தனர் என்பது விளங்குகிறது.

இரவு நேரங்களில் கொடிய விலங்குகள் குடிலை அணுகாமல் இருப்பதற்காகக் குடிலின் முன்னர் நெருப்பை எரித்தனர் என்பதனை,

**“மெய்யுரித் தியற்றிய மதியட் பள்ளித்**

**தீத்துணை யாகச் சேந்தனிர் கழியின்'' (மலைப். 419–420)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

## உழவுத்தொழில்

முல்லை நில ஆயர் மக்களில் சிலர் சிறந்த உழவராகவும் திகழ்ந்துள்ளனர்.

இவர்களது நடைமுறை வாழ்க்கை ஆநிரையைப் பராமரித்து வாழ்பவர்களிடமிருந்து மாறுபட்டதாகும். இதனை,

> **''சில ஆயர்குடி நாடோடியினர் தோட்டப்பயிர்களை மிகுதியாக விளைவிப்பவர்களாக உள்ளதால் மானிடவியலார் இவர்களைத் தோட்டப்பயிரிடுவோர் (Horticulturists) எனக்கூறுவர்''[13]**

என்பார் சீ.பக்தவத்சல பாரதி. முல்லை நிலத்து சங்ககால மக்கள் பால் பொருட்களை மட்டும் உற்பத்தி செய்யவில்லை. பயிர்த்தொழிலைச் செய்யக்கூடிய ஆயர்களும் இருந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன.

பெருமழை பொழிந்த விடியற்காலத்தில் முல்லை நிலத்தில் சங்ககால மக்கள் ஏர்களைக் கொண்டு உழுதனர். அவ்வாறு உழுத காலம் கார்காலம் ஆகும். இதனை,

> **''கார்கலந் தன்றால் புறவே, பலவுடன்**
>
> **ஏர்பரள் தனவால் புனமே ஏர்கலந்து'' (ஐங். 417:1–2)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வழி உணரமுடிகிறது. மேலும் உழவர்கள் சிவந்த மேட்டு நிலத்தைக் கலப்பைகளால் மண் கீழ் மேலாக மாறும்படி உழுதனர்.

பெய்த மழையால் மண் நன்கு ஈரம் படிந்து இருந்தது. அதனால் மறுபடியும் உழுதனர். இதனை,

> **''ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்**
>
> **புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து**
>
> **ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்'' (அகம். 194:2–4)**

என்று அகநானூறு கூறுகிறது.

முல்லை நில மக்கள் மேட்டு நிலத்தில் உழும்போது கொழுச்சென்ற சாலியிடத்தில் ஒளி விளங்கும் மணிபோல் இருக்கின்ற விதைகளை விதைத்தனர். இதனை,

> **''புன்புலம் வித்தும் வன்கை விளைஞர்**

சீருடைப் பல்பகடு ஒலிப்பப் பூட்டி

நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்'' (பதிற்று. 58:15–17)

என்று பதிற்றுப்பத்து கூறுகிறது. நற்றிணையிலும் ஆயர்கள் விதை விதைக்கும்போது பலமுறை உழுது பண்பட்ட புழுதி நிறைந்த கொல்லையில் வரகினை விதைத்தனர் என்று கூறப்பட்டுள்ளது. இதனை,

''விதையர் கொன்டி முதையல் பூழி,

இடுமுறை நிரம்பிய ஈர்இலை வரகின்'' (நற். 121:1–2)

என்ற நற்றிணைப் பாடலால் உணரமுடிகிறது. உழவர்கள் முற்றிய வரகை விதைகளாக எடுத்ததை இதன்வழி அறியமுடிகிறது. உழவர்கள் நிலத்தில் உழும்போதே விதைகளை சாலில் போட்டதையும் அறியமுடிகிறது.

முல்லை நிலத்துச் சிற்றூர்களில், உழுதுண்ணும் உழவர்களின் குடில் வரகு வைக்கோலால் வேயப்பட்டிருந்தது. இல்லத்தின் முற்றத்தில் பிடியின் தோற்றத்தைப் போன்ற தானியங்கள் சேமித்து வைக்கும் குதிர்கள் காணப்பட்டன. யானையின் கால் போன்ற வரகு திரிகை காணப்பட்டது. கலப்பையும் உருளைகளும் வைக்கக்கூடிய கொட்டில் இருந்தமையும், அக்கொட்டிலின் ஒரு பக்கத்தே எருதுகள் கட்டிப்பட்டிருந்ததையும்,

''பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்

களிற்றுத் தாள்புரையும் திரிமரப் பந்தர்

குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி

நெடுஞ்சுவர் பறைந்த பாமழை கடப்பக்

கருவை வேய்ந்த, கவின்குடிச் சீறூர்'' (பெரும்பாண். 186–191)

என்ற அடிகளால் அறியமுடிகிறது.

### பந்தல்

குடில்களுக்கு முன்னர் வலிமையான மரக் கால்களால் பந்தல் அமைக்கப் பட்டிருந்தது. குமிழம் பழங்களை உண்ட வெள்ளாடு துப்பிய விதைகள் பந்தலில்

காணப்பட்டன. இதனை,

**''குமிழ்உண் வெள்ளை பகுவாய் பெயர்த்த**

**வெண்காழ் தாய வண்கால் பந்தர்'' (புறம். 324:9–10)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

வீட்டின் முற்றத்தில் புதியதாகப் பந்தல் அமைக்கத் தேவையில்லை. முஞ்ஞைக் கொடியும் முசுண்டைக் கொடியும் வளர்ந்து அக்கொடிகளே பந்தல் போலக் காட்சியளித்தன. பலரும் உறங்குவதற்கு அந்நிழல் பயன்பட்டது என்பதை,

**''முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி**

**பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழல்'' (புறம். 320:1–2)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பலரும் உறங்குவதற்கேற்ப பெரிய பந்தல் போல் முஞ்சையும் முசுண்டையும் படர்ந்திருந்தது என்பதை அறியமுடிகிறது. இக்காலத்தில் முல்லை, மல்லிகை போன்ற கொடிவகைகளை வீட்டிற்கு முன், பின் பந்தல் போல் படரவிடுகின்றனர். கன்றுகளைப் பிணித்தல், விருந்தினரைப் பேணுதல், கொடி வகைகைளப் படரவிடுதல் போன்ற பலவற்றிற்கும் முற்றத்தில் அமைந்திருந்த பந்தல் பயன்பட்டது என்பதை அறியமுடிகிறது.

## வேலி

வீட்டைச் சுற்றி முல்லைக்கொடி வேலியாக இருந்துள்ளது. இதனை,

**''வேலி சுற்றிய வால்வீ முல்லை'' (அகம். 314:19)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

அழகிய குடிசைகளைச் சுற்றி முள்ளை உடைய கழல் கொடி வேலியாக அமைந்துள்ளது. இதனை, **''கழல்முள் வேலி'' (புறம். 300:1)**, பீர்க்கங்கொடி படர்ந்த வேலியை, **''பீர் இவர் வேலி'' (பதிற்று. 26:10)** என்றும் வருகின்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

வேலியில் பீர்க்கங்காய் கொடியையே அதிகம் படரவிட்டிருந்தனர் என்ற கருத்து பெறப்படுகிறது.

## முற்றம்

வீட்டு முற்றத்தில் தூண்கள் நாட்டப்பட்டு இருந்தன. தூண்கள் வீட்டுக் கூரையின் முற்பகுதியைத் தாங்கி நின்றன. தூண்களில் கன்றுகளைக் கட்டி வைத்தனர். பக்கத்து வீட்டுப் பெண் ஒருவள் வீட்டின் தூணைப் பற்றி நின்று கொண்டு நின் மகன் நெடுநாளாய் காணோமே எங்கே ? என்று வினவியதை,

**''சிற்றில் நற்றூண் பற்றி, நின்மகன்**

**யாண்டு உளனோ ? என வினவுதி'' (புறம். 86:1–2)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

## மருதம்

மருத நிலம் வயலும் வயல் சார்ந்த பகுதியும் ஆகும். காட்டு நிலப் பகுதிக்கும் கடலோர நிலப் பகுதிக்கும் இடைப்பட்ட நிலத்தை மருதம் என்பர். இப்பகுதியில் ஆற்று நீரும் பொய்கை நீரும் நிறைந்து காணப்பட்டதால் செழிப்பான வயல் நிலப்பகுதிகளாகக் காட்சியளிக்கிறது.

மேலும், மருத மரங்கள் மிகுதியாக இருந்ததால் மருதம் என வழங்கினர். மருத நிலம் நாகரிகத்தின் இருப்பிடமாக இருந்தது. மருத நிலத்தில் நீர் வளம், நிலவளம், இயற்கை வளம், வேளாண்மை வளம், செல்வ வளம் ஆகியவை நிரம்பியிருந்தன. குறிஞ்சி, முல்லை நிலத்திலிருந்து கூடுதல் நீர்வசதி கொண்ட இடமாக மருத நிலம் காணப்பட்டது. இந்நிலமானது மென்புலம், மென்பால் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**''வன்புலம் தழீஇ மென்பால் தோறும்'' (பதிற்று. 75:8)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. மருத நிலத்தை 'தண்ணடை' எனவும் வழங்குவர். (தண்ணடை – வளமான மருதநிலம்) இதனை,

**''அலமருங் கழனித் தண்ணடை ஒழிய**

**இலம்பாடு ஒக்கல் தலைவற்கு'' (புறம். 285:15–16)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

மருத நிலம் நீர் வளத்தாலும் நில வளத்தாலும் மற்ற நிலங்களை விட முன்னேற்றம் அடைந்திருந்தது. உழவுத்தொழில் சிறப்பாக நடைபெற்றது. உழவுத்தொழிலோடு தொடர்புடைய சார்புத் தொழில்களும் உருவாகின. அதனால் மருத நிலம் பொருளாதார வளர்ச்சியில் மிக உன்னதமான நிலையை எட்டியிருந்தது. இப்பொருளாதார வளர்ச்சியே வணிகர்களைத் தோற்றுவித்தது. இயற்கையைத் தமது ஆற்றலுடன் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்த மருத நில மக்கள் காட்டைத் திருத்திக் கழனியாக்கினர். ஆற்றைத் திருப்பி நீரைத் தேக்கினர். வேளாண்மையில் ஈடுபட்டனர். தங்களின் விளை நிலங்களுக்கு அருகிலேயே சற்று மேடான பகுதிகளில் ஊர்களை உருவாக்கிக் கொண்டு குடும்பம் குடும்பமாக வாழத் தலைப்பட்டனர். உணவைத் தேடி வாழ்ந்த குறிஞ்சி, முல்லை நிலமக்களைப் போலல்லாமல் இவர்கள் உணவை உற்பத்தி செய்தனர்.

> **‘‘மருதநில வளம் உணவாதாரப் பொருளாதாரத்திலிருந்து அரசுசார் பொருளாதார நிலைக்கு மாறும் சூழலை ஏற்படுத்துகின்றது. இந்நிலை மக்களின் பொருளாதாரத்தை உயர்த்திக் காட்டுகின்றது. மருதநிலப் பகுதிகளை வேந்தர்கள் ஆட்சிபுரிந்துள்ளனர். சங்க காலத்தில் மருதநில வாழ்க்கை பிற நில வாழ்க்கைகளில் எல்லாம் செழிப்பு மிக்கதாயிருந்தது. இங்குக் குழு வாழ்க்கை அழிந்து, அரசு தோன்றியது. பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ளப் பல போர்கள் நிகழ்ந்தன. ஒவ்வொரு குழுவாக அழிந்தது. கூட்டு வாழ்க்கை அழிந்து, தனிக்குடும்ப முறையும் தனிச்சொத்துரிமையும் வளர்ச்சியடைந்தபின் தனிமனித உணர்ச்சிகள் தோன்றுவது இயற்கை’’[14]**

என்பர் நா. வானமாமலை.

மருத நிலத்தில் அதிகமான மருத மரங்கள் இருந்ததால் அந்நிலத்திற்கு மருதம் எனப் பெயரிட்டனர். மருத மரம் பூ மருது, கரு மருது, வெள்ளை மருது என மூன்று வகைப்படும். அது உயரமானதாகவும் பூக்கள் நிறைந்ததாகவும் இருக்கும். பூக்கள் ஊதா நிறம் சிறிது கலந்து இளஞ்சிவப்பாக பெரிய இதழ்களுடன் இருக்கும். மருத மரங்கள் பொய்கை, ஆறு போன்ற நீர்நிலைகளின் அருகில் செழித்து வளரும் இயல்புடையது. இதனை,

"துறையணி மருதமொடு இகல் கொள ஓங்கி'' (அகம். 97:19)

"உளைப்பூ மருதத்துக் கிளைக்கு இருக்கும்'' (ஐங். 7:4)

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

### மக்கள்

மருத நிலத்துத் தலைவன் மகிழ்நன், ஊரன் எனப்பட்டான். தலைமகள் மனைவி எனப்பட்டாள். குடிமக்கள் உழவன், கனமன், கடையர் எனப்பட்டனர்; இவர்தம் மனைவியர் உழத்தியர், கடைசியர் எனப்பட்டனர்.

### தொழில்கள்

மருத நில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடா விடுதல், நெல்லடித்தல், தூற்றுதல் முதலிய பயிர்த்தொழில் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

> **"மருத நில வயல்களில் உழுதல், விதைத்தல், களையெடுத்தல், நெல் அறுத்தல், நெல் கடாவிடுதல், கரும்பு பயிரிடுதல் ஆகிய பயிர்களை உழைப்பாளர்களாகிய உழவர்கள் செய்தனர். இவர்களுக்கென சொந்த நிலமின்றி பிறருடைய நிலத்தில் உழைத்தனர். நிலவுரிமையற்ற விவசாய உழைப்பாளர்கள் செந்நெல் வினைஞர், நோன்ஞான் வினைஞர், வெந்நெல் அறிஞர், கழனி உழவர், கலிமகிழ் உழவர் என அகநானூற்று மருதப் பாக்களிலும் கைவினை மாக்கள், பகடு புறந்தருநர், மனைக்களர் எனக் குறுந்தொகை மற்றும் புறநானூற்றுப் பாக்களிலும் சுட்டப்படுகின்றனர்''[15]**

என்பார் எ.பாலுச்சாமி.

### உழுதல்

மருதநில மக்களின் தொழில் வேளாண்மை ஆகும். இருள் புலருகின்ற விடியற் காலத்தில் எருதுகளைக் கொண்ட உழவர்கள் நெற்பயிர் நட்ட கழனியில் அரிதாளையுடைய நிலவும் பிளவுபடும்படி உழுதனர். அவர்கள் ஏர் ஓட்டும்போது எழுப்பும் ஓசை இடந்தோறும் பரவியது. இதனை,

''வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்ப

கருநனை அவிழ்ந்த ஊழுறு மருக்கின்

எரிமருள் பூஞ்சினை இனச்சிதர் ஆர்ப்ப

நெடுநெல் அடைச்சிய கழனி ஏர்புகுத்து

குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர

அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்'' (அகம். 41:1–6)

''பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை

ஏர்இடம் படுத்தஇருமறுப் பூழிப்

புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து'' (அகம். 194:1–3)

என்னும் பாடல் அடிகளின் மூலம் உணரமுடிகிறது. உழவுத்தொழில் வெய்யில் வெம்மை வருவதற்கு முன் செய்யக் கூடியதாகும். அதனால் உழவர் பொழுது விடிவதற்கு முன்பாகவே வயலுக்குச் சென்றுவிடுவர். இது இன்றும் காணும் நடைமுறையாகும்.

உழவுத்தொடர்பான எச்செயலும் விடியற் காலையிலேயே தொடங்கிவிடும். உழவர் விடியற்காலையில் எழுந்து மிகவும் சுறுசுறுப்பாகச் செயல்படுவர்.

## களையெடுத்தல்

களைக்கொட்டினைக் கையிற்கொண்டு களையை வெட்டி எறிபவரைத் 'துளர் எறி வினைஞர்' என்கிறது அகநானூறு. இவர்கள் கள்ளை அருந்திக் களிப்புடன் திரிந்தனர் என்பதை,

''கோடுடைக் கையர் துளிர்எறி வினைஞர்

அரியல் ஆர்க்கையர் வினைமகிழ் தூங்க'' (அகம். 184:13–14)

என அகப்பாடல் உணர்த்தும்.

## மறுகால் உழுதல்

மருத நிலத்தில் நெல்லறுத்து விடப்பட்ட வயலை மீண்டும் உழுது ஈரமான சேற்றில்

விதைக்கும் பொருட்டு விதைகளைக் கடகப்பெட்டியில் கொண்டு வந்து விதைத்துள்ளனர். இதனை,

**''அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்**

**மறுகால் உழுத ஈரச் செறுவின்**

**வித்தொடு சென்ற வட்டி பற்பல'' (நற். 210:1–3)**

என்ற பாடல் தெரிவிக்கின்றது. உழவர்கள் மறுகால் உழவு செய்யும் மரபு இப்பாடலினால் வெளிப்படுகிறது.

## காவல் காத்தல்

நெற்பயிரைத் தின்ன வரும் கால்நடைகளை ஓட்டுவதற்கும் வயலைக் காவல் செய்யவும் காவலர் இருந்தனர். அக்காவலர்கள் நெல்லின் இளங்கதிரைத் தின்னும் பசுவின் பசியினைப் பார்த்து அதற்குக் கரும்பினை உண்பித்துப் பின்னர் பாகர் கொடியறுத்து, அத்துடன் பகன்றைக் கொடியையும் சேர்த்துக் காஞ்சி மரத்தில் கட்டி வைத்தனர். இதனை,

**''செழுஞ்சேய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்**

**மூதா தின்றல் அஞ்சி காவலர்**

**பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பறீஇ**

**காஞ்சியின் அகத்து கரும்பு அருத்தியாக்கும்'' (அகம். 156:3–6)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

## நெல் அறுவடை

நெல்லறுக்கும் உழவர் 'தொழுவர்' எனப்படுவர். இவர்களைக் 'களமர்' என்றும் கூறுவர். கூரிய வாயுடைய அரிவாளால் நெல்லினை அறிவர். இதனை,

**''நெல்லரி தொழுவர் கூர்வாள் உற்றென'' (நற். 195:6)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது.

அறுவடை செய்யத் தொடங்கும்போது அக்கழனிகளில் வாழும் பறவை முதலிய சிற்றுயிர்கள் ஓடி உய்தற்பொருட்டுப் பறையை முழகி, தண்ணுமை என்னும் கருவி கொட்டுவர் என்பதை,

**“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ’’ (மலைபடு. 471, நற். 350:1)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது.

## நெற்கட்டுகளும் நெற்களமும்

நெல்லினை அறுத்த பிறகு நெற்கதிர் கட்டுக்களை இறுக்கிக் கட்டிக் களங்களுக்குக் கொண்டு சென்றனர். இதனை,

**“அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு**

**கள்ளார் வினைஞர் களந்தொறும் மறுகும்’’ (அகம். 84:12–13)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது.

## மருத மக்களின் குடியிருப்புகள்

மருத நில மக்களின் வாழிடம் ‘ஊர்’ எனப்பட்டது. அவற்றின் பெருமை, சிறுமை கருதி பேரூர், சிற்றூர் எனப் பெயர் பெற்றன என்பதை,

**“பேரூரும் சிற்றூரும் கௌவை எடுப்பவர்’’ (கலித். 109:6)**

எனும் கலித்தொகைப் பாடலடியின் மூலம் அறியலாம். மனிதனின் முதன்மைத்தேவை உண்ண உணவும் உடுத்த உடையும் இருக்க இடமுமாகும். இவற்றில் மனிதன் ஓரிடத்தில் தங்கிக் குடும்பமாகச் சேர்ந்து வாழ்வதற்கு இருப்பிடம் முதன்மையாகக் கருதப்படுகிறது.

மருத நிலத்துப் பேரூர்களில் உள்ள ஒவ்வொரு மனையும் வளம் கொழிக்கும் மனைகளாகவே இருந்துள்ளன. ஆதலின் அவ்வூரில் உள்ளோர் பசி என்பதை அறியார். பசித்துயர் போக்க அவ்வூரைவிட்டுப் பிரிந்து வேற்றிடத்திற்குப் போக விரும்பமாட்டார்கள். அப்பேரூர்களின் பெருமையினை,

**“பகட்டுஆ ஈன்ற கொடுநடைக் குழவிக்**

கவைத்தாம்பு தொடுத்த காழ் ஊன்றுஅல்குல்

ஏணி எய்தா நீள்நெடும் மார்பின்

முகடுதுமித்து அடுக்கிய பழம்பல் உணவின்

குமரிமூத்த கூடு ஓங்கு நல்லில்;

தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த

ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்

தளர்நடை வருத்தம் வீட, அலர்முலைச்

செவிலியம் பெண்டிர்த் தழீஇப் பால்ஆர்ந்து

அமளித் துஞ்சும் அழகுடை நல்லில்

தொல்பசி அறியா துளங்கா இருக்கை

மல்லல் பேரூர், மடியின், மடியா

விளைஞர் தந்த வெண்ணெல் வல்சி

மனைவாழ் அளகின் வாட்டொடும் பெருகுவீர்'' (பெரும். 243–255)

மருத நில ஊர்களைச் சுற்றிலும் குளிர்ந்த வயல் வரப்புகள் காணப்பட்டன. செந்நெல், வெண்ணெல் முதலிய பல்வகை உணவுப் பொருட்களும் கொண்ட நெற்கூடுகள் (குதிர்கள்) வீடுகளில் இருந்தன. அந்த இல்லங்களின் அருகில் உழவர்க்கு இன்றியமையாத மாட்டுச் செல்வங்களும் தொழுவங்களில் இருந்தன. பசுக்கள் ஈன்ற கன்றுகள் நெட்டிய தாம்புகள் நட்ட தறிகளில் பிணிப்புண்டு கிடந்தன. தச்சச் சிறுவர் பிறர் விரும்பும் படியாக அமைத்த தேர்களை மருதநிலச் சிறுவர்கள் உருட்டி விளையாடித் திரிந்தார்கள். மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பல்பொருளும் நிரம்பியிருந்ததால் இவ்வூரார் பசியினை அறியாதிருந்தனர்.

## எளிய உழவர்தம் குடிசைகள்

மருத நிலத்தில் வளமுடைய உழவர்களின் வீடுகளும் எளிமையான உழவர்களின் குடிசைகளும் என இருவேறுபட்ட வாழிடங்கள் இருந்துள்ளன. எளிமையான உழவர்களின் குடிசைகள் புதிய வைக்கோலாலும் தென்னங்கீற்றாலும் வேயப்பட்டிருந்தன.

தென்னங்கீற்றால் வேயப்பட்ட குடிசைகள் தனித்தனி வீடாக அமைந்திருந்தது. படப்பை என்றால் வீட்டுத்தோட்டம் என்று பொருள். பண்டைத் தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தியவர்கள். படப்பைக்குத் தேவையான இடம்விட்டு இல்லிடத்தைக் கட்டினர். இதனை,

**‘‘––––––––– –––––––– துறைஅடிக்**

**குன்றுவிறழ் யானை மருங்கல் ஏய்க்கும்**

**வன்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த**

**மஞ்சள் முன்றில் மணம்நாறு படப்பை**

**தண்டலை உழவர் தனிமனைச் சேப்பண்**

**தாழ்கோட் பலவின் சூழ்’’ (பெரும். 351–356)**

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

தண்டலை உழவர்களின் வீடுகள் உடல் போன்ற அடியினையும், குன்று போன்ற தோற்றத்தினையும் உடைய யானையின் உடம்பு போன்று சருச்சரையையுடைய வாடிய தென்னை மட்டையால் வேயப்பட்டிருந்தது. வீட்டின் முற்றத்தில் மஞ்சள் வளர்க்கப்பட்டன. பலவகை மணங்களையுடைய மலர் தோட்டங்கள் இருந்தன. வீடுகள் தனித்தனியாகச் சோலையின் நடுவில் இருந்தனர் என்று பெரும்பாணாற்றுப்படை வழி அறியலாம்.

மருத நிலத்தில் வாழ்ந்தவர்கள் வயல் வரப்புகளிலேயே வீடுகளை அமைத்து வாழ்ந்தனர். வயல் வரப்பு அருகே புதிய வைக்கோலால் வேயப்பட்ட அழகிய வீட்டையும் அமைத்துள்ளனர். வீட்டின் முன்பகுதியில் அமருவதற்கேற்ப இடத்தை அமைத்து அங்கே அவல் இடித்து உண்டனர் என்பதனை,

**‘‘புதுவை வேய்ந்த கவிகுயில் முன்றில்’’ (பெரும். 225)**

என்ற பாடலடி மூலம் அறியலாம். இன்றும் உழவுத்தொழில் செய்வோர் வயல் வரப்பிலேயே தமது உறைவிடங்களை அமைத்துள்ளனர். தொழில் நுட்பத்தால் முன்னேற்றம் பெற்றபோது மக்களின் இருப்பிட அமைப்பும் மாறுபட்டது.

கரும்புகளைக் கழிகளாகப் பயன்படுத்தி செந்நெற்கதிர்களைக் கூரையாக வேய்ந்தனர் என்பதை,

**‘‘அலங்கு செந்நெற் கதிர் வேய்ந்த**

**ஆய் கரும்பின் கொடிக் கூரை’’ (புறம். 22:14–15)**

என்னும் அடிகளால் அறியலாம்.

## அகன்மனை

நெல் நிறைந்த பெரிய குடிலில் ஒரு பெண் இரட்டைக் கதவின் மேல் சாய்ந்து கொண்டு தனிமையில் இருந்ததை,

**‘‘பெருந்திரு நிலைஇய வீங்குசோற்று அகன்மனை**

**பொருந்துநோன் கதவு ஒற்றிப் புலம்பியாம் உலமர்’’ (கலி. 83:1–2)**

என்ற கலித்தொகைப் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## தொழுவம்

வீடுகளுக்கு அருகில் உழவர்களுக்குப் பயன்படும் மாடுகளைக் கொண்ட தொழுவங்கள் இருந்தன. எருமையின் கன்றுகள் தூண்களில் கட்டப்பட்டிருந்தன. இதனை,

**‘‘தடமருப்பு எருமை மடநடைக் குழவி**

**தூண்தொறும் யாத்த காண்தகு நல்இல்’’ (நற். 120:1–2)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. மருத நிலத்தில் உழவர்கள் வாழ்கின்ற வீடுகளும் வீடு சார்ந்த மாட்டுக் கொட்டகைகளும் நிறைந்து காணப்பட்டன. வீட்டின் அருகே மாடுகளைக் கட்டுவதற்குரிய தறிகள் இருந்தன.

இக்கூற்றால் வீடும் வீடமைக்கப்பட்டுள்ள இடத்தில் வேளாண் தொழிலுக்குரிய மாடுகள் கட்டப்பட்டிருந்தன என்பதும் தெளிவாகின்றன. கொட்டங்கள் நிறைந்திருந்த மேல் பகுதியுடையனவா ? அல்லது கூரையுடன் கூடியனவா ? என்பதை அறியமுடிகிறது.

## பந்தல்

திருமண விழாவின்போது வீட்டின் முற்றத்தில் புதுமணல் பரப்பினர். புதுமணல் பரப்பிய இடங்களில் கால் நட்டு மணப்பந்தல் போட்டுச் சுற்றிலும் மாலைகள் தொங்கவிட்டு விதானமாகிய பந்தல் அமைத்து விளக்குகள் ஏற்றப்பெற்றன.

**‘‘உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**

**பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்**

**தண்பெரும் பந்தர்த்தரு மணல் ஞெமிரி,**

**மனைவிளக் குறுத்து மாலை தொடரி’’ (அகம். 86:1–4)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம். கூவைத் தழையால் வேயப்பெற்று நான்கு கால்களைக் கொண்டு பந்தல் அமைத்தனர். இதனை,

**‘‘கூவை துற்ற நாற்கால் பந்தர்’’ (புறம். 29:19)**

என்ற பாடலடி மூலம் அறியமுடிகிறது. புன்னையின் கொம்பால் அமைக்கப்பட்ட பந்தலில் பசுங்காய்கள் தொங்குவதை,

**‘‘கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்’’ (பெரும். 266–267)**

என்ற அடிகளில் பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது.

சிறிய கால்களைக் கொண்ட பந்தலில், செழுமையான கன்றுகளைப் பிணித்துள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. இதனை,

**‘‘செழுங்கன்று யாத்த சிறுதாட் பந்தர்’’ (பெரும். 297)**

என்ற அடி உணர்த்துகிறது.

## நெய்தல்

கடலாலும் மணலாலும் சூழ்ந்த பகுதிகளை நெய்தல் நிலம் என்பர்.இலக்கியங்களில்

நெய்தல் என்பது பெரும்பாலும் நெய்தல் நிலப் பகுதியில் வளரும் நெய்தல் கொடியினைக் குறித்தே வருகிறது. இம்மலரினது இயல்புகளை,

> **“நெய்தல் என்பது ஒரு நீர்ப்பூக்கொடி; இதனாலே கடல் சார்ந்த நிலம் நெய்தல் நிலமெனப் பட்டதென்பர் ஒரு சாரார். இக்கொடி திரண்ட தாளையும், பசிய இலையையும், நறுமணமுள்ள பூவையுடையது. இதன் இலை யானைக்கன்றின் காதிற்கும், இதன் முகிழ் மாணாக்கர் குடுமிக்கும், இதன் பூவிதழ் வேலுக்கும் உவமையாய் வந்துள்ளன’’[16]**

என்பார் தி.முத்துகண்ணப்பன். நெய்தல் கொடி கடலைச் சார்ந்த உப்பங்கழியிலும், நன்னீர் நிலைகளிலும் வாழும். நெய்தல் கொடிக்கு இலக்கியங்கள் கருங்குவளை, கரு நெய்தல், நீலம், பானல், சிந்திவாரம், நீலப்பூ எனப் பல பெயர்களை வழங்குகின்றன. இதன் மலர்களைப் பெண்களின் கண்களுக்கு உவமையாகச் சிறப்பிப்பர். விழாக்காலங்களில் மகளிர் நெய்தல் இலைகளைக் கொண்டு தழையணி செய்வர் என்ற செய்தி அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

> **“நனைத்த நெய்தல் கண்போல் மாமலர்’’ (அகம். 150:8)**
>
> **“சிறுகரு நெய்தற் கண்போல் மாமலர்’’ (அகம். 230:2)**
>
> **“பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்**
>
> **விழவுஅணி மகளிர் தழைஅணிக் கூட்டும்’’ (அகம். 70:11–12)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம்.

தொல்காப்பியர் **“வருணன் மேய பெருமணல் உலகம்’’**[17] என்று நெய்தல் நிலத்தைக் குறிப்பார். நெய்தல் நிலத்தைப் பெருமணல் உலகு என்றதன் காரணம் கடல் சார்ந்த பகுதிகள் பெரும்பாலும் மணற்பகுதியாகக் காணப்படுவதே ஆகும். நெய்தல் நிலம் ஒருபுறம் பரந்த நீர்ப்பரப்பைக் கொண்டது. மற்றொருபுறம் பரந்த மணற்பரப்பைக் கொண்டது. இவ்வமைப்பு நெய்தல் நிலத்தைப் பிற நிலங்களிலிருந்து முற்றிலும்வேறான நிலமாகக் காட்டுகின்றது.

**மக்கள்**

நெய்தல் நிலத் தலைவன் சேர்ப்பன், புலம்பன், கொண்கன், துறைவன் எனப்பட்டனர்.

குடிமக்கள் பரதவர், வலையர், அளவர், நுளையர் எனப்பட்டனர். பெண்கள் பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனப்பட்டனர்.

> **''பரதவர் என்ற சொல் 'பர' என்ற பகுதி அடியாகப் பிறந்த பரவை (கடல்) என்ற சொல்லோடு தொடர்புடையது. பரவை, பரப்பு என்ற சொற்கள் விரிதல் என்று பொருள்படும். பொருட் சிறப்புக் குறிக்கும் 'து' என்ற உறுப்புப் 'பர' என்னும் அடிச்சொல்லோடு சேரப் 'பரது' என்ற சொல் பிறக்கும். இதனோடு 'அர்' விகுதி சேர்த்தமையால் 'பரதர்' என்னும் சொல் பிறந்திருக்கலாம்''[18]**

என்பார் மொ.அ. துரை அரங்கசாமி.

## தொழில்கள்

மீன் பிடித்தல், மீன் விற்றல், உப்பு விளைவித்தலும் விற்றலும், முத்தெடுத்தல், வாணிகத்தொழில் முதலிய தொழில்களில் பரதவ மக்கள் ஈடுபட்டனர்.

### மீன் பிடித்தல்

பரதவர் தோணியில் சென்று மீன் வேட்டையாடுதலை,

> **''வான்வாய்ச் சுறவின் பணித்துறை நீந்தி**
>
> **நாள்வேட்டு எழுந்த நயனில் பரதவர்**
>
> **வைகுகடல் அம்பி ..........'' (அகம். 187:21–23)**

என்ற அகநானூறு பாடலடிகளின் மூலம் அறியலாம்.

பரதவர் கடல், கழிமுகங்கள் என்ற இரண்டு இடங்களில் மீன் பிடித்தனர். கடலில் மீன் பிடிக்கும்போது பெருவலைகளைப் பயன்படுத்தி மீன் பிடித்தனர். மீன் பிடித்தலை மீன் வேட்டம் என்றே குறிப்பிடுகின்றனர்.

காற்று கடுமையாக வீச, பரதவர் அக்காற்றுக்கு ஏற்பத் தோணியைப் பதமாய் இயக்கிக் கொண்டிருந்தனர். அளவற்ற சுறாமீன்கள் அகப்பட்டன. இரவு முழுவதும் தூண்டிலைக் கொண்டு வேட்டையாடிப் பின்னர் வைகறைப் பொழுதில் மீன் வளத்தோடு கரை திரும்பினர் என்பதை,

**“………………….. வளைநீர்க்**

**கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்**

**வாங்குவிசை தூண்டில் ஊங்கு உளங்குஆகி**

**வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்**

**நீல்நிற விசும்பின் மீனொடு புரைய’’ (நற். 199:5–9)**

என்ற நற்றிணைப் பாடலின் அடிகளின் மூலம் அறியலாம்.

## மீன் விற்றல்

கடலில் மீன் பிடிக்கும் படகினைக் கொண்டு தமையன்மார்கள் வலை விரித்துப் பிடித்துவந்த மீன்களைத் தழையாடை உடுத்திய தங்கைமார், திருவிழா நடைபெறும் தெருக்களில் விற்று வருவர். இதனை,

**“ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொண்டு**

**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**

**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்**

**விழவுஅயர் மறுகின் விலைஎனப் பகரும்,**

**கானல்அம் சிறுகுடி’’ (அகம். 320:1–5)**

என்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகின்றது.

## உப்பு விளைவித்தல்

பரதவர் உப்பு விளைவித்தல் தொழிலில் ஈடுபட்டனர். பரதவர் உப்பளத்தில் சிறுசிறு பாத்திகளில் உப்பினை விளைவிப்பர். இதனை,

**“காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்’’ (அகம். 365:5)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

பரதவர் உப்பினை ஏரால் உழாமலே கையால் பாத்தி கட்டி விளைவித்துள்ளனர்.

இதனை,

**“உவர்வினை உப்பின் உழாஅ உழவர்’’ (நற். 331:1)**

**“இருங்கழிச் செநறன் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பு’’ (அகம். 140:2–3)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

> **“கடற்கரையிலும், கழிக்கரையிலும் உள்ள உலர் நிலத்தில் சிறுசிறு பாத்திகளமைத்து அவற்றில் கடல் நீரினையும், உப்பங்கழி நீரையும் பாய்ச்சி உப்பு விளைவிப்பர். சிலவிடங்களில் உவர் நிலத்தடியிலேயே மிகுந்த உப்புச் சத்துள்ள நீரூற்றுக்கள் உள்ளன. அங்கெல்லாம் அந்நீரை வெளியே கொணர்ந்து பாத்திகளில் பாய்ச்சுவர். ஞாயிற்றின் வெம்மையால் நீர் வற்றி உப்புப் பூத்துக்காணும். இவ்வாறு விளையும் இடங்கள் உப்பளம் என வழங்கப்பெறும்’’[19]**

என்பார் தி.முத்து கண்ணப்பன்.

## முத்தெடுத்தல்

பரதவர் பகலில் பெரிய கடற்பரப்பில் சுறா மீனை ஒதுக்கி முத்தினை மூழ்கி எடுத்து அம்முத்தினை விலை கூறி விற்பர். இதனை,

**“வலைபடு முத்தம் பரதவர் பகரும்’’ (ஐங். 195:1)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## வணிகத் தொழில்

கடல் தந்த ஒளிமிகு முத்துக்களும், வாரளம் கொண்டு அறுக்கப்பட்ட நேரியதாய் விளங்கும் வளைகளும் பரதர் கொண்டு வந்த பல்வேறு பண்டங்களையும் பற்றி,

**“முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை**

**பரதர் தந்த பல்வேறு கூலம்'' (மதுரைக். 315–317)**

என்ற மதுரைக்காஞ்சி அடிகளின் மூலம் அறியலாம்.

பரதவர் வாணிகத் தொழிலும் ஈடுபட்டிருந்தனர். இதனை,

> **"வாணிகத்தொழில் புரிபவர் வணிகர் எனப்பட்டனர். பரதவர்கள் மீன், உப்பு, சங்கு, முத்து இவற்றைக் கொண்டு வணிகம் செய்வதால் அவர்களும் வணிகர்களே. வாணிகர்களுக்குப் பொதுவாகச் 'செட்டி' என்ற பட்டம் உண்டு. அவர்கள் பெயருக்கு இறுதியில் இச்செட்டி என்ற பட்டப்பெயரையும் சேர்த்தே வழங்குவர். அங்ஙனமே பரதவர்களில் ஒரு பகுதியினரான பட்டினவர் என்பார் இன்றும் 'செட்டி' என்ற பட்டத்தையே தம் பெயருக்குப் பின் சேர்த்து வழங்குகின்றனர். பூணூல் அணியும் வழக்கமும் சிலர் மேற்கொண்டுள்ளனர்''[20]**

என்பார் தி.முத்து கண்ணப்பன்.

நெய்தல் நில மக்கள் கடற்கரையை அடுத்துள்ள பெருமணல் பரந்த மேட்டு நிலங்களில் குடியிருப்புகளை அமைந்திருந்தனர். இக்குடியிருப்புகள் சிறுசிறு குடில்களாகக் காட்சியளித்தன. பரதவர்கள் வாழ்ந்த குடியிருப்புகள் உள்ள பகுதிகள் சிறுகுடி, பாக்கம், பட்டினம் என்று அழைக்கப்படுகின்றன. பரதவர்கள் தாங்கள் வசிக்கும் இருப்பிடத்தைக் களர், அளம், குப்பம், கரை, துறை, காயல், கானல் எனப் பல பெயர்களில் குறிப்பிட்டுள்ளனர். இதனை,

> **"நெய்தல் நிலத்தில் சிற்றூர்களும், பேரூர்களுமுண்டு. இவை பட்டினம், குப்பம், ஆயம், பாக்கம் என அழைக்கப்படும்''[21]**

என்பர் அஷோக்குமார்.

நெய்தல் நில ஊர் பாக்கம், பட்டினம் என்று பிரிக்கப்பட்டுள்ளது. பாக்கம் என்பது பரதவர் குடியிருப்புகள். பட்டினம் என்பது செல்வந்தர்களும் வணிகர்களும் வாழும் குடியிருப்புகள்.

“கடற்கரை ஓரங்களில் இவர்கள் வாழ்ந்த குடியிருப்புகள் பட்டினம் எனப்படும். சிறு குடியிருப்புகள் பாக்கம் எனப்படும்’’[22]

என சு.வித்தியானந்தன் அவர்கள் நெய்தல் நில மக்களின் குடியிருப்புப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

## சிறு குடில்கள்

சிறு குடில்களில் புலால் நாற்றம் உடைய மணல் பரந்த முற்றம் அமைந்திருந்தது. அக்குடில்கள் உள்ள பகுதியில் வழிகள் ஒழுங்காய் அமைந்திருந்தன. வழிகளில் நீல மணிகளின் குவியலைப் போன்று நெய்தல் மலர்கள் காணப்பட்டது. இதனை,

**“அலவன் ஆடிய புலவுமணல் முன்றிற்**

**காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்**

**ஆயமணி பொதிஅவிழ்ந் தாங்கு நெய்தல்’’ (நற். 239:4–6)**

என்ற பாடல் அடிகளின் மூலம் உணரமுடிகின்றது.

## புலால் நாற்றம்

சிறுகுடியிருப்புப் பகுதிகளில் புலால் நாற்றம் மிகுந்து காணப்பட்டது. புலால் நாறும் தெருக்களைக் கொண்ட சிறிய குடியிருப்புகளை உடைய பாக்கத்தில் பரதவர்கள் வாழ்ந்ததை,

**“புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து**

**இனமீன் வேட்டுவர்’’ (அகம். 270:2–3)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது. கொழுத்த மீன்களைச் சுடுவதால் எழுகின்ற புகையானது தெருக்கள் முழுதும் கலந்து நிற்கும் என்பதை,

**“கொழு மீன் சுடுபுகை மறுகினுள்’’ (நற். 211:6)**

என்னும் நற்றிணை பாடல் விளக்குகிறது.

புலால் மூலம் வீசும் மணற்பரப்பு மிக்க இடங்களில் புன்னை மரங்கள் காணப்பட்டன என்பததை,

**"புன்னை ஓங்கிய புலால் அம்சேரி" (குறுந். 351:6)**

என்ற பாடலடி மூலம் அறியலாம்.

> **"நெய்தல் மக்களின் வாழிடம் புலால் நாற்றம் உடையதாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இப்புலால் நாற்றத்தின் காரணமாக மீன்பிடித்தொழில் செய்பவர்கள் சமூகப்படிநிலை அமைப்பில் கீழ்நிலையினராகக் கருதப்பட்டனர். புலால் நாற்றம் என்பது நெய்தல் பகுதியின் பண்பாட்டு நிலைக்களன் சார்ந்த பண்பு எனலாம்"[23]**

என்பார் ஞா.ஸ்டிபன்.

உப்புப்பாத்திகளுக்கு அருகே கடற்கரைச் சோலையால் சூழப்பெற்ற சிறிய குடியிருப்புகள் இருந்தன என்பதை,

**"நேர்கண் சிறுதடி நீரின் மாற்றி**

**வானம் வேண்டா உழவின்எம்**

**கானல் அம் சிறுகுடி" (நற். 254:10–12)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

## குறியிறைக் குரம்பை

முள்ளிச் செடிகளால் வேய்ந்த சிறிய கூரைகளையுடைய குடில்கள் இருந்தன. அக்குடில்களைச் சுற்றித் தாழை மரங்களை வேலியாக அமைத்தனர் என்பதனை,

**"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை**

**முண்டம் வேய்ந்த குறியிறைக் குரம்பை" (நற். 207:1–2)**

என்ற நற்றிணைப் பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பினையுடைய குடிசைகளில் வாழ்ந்தனர் என்பதனை,

**“குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்” (அகம். 210:1)**

என்ற அகநானூறு அடியின் மூலம் அறியலாம்.

## அழகான இல்லம்

பரதவ மகளிர் பரந்த உப்பங்கழிப் பகுதியிலிருந்து பறித்து வந்த மணமிக்க நெய்தல் மலர்களைக் கொண்டு துறையிலுள்ள சிறிய இல்லத்தை அழகுப்படுத்தினர். இதனை,

**“ஒள்நுதல் மகளிர் ஓங்கு கழிக்குற்ற**

**கண்நேர் ஒப்பின கமழ்நறு நெய்தல்**

**அகல்வரிச் சிறு மனை அணியும்” (நற். 283:1–3)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

மீனவரின் வாழ்விடமானது சிறப்புக்குரியது. அப்பகுதியில் கிடைக்கக்கூடிய வேர்க்கோல், வெண்கோடு, தாழை, நார், தருப்பைப்புல் ஆகிய இயற்கையான ஆதாரங்களைக் கொண்டு குடிசைகள் அமைக்கப்பட்டிருந்தன. குடிசையின் முற்றத்தில் மீன்பிடிக்கப் பயன்படும் பறி என்ற கருவியும் புன்னை மரத்தின் கொம்புகளால் கட்டப்பட்ட பந்தலும் இருந்தன. குடியிருப்பை ஒட்டியிருக்கும் குளத்தில் மீனவர்கள் தம் மக்களோடும் மகளிரோடும் மீன் இறால் ஆகியவற்றைப் பிடிக்கும் காட்சியை,

**“வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ**

**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**

**குறியிறைக் குரம்பை பறியுடை முன்றில்**

**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மண பந்தர்**

**இணையரும் பகழியும் சிலையும் மான**

**செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்**

**மைஇரு குட்டத்து மகவொடு வாங்கி**

**கோடை நீடினும் குறைபடல் அறியாத்**

**தோள்தார் குளத்த கோடு காத்திருக்கும்**

**கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின'' (பெரும். 263–273)**

என்ற பாடலடிகளால் உணரலாம்.

கடல்சார் நிலத்து வாழ்வோர் வேழக்கோலை நிரல்படச் சார்த்தி வெண்மையான மரக்கொம்புகளை இடையிடையே கலந்து தாழை நாராலே கட்டி அதற்கு மேல் தருப்பைப் புல்லால் வேய்ந்து குறிய இறப்பை உடையவனவாகக் குடியிருப்பை அமைத்திருந்தனர். அக்குடிலின் முற்றத்தில் நெய்தல் நில மரமாகிய புன்னையின் வளைந்த காலையுடைய மரத்தை வெட்டிப் பந்தலை அமைத்தனர். அப்பந்தலில் சுரை, பாகல் போன்ற கொடிகள் படர்ந்திருந்தன. அக்கொடிகளில் பசுமையான காய்கள் தொங்கிக் கொண்டு இருந்தன. அப்பந்தலின் அடியில் மணலைப் பரப்பினர். அப்பந்தல் அழகுமிக்கதாகக் காட்சியளித்தது. அப்பந்தலில் இளையவர்களும் முதியவர்களும் தங்கள் சுற்றத்தாருடன் கூடியிருந்து மகிழ்வர். புலால் நாறும் முனையினையுடைய அம்பையும் வில்லையும் ஒப்ப சிவந்த வரிகளையுடைய கயல்களோடு பசிய இறால்கள் புரளும் கருமையான பெரிய குளங்களிலே பிள்ளைகளோடு உலாவி, மீன் பிடிப்பர். கோடைக்காலம் நீடித்தாலும் வற்றாத குளத்தின் கரையைக் காவல் செய்திருப்பர். வலைஞர் இருப்பிடம் கடற்கரையில் அமைவதால் உண்ணும் நீர் பெறும் பொருட்டு குளம் தோண்டிப் பேணுவர். அக்குளத்தில் களவாக மீன்பிடித்துக் கலக்காமல் காவல் செய்யும் வழக்கம் இருந்துள்ளது.

பரதவர் இருப்பிடங்கள் தனித்துவமாய் இருந்தன. தொழில் நிலையான கருவிகளும் தொழில் நடைமுறைகளும் இருப்பிட அமைப்பில் முக்கிய இடம் பெற்றன. இதனை,

**''கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி**

**நடுகல்லின் அரண் போல**

**நெடுந்தூண்டிலில் காழ்சேர்த்திய**

**குறுங்கரைக் குடிநாப்பண்;**

**நிலவு அடைந்த இருள் போல**

**வலை வணங்கும் மணல் முன்றில்**

**வீழ்த் தாழைத் தாள் தாழ்ந்த**

**வெண் கூதாளத்துத் தண்பூள் கோதையர்**

**சினைச் சுறவின் கோடு நட்டு**

**மனைச் சேர்ந்திய வல் அணங்கினான்'' (பட்டினப். 78–87)**

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

## முற்றம்

வீட்டின் முன்புறம் 'முற்றம்' என்றும் 'முன்றில்' என்றும் கூறப்பட்டது. பரதவர்கள் வீட்டு முற்றத்தில் மணல் பரப்பப்பட்டிருக்கும்; புலால் நாற்றம் வீசும்; நண்டுகள் விளையாடும் என்பதை,

**''அலவன் ஆடிய புலவு மணல் முன்றில்'' (நற். 239:4)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

கடற்கரைச் சோலை பனைமரங்கள் மிக்கனவாகவும், மணற் பரப்பியதாகவும் விளங்கியதை,

**''பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை'' (நற். 123:7)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

கூர்மையான உளியால், விசையுடன் எறிந்தமையால் பரதவர்களுடைய மீன்பிடி வலைகள் கொல்லும் தொழிலுடைய சுறா மீன்களால் கிழிக்கப்பட்டுள்ளன. அவ்வலைகள் பரதவர்கள் வீட்டின் முற்றத்தில் தாழ்ந்து வளர்ந்து தாழை மரங்களின் மீது இட்டு வைக்கப்பட்டிருந்ததை,

**''எல்லுத் தொழில் வல்வினைப் பரதவர்**

**கூர்உளிக் கடுவிசை மாட்டலின், பாய்புஉடன்,**

**கோட்சுறாக் கிழித்த கொடிமுடி நெடுவலை**

**தண்கடல் அசைவளி எளிதொறும் விளைவிட்டு,**

**முன்றில் தாழைத் தூங்கும்'' (அகம். 340:19–23)**

என்ற அகநானூறு பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

முன்றிலில் புன்னை மரமும், தாழை மரமும் இருந்தன. அவற்றின் மணம் எங்கும் பரவின என்பதை,

**''புன்னை மாச்சினை நறுவில்**

**முன்றில் தாழையொடு கமழும்'' (நற். 8–9)**

என்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகிறது.

இனிய குடியிருப்புகள் நிறைந்த சிற்றூரில் தொங்கும் ஓலையையும் நீண்ட மடலையும் உடைய பனை மரத்தின் அடிமரம் புதையும்படி மணல் மூடிய முற்றம் அமைந்திருந்தது. அம்முற்றத்தில் விருந்தினர்க்கு உணவுப் பொருளைப் பகுத்துக் கொடுத்து வாழ்ந்தனர். இதனை,

**''தூங்கல் ஓலை ஓங்குமடற் பெண்ணை**

**மாஅரை புதைத்த மணல்மலி முன்றல்**

**வரையாத் தாரம் வருவிருந்து அயரும்**

**தன்குடி வாழ்நர் அங்குடிச் சிறூர்'' (நற். 135:1–4)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

## வேலி

வீட்டைச் சுற்றிலும் வேலிகள் கட்டப்பட்டிருந்தன. அவ்வேலிகள் செயற்கையாக ஏற்படுத்தப்பட்டதாகவும், இயல்பாக வளர்ந்த தாழை, பனை ஓலை முதலிய மரங்களாலும் சூழப்பட்டிருந்தது. பனை மரங்கள் கடற்கரைப் பகுதியில் அதிகமாகக் காணப்பட்டதால் அம்மரப் பொருட்களைப் பயன்படுத்தி வீட்டுக்கு வேலி அமைத்திருந்தனர். இதனை,

**‘‘ஆடுஅறை ஒழித்த நீரு இரும் பெண்ணை**

**வீழ் காவோலைச் சூழ்சிறை யாத்த**

**கானல் நண்ணிய வார் மணல் முன்றில்’’ (நற். 354:2–3)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

தாழை மரங்களை வேலியாக உடைய தோட்டங்கள் ஊர்ப்பகுதியில் இருந்ததை,

**‘‘கண்டல்வேலிக் கழிசூழ் படப்பை**

**தென்கடல் நாட்டு’’ (நற். 363:1–2)**

**‘‘கண்டல் வேலிக் கழிநல் ஊர்’’ (நற். 372:13)**

என்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகிறது.

கலங்கிய நீரை உடைய உப்பங்கழி சூழ்ந்த தோட்டங்களைக் கொண்ட காண்டவாயில் என்னும் ஊரில் முற்றிய பனையோலையோடு முட்களைச் சேர்த்துக் கட்டிய வேலிகள் இடப்பட்டிருந்தன. இதனை,

**‘‘கழிசூழ் படப்பைக் காண்ட வாயில்**

**ஒலிகா வோலை முள்மிடை வேலி’’ (நற். 38:7–8)**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

**பாலை**

பாலை நிலம் உணவுப் பொருள்களைப் பயிர் செய்ய முடியாது நீர்வளமற்ற நிலப்பகுதியாக, இயல் நிலம் இல்லையென்ற போதும், திரி நிலம் உண்டு. காடும் மலையும் கோடையால் பசுமை இழந்து பாலை தோன்றியதை,

**‘‘வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**

**தானலத் திருகத்தன்மையிற் குன்றி**

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**

**நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்**

**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்''[24]**

என்ற சிலப்பதிகாரப் பாடல் அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

> **''பாலை என்பது குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த நிலமாகும். முதுவேனிற்காலத்தில் தமக்குரிய நீர் வளத்திற் குறைந்து மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற, மிக்க வெப்பத்தை அடையும் அக்காலத்தில் அந்நிலப்பகுதி 'பாலை' எனப் பெறும்''[25]**

என்று பாலைக்கான பெயர்க்காரணத்தை மா.இராசமாணிக்கனார் கூறியுள்ளார். குறிஞ்சி, முல்லை ஆகிய நிலத்திணைகளுக்கு இடையிலமைந்த பாழ் நிலப் பகுதியைப் பாலை என்பர். இந்தப் பாலை நிலத்தில் வளரும் மரம் பாலை மரம் ஆகும். அதனால் பாலை நிலம் என்று பெயர்ப்பெற்றது.

## தொழில்கள்

பாலை நில மக்கள் வழிப்பறி செய்தல், வேட்டையாடுதல், ஆநிரை கவர்தல் முதலிய தொழில்களில் ஈடுபட்டனர்.

## வழிப்பறி செய்தல்

மறவர்கள் பாலை வழியே செல்லும் வணிகர் கூட்டத்தைக் கொன்று, அவர் பொருளைக் கொள்ளையாகக் கொண்டு உண்பர் என்பதை,

**''………………. சாத்தெறிந்து**

**அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்**

**கொடுவில் ஆடவர்'' (அகம். 167:7–9)**

என்றும், மறவர் செலுத்தும் அம்பானது வழிப்போவார் உயிர்போகக் கொல்லும் என்பதை,

**''…………………. வன்கண் ஆடவர்**

**விடுதொறு விளிக்கும் வெவ்வாய் வாளி**

**ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்’’ (அகம். 175:2–4)**

என்னும் பாடலடிகளின் மூலம் உணரமுடிகிறது.

## வேட்டையாடுதல்

வேட்டைத் தொழிலில் யானை, பன்றி, முயல், மான், எலி, முள்ளம் பன்றி, உடும்பு, புலி, பறவைகள் போன்றவற்றை வேட்டையாடினர். வேட்டைக்குச் செல்லும் வேட்டுவர் நாயினை உடன் அழைத்துச் சென்றதை,

**‘‘ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு**

**வேப்பலில் அழுவத்துப் பிரிந்த நின்**

**நாய் பயிர் குறிநிலை கொண்டகோடே’’ (அகம். 318:13–15)**

என்ற பாடலடிகளின் மூலம் வேட்டைக்குச் செல்லும் வேட்டுவர் நாயினை உடன் அழைத்துச் சென்றதையும், வேட்டையில் ஊதுகொம்பு பயன்படுத்தப்பட்டதையும், அவை பிரிந்து சென்ற வேட்டுவர்களையும் நாயையும் அழைப்பதற்குக் குறியாக இருந்தமையையும் உணரமுடிகின்றது.

## ஆநிரை கவர்தல்

மறவர்கள் தேனை வார்த்துச் செய்த மணங்கமழும் கள்ளினை உண்டு, பின்னர் போர் முனைகளுக்குச் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வருவர்.இதனை,

**‘‘………………… மறவர்**

**தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து**

**வீங்குமென் சுரைய ஏற்நினம் தரூஉம்’’ (அகம். 105:13–15)**

என்ற பாடல்  அடிகளின் மூலம் அறியமுடிகிறது.

## குறும்பு

குறும்பு என்னும் சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி பாலை நிலத்தவர், குறுநில மன்னர், பகைவர், சிறிய துணுக்கு, அரண், வலிமை, தென்னாட்டில் உள்ள புராதன மக்களுள் ஒரு

பிரிவினராகக் கருதப்படும் அநாகரிக சாதி எனப் பல பொருள் தருகிறது. ஆனால் தமிழர் வாழ்வியல் பற்றி விரிவாக ஆராயும்போது குறும்பு என்பது உறைவிடம் என்ற நிலையில் பொருள் தருவதை அறியமுடிகிறது. சங்க இலக்கியப் பாடல்கள் ‘குறும்பு’ என்பது எயினர் இருப்பிடம் என்று கூறுவதை,

**‘‘கொடுவில் எயினர் குறும்பு’’ (பெரும். 127)**

**‘‘கல்லுடைக் குறும்பு’’ (அகம். 31:7)**

என்ற பாடலடிகளின் முலம் அறியமுடிகிறது. குறும்பு எயினரும் மறவரும் வில்தொழில் செய்து வாழ்ந்தவர்களின் உறைவிடமாக விளங்கியுள்ளது. சுற்றிவர கல்லால் பாதுகாப்புச் செய்யப்பட்டிருந்தது. இது இன்றைய மதிலால் சூழப்பட்ட மக்கள் உறைவிடங்களை ஒத்திருந்தது என்பதை உணரலாம்.

விற்போர் செய்யும் எயினர் உறைவிடமாக இருந்த குறும்பு பின்னர்ப் போர்த் தொழில் செய்வோர் தங்குமிடமாக மாறியது. குறும்பு என்பது கல்லால் அரண் செய்யப்பட்ட இருப்பிடமாக இருந்தது. மதில் போன்ற அமைப்பால் சூழப்பட்டிருந்தது. பகைவர் தங்கும் அரண்களும் குறும்பு எனப்பட்டன. போக்காலங்களில் போர் வீரர் பாதுகாப்பாக இருந்த இடம் குறும்பு. எனவே, பிறர் வந்து எளிதாக தாக்க முடியாத வலிமை மிக்க அமைப்பாகவும் குறும்பு விளங்கியது.

## குரம்பை

கூர்ந்த முனையினையுடைய ஈந்தின் இலையால் வேயப்பட்ட எயினர் எனும் இனக்குழுவினரது குரம்பையானது எய்ப்பன்றியின் முதுகு போல் காட்சியளிக்கிறது. இதனை,

**‘‘வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது**

**யாற்றுஅறல் புரையும் வெளிநுடைக் கொழுமடல்**

**வேல்தலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்**

**ஈந்து இலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை’’ (பெரும். 85–88)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. பாலை நிலத்தில் வாழும் எயினர்கள் ஈந்தின் இலையால் வேயப்பட்ட குடிசையில் வாழ்ந்தனர். ஈந்தின் இலை சொரசொரப்பான முதுகுப் புறத்தையும், கொழுவிய மடலையும், வேல் போலும் நுனியையும் பொருந்தியது. முள் போன்ற அதன் இலை கொண்டு குரம்பை வேயப்பட்டு இருந்ததால் கூரையில் அணிலும், கருப்பை (எலியும்) ஓடாமல் காக்கப்பட்டது.

## குவிந்த குரம்பை

எளிய பொருள்களைக் கொண்டு அரிய நுட்பத்துடன் எயினர்கள் குரம்பை அமைத்து வாழ்ந்தனர். இதனை,

**''குவிந்த குரம்பை அம்குடிச் சீறூர்'' (அகம். 329:9–4)**

என்ற அடி உணர்த்துகின்றது.

குவிந்த குரம்பை என்பதால் இதன் வடிவமைப்பு வட்டமாகவும் கூரையின் உச்சிப் பகுதியாகிய மேல் பகுதி குவிந்து கூர்மையானதாகவும் வடிவமைக்கப்பட்டிருக்க வேண்டும். இவ்வகை வடிவமைப்பு பல்வேறு பகுதிகளில் இன்றும் உள்ளது.

## கதுவாய்க் குரம்பை

நான்கு பக்கமும் குடிசை கட்ட முடியாத எயினன் கற்பாறையின் ஒரு பக்கம் வைத்து மற்ற மூன்று பக்கங்களில் குடிசை வேய்ந்தான். இதனை,

**''கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பை'' (அகம். 129:6)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

பாலைநில வழியில் அழகிய சிற்றூரில் ஆள்நடமாட்டமில்லாது மக்கள் கைவிட்டுப்போன வீட்டில் அணில் விளையாடும் முற்றத்தையுடைய தனிமைப்படுத்தப்பட்ட வீடு பொலிவிழந்து தோன்றுவதை,

**''அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்**

**மக்கள் போகிய அணிலாடு முன்றில்'' (குறுந். 41:3–4)**

என்ற பாடலடியால் அறியலாம். அணில் விளையாடும் முற்றத்தையுடைய அகன்ற வீடு, மக்கள் யாருமின்மையால் அழகிழந்து காணப்பட்டது.

## பந்தல்

வெயிலின் கதிர்கள் நேரடியாகத் தாக்காமல் ஓய்வெடுக்கவும் உறங்கவும், தானியங்கள் முதலானவற்றைக் காய வைக்கவும் பந்தல் பயன்பட்டது. விருந்தினர்களை வரவேற்று அமரச்செய்து அளவளாவி மகிழவும் அது வாய்ப்பாக அமைந்தது.

துடி என்னும் இசைக்கருவிகள் தொங்குகின்ற திரண்ட காலையுடைய பந்தலை,

**‘‘கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்’’ (பெரும். 124)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

## முற்றம்

எயினரின் குடிசை முற்றத்தில் விளாமரமும் அங்கே மான்களும் கட்டப்பட்டிருந்தன என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. இதனை,

**‘‘பார்வை யாத்த பறைதாள் விளவின்**

**நீழல் முன்றில் நிலஉரல் பெய்து’’ (பெரும். 95–96)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. வீட்டின் முற்றத்தில் வயலைக்கொடியும், நொச்சி மரமும் இருந்ததை,

**‘‘………………. வயலையும்**

**மயில்அடி அன்ன மாக்குரல் நொச்சியும்’’ (நற். 305:1–2)**

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

## முள்மிடை வேலி

பனை ஓலையோடு முட்கள் சேர்த்துக் கட்டப்பெற்ற வேலிகள் அமைக்கப்பட்டன. அவ்வேலிக்கு அருகில் பனை மரங்கள் இருந்தன. இதனை,

**''ஒலி காவோலை முள்மிடை வேலி**

**பெண்ணை''    (நற். 38:8–9)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

மனைக்கு வேலியாக நொச்சி மரம் இருந்ததையும், அதன் களையில் குயில் கூவும் என்பதையும்,

**''மனைமா நொச்சி மீமிசை மாச்சினை**

**வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்'' (நற். 246:3–4)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

## தொகுப்புரை

- நிலப்பாகுபாடு நிலத்தின் இயல்புக்கேற்பப் பகுக்கப்பட்டிருப்பதை அறியமுடிகிறது. நிலத்தில் சிறப்பாகவும், அதிகமாகவும் காணப்படுகிற மலர்கள், மரங்கள் போன்றவற்றின் பெயர்களால் ஐவகை நிலங்களுக்குப் பெயரிடப்பட்டுள்ளது.
- குறிஞ்சி நில மக்கள் திணை விளைவித்தலையும், முல்லை நில மக்கள் ஆநிரையையும், மருத நில மக்கள் உழவையும், நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலையும், பாலை நில மக்கள் ஆறலைத்தலையும் சிறப்பான தொழிலாக மேற்கொண்டிருந்ததை அறியமுடிகின்றது.
- குறிஞ்சி மக்கள் ஐவன நெல்லின் தாள், தினைத்தாள் கொண்டு கூரை வேய்ந்துள்ளனர். குடிசைகளின் சுவர்கள் மண்ணால் ஆனவை. சுவருக்குச் செம்மண் சுண்ணாம்பு பூசியுள்ளனர். மரங்களில் பரண் அமைக்கும் வழக்கம் இருந்துள்ளது.
- முல்லை நிலத்தில் இடையர்கள் ஆடு, மாடுகளை பாதுகாக்கும் வண்ணம் கொட்டில் அமைந்துள்ளனர். மரக்கால் சேர்த்துப் பிணித்த குடிசைகள் இருந்துள்ளன. பல கழிகள் சேர்த்து அமைக்கப்பட்ட கதவுகள் இருந்துள்ளன.
- மருத நிலத்தில் பயிர்களைப் பாதுகாக்க வயலில் குடில் அமைத்து வாழ்ந்துள்ளனர்.
- பரதவரின் குடியிருப்புகள் பாக்கம் என்றும் பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன. நெய்தல் மக்கள் தருப்பைப்புல், பனையோலை கொண்டு கூரை வேய்ந்த செய்தியை அறியமுடிகிறது.

- பாலை நிலத்தார் எலி, அணில் போன்றவற்றால் வரும் தொந்தரவுகளைத் தடுக்கக் கூர்மையான ஈந்தின் இலையால் வேயப்பட்ட குடியில் வாழ்ந்தனர்.
- குடிசைகளின் முன்னர் முற்றம் இருந்துள்ளது. முற்றத்தில் மணல் பரப்பட்டது. அம்முற்றத்தில் பல மரங்கள் இருந்துள்ளன. முற்றத்தில் வேலனை அழைத்து கழங்கிட்டுக் குறி பார்த்துள்ளனர் என்பதையும், வளையலணிந்த மகளிர் மணற்பரப்பில் கழங்கு விளையாடுவர் என்பதனையும் அறியமுடிகிறது.
- குடிசைகளுக்கு முன்னர் மரக்கால்களால் அமைக்கப்பட்ட பந்தல் இருந்துள்ளது. பந்தலில் ஆடுகளைக் கட்டுதல், தீயை மூட்டுதல் போன்ற செயல்கள் நடைபெற்றதை அறியமுடிகிறது.
- வீட்டைச்சுற்றி மரம், செடி, கொடிகளால் வேலியை அமைத்துள்ளனர். அது முள்மிடை வேலி என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

# சான்றெண் விளக்கம்


1. பெ. மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், பக். 12–13
2. தொல்.பொருள்.1589:1–2
3. முத்துவீரியம். 217
4. மே. இராதா கிருஷ்ணன், இந்தியாவின் புவியியல் இயற்கை அமைப்பு, ப. 6
5. சு. வித்தியானந்தம், தமிழர் சால்பு, ப. 209
6. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப. 28
7. எ.சுவாமிநாதன், தமிழ்நாட்டுச் சமுதாயப் பண்பாட்டு வரலாற், ப. 43
8. ம.ரா.போ. குருசாமி, பழந்தமிழகம், ப. 104
9. P.T. Srinivasa Iyangar, History of the Tamils, PP. 9-10
10. மு.வரதராசன், முல்லைத்திணை, ப. 5
11. அ.முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப. 133
12. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 133
13. சீ.பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 471
14. நா. வானமாமலை, கலைகளின் தோற்றம் ஆராய்ச்சி இதழ்–7, 1971, ப. 285
15. எ.பாலுச்சாமி, மருதத்தில் மக்கள் வாழ்வியல், ப. 16
16. தி.முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், பக். 20–21
17. தொல். பொருள். 951:4
18. மொ.அ.துரை அரங்கசாமி, சங்க காலச் சிறப்புப் பெயர்கள் (இலக்கியச் சிறப்புப் பெயர்களும் குடி பற்றிய சிறப்புப் பெயர்களும்), ப. 272
19. தி.முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 200
20. மேலது
21. அஷோக்குமார், நெய்தல், ப. 20
22. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 213
23. ஞா.ஸ்டிபன், இலக்கிய இன வரைவியல், ப. 49
24. சிலம்பு, காடுகாண் காதை, 62–66
25. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 92

# இயல் – 3

# சங்ககால நகரமைப்புகள்

## முன்னுரை

மக்கள் வாழ்க்கைக்கு உணவு, உடையினைப் போன்று சிறப்பாக வேண்டப்படுவது இருப்பிடமாகும். மனிதன் நாகரிகம் வளர்ச்சி அடையாத ஆதிகாலத்தில் காடு, மலைகளில் நாடோடிகளாக அலைந்து திரிந்தான். அக்காலக்கட்டத்தில் கொடிய விலங்குகளின் தாக்குதல் மற்றும் மழை, புயல், பணி முதலிய இயற்கை நிகழ்வுகளில் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபடலானான். அதன் தொடக்கமாகவே மரக் கிளைகளையும், மலைக் குகைகளையும் தன் வாழிடமாகக் கொண்டான். நாகரிகம் வளர்ச்சி பெறத் துவங்கிய காலக் கட்டத்தில் மனிதன் தனது வாழ்வில் கற்றுக் கொண்ட அனுபவங்களின் அடிப்படையில் அழகு, கற்பனை கட்டடக்கலையின் தொழில்நுட்பத் திறன் ஆகியவற்றை இணைத்து கட்டடக்கலையினை வளர்த்தெடுத்தான். அழகுடன் கூடிய உணர்ச்சிகளுடன் தொழில் நுட்பத்தையும் இணைத்து உருவாக்குவதே கட்டடக்கலையாகும். ஆரம்பக்காலத்தில் புல்லாலும் தழையாலும் கூரை அமைத்து வாழ்ந்தனர். நாகரிகம் வளரவளர கட்டுமானத் தொழிலில் மண், செங்கல், மரம், சுண்ணாம்பு, உலோகம் போன்ற பொருள்களைக் கொண்டு கட்டடங்களைக் கட்டும் தொழில்நுட்ப அறிவினைப் பெற்றனர். தொழில்நுட்ப அறிவினைப் பெற்றபின் நகரங்களை உருவாக்கினான். நகரில் கட்டிடங்கள் மிக உயரமானதாகவும், மலைகளின் கூட்டத்தைப் போன்று நெருக்கமானதாகவும் அமைக்கப்பட்டிருந்தமையால் நகரங்கள் மாட வீடுகள் நிறைந்ததாகக் காணப்பட்டன. அவ்வகையில் சங்ககாலத்தில் சிறப்பாக திகழ்ந்த காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி, உறையூர், முசிறி, தொண்டி போன்ற நகரங்களை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## நகரமைப்பு

ஆதிமனித தனக்கென நிலையானதொரு வாழ்வினைத் தேர்வு செய்யாமல் மனம்

போன போக்கில் வாழ்ந்து வந்தான். அடுத்து இயற்கைச் சூழலினால் மலைக்குகைகளில் வாழத் தொடங்கினான். அறிவு வளர வளரச் சிந்தனையும் வளர்ந்தது. தான் நிலையாகத் தங்கி வாழ்வதற்கு ஓர் இருப்பிடம் தேவை என்பதை உணர்ந்தான். மண், கல், மரம் ஆகியவற்றைக் கொண்டு சிறுசிறு வீடுகளை அமைத்து வாழத் தொடங்கினான். நாகரிகம் வளர்ந்து வாழத் தொடங்கியவன் தன் இருப்பிடத்தையும் அழகாக அமைக்கக் கற்றுக் கொண்டான். தன் மனத்தில் கற்பனையால் உணர்ந்தவற்றைக் கலை வடிவமாக வெளிப்படுத்தினான். இவ்வெளிப்பாடே பிற்காலத்தில் கட்டடக் கலையாக வளர்ச்சி அடைந்தது என்று கூறலாம்.

> **“மனிதன் மிகப் பழைய காலத்தில் காட்டு மிரண்டியாக வாழ்ந்தான். இருக்க வீடும், உடுக்க உடையும், உண்ண உணவும் உண்டாக்கிக் கொள்ளத் தெரியாமல் அக்காலத்திலே மனிதன் விலங்குபோல அலைந்து திரிந்தான். பிறகு அவன் மெல்ல மெல்ல சிறிது சிறிதாக நாகரிகம் அடைந்தான். வசிக்க வீடும், உடுக்க உடையும், உண்ண உணவும் உண்டாக்கிக் கொள்ள தெரிந்து கொண்டான்’’[1]**

என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.

சங்க காலத்தில் மக்களின் வாழ்க்கை முறை நகரங்களிலும் சிற்றூர்களிலும் வேறுவேறு விதமாய் அமைந்திருந்தது. அவர்களின் வாழ்க்கை முறையிலிருந்து நாகரிகமும் பண்பாடும் வெளிப்பட்டன. சிற்றூர்களில் வாழ்ந்த மக்களிடம் காணப்பட்ட நாகரிகமும் பண்பாடும் ஒருவிதமாகவும், நகரங்களில் வாழ்ந்த மக்களிடம் காணப்பட்ட நாகரிகம் பிறிதோர் விதமாகவும் இருந்தன.

> **“மக்கள் உணவு, உடை, உறையுள், பயிர்த்தொழில், கைத்தொழில், கல்வி, வாணிகம், கலைவளர்ச்சி, சமயத்துறை முதலியவற்றில் நல்லறிவு பெற்று விளங்குதலும் பழகுதலும் நாகரிகம் என்பது புறவளர்ச்சியைக் குறிக்கும். அதாவது மனிதனுடைய அறிவும் அனுபவமும் நுண்பாருள் பண்புகளாக மட்டுமின்றிப் பருப்பொருள்களாகவும் வெளிப்படுகின்றன. உணவு, உடை, உறையுள், சிற்பம், ஓவியம் போன்ற பிற பொருள்கள் வாயிலாகவும் மனிதனின் வளர்ச்சி வெளிப்படுகின்றது. இவை எல்லாம் தோன்றுவதற்கு அடிப்படையான அறிவு அகச்சார்புடையதாயினும், நுண்பொருள்**

**பண்புகளோடு ஒப்பிடுகையில் புறத்தன்மையனவே ஆகும். இத்தகையதொரு வளர்ச்சியையே புறவளர்ச்சி என்கிறாம்''[2]**

என்பர் அ. தட்சிணாமூர்த்தி.

உலகப்பெரு நாகரிகம் அனைத்தும் பேராற்றங்கரைகளிலேயே உருவாயின. சிந்து, கங்கை, காவிரி, வைகை, பேரியாறு ஆகியவற்றின் ஓரங்களில் தோன்றிய நாகரிகங்களே மிகப் பழமையானவை. மருத நிலங்களே, நகரங்களும் நாடுகளும் உருவாகக் காரணமாயின.

நகர மக்களின் திருந்திய வாழ்க்கையை நாகரிக வாழ்க்கை என்று கூறலாம். நகர் என்ற வினைச்சொல் அம் என்ற விகுதியைப் பெற்று நகரம் என்றாகியது. (நகர்+அம்=நகரம்) நகர் அமைப்பில் மாந்தர் அனைவரும் நாகரிகத்தைப் பெற்றனர். உழவுத்தொழிலுக்குச் சிறந்த நிலமான மருத நிலத்தில் நகரங்கள் முதலில் தோன்றின என்று கூறலாம். உழவுத் தொழிலும் அதனைச் செய்யும் மக்களின் நிலையான குடியிருப்பும் நகரம், பட்டணம் என அழைக்கப்பட்டன.

**"தமிழில் நகர் அல்லது மருதநிலப் பேரூரில் வளர்ந்த பண்பாடே நாகரிகம் எனப்பட்டது. ஆயினும் நகர நாகரிகம் தாண்டி பட்டின நாகரிகம் நாடு கடந்த உலகப் பண்பாக வளர்ந்தது. தமிழர் நகாரிகத்துக்கு அடிப்படையான பண்பு இவ்வுலகப் பண்பேயாகும்''[3]**

என்பர் கா. அப்பாத்துரை.

மருதநில மக்கள் கட்டுமானக் கட்டடக் கலையின் முன்னோடிகளாவர். களி, வண்டல், நீர்மைமிக்க நிலவியற்கையின் மீது எழுப்பப்பெற்ற கட்டங்களை உருவாக்கம் செய்தவர் இவர்களேயாவர். களி மண்ணைச் சுட்டு செங்கல் கொண்டு, செங்கல் அருகில் களிமண் சாந்து, களி மண் பூச்சு இவற்றைப் பூசி ஒடுகளைப் போர்த்தி வீடுகளைத் தமது தானியங்களைப் பாதுகாத்து வைக்கக் கூடிய வகையிலும் வளமாகப் புழங்குதற்கும் உரிய வகையிலுமாக அமைத்துக் கொண்டுள்ளனர். இவ்வீடுகளே பல கட்டு வீடுகளாக வளர்ச்சி பெற்றுள்ளன. இவ்வீடுகளின் அமைப்பியலில் மனைசாத்திரம் கண்டு அறிவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. அறைகள், கூடங்கள், தாழ்வாரங்கள், சிறிய பெரிய வாசல்கள், இடைகழி, மாடங்கள், பலகட்டுகள், திண்ணைகள், முற்றங்கள், நடைகளுடன் கூடிய

கட்டுமானங்கள் ஆகியவை அவர்களின் தேவை, பயன்பாடு ஆகியவற்றிற்கேற்பப் பல்வேறு வடிவமைப்புகளைப் பெற்றுத் திகழ்கின்றன.

மரக்கம்புகளை ஊன்றுகோலாகவும் விட்டங்களாகவும் அமைத்துப் புல்வேய்ந்த குடிசைகளை அமைத்தனர். அடுத்த நிலையில் மண் சுவர்களை எழுப்பி குடிசை அமைக்கும் முறையினைக் கற்றனர். பல நூற்றாண்டுகள் கழித்தே செங்கல்லையும் மரத்தையும் சுண்ணாம்பையும் உலோகத்தையும் பயன்படுத்திக் கட்டடங்களாக எழுப்பி உயர்ந்த மாளிகைகள் அமைக்கும் முறையை அறிந்திருந்தனர்.

தமிழ் லெக்சிகன்' நகர்' என்னும் சொல்லிற்குப்,

**''பேரூர், அரண்மனை, கோயில், வாழிடம்''[4]**

என்று பொருள் தருகிறது.

> **''நகர் என்ற சொல் விளக்கம் என்ற பொருளில் நகு, நகை, நகம் என்றாற் போல ஒளியும் பளப்பளப்புமுடைய சுதைத்தீட்டலால் அமைந்த கட்டிடக் கலைப்பணியைக் குறிக்க அமைந்தது''[5]**

என்கிறார் கு.வெ. பாலசுப்பிரமணியன். மேலும் நகரம் என்ற சொல்லிற்கு,

> **''நகரம், மாளிகை, கோயில், அரண்மனை, சடங்கு செய்யும் இடம், விசேடங்கள் நிகழும் மண்டபம், மனைவி, விருந்தோம்பித் தன்னுள் விழையக் கூடி''[6]**

என்று பொருள் தருகிறது. எனவே, நகர் என்ற சொல் நகரத்தில் வாழ்பவர். நாகரிகங்களில் உயர்ந்த பண்புடையவர் என்ற பொருளைத் தருவதை உணரமுடிகின்றது.

நகர் என்ற சொல் ஊர், அரண்மனை, கோயில், வீடு ஆகிய நான்கையும் குறிப்பதாகச் சங்க இலக்கியத்தில் இயன்றுள்ளது. இதனை,

**''அந்தணர் அருகா அருங்கடி வியனகர்'' (சிறுபாண். 187)**

**''முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்'' (திருமுருகு. 244)**

என்ற பாடலடியின் மூலம்  ஊரைக் குறிப்பிடுகிறது.

**“பொருமுரண் எதிரிய வயவரொடு பொலிந்து**

**திருநகர் முற்றம் அணுகல் வேண்டி’’ (மலைபடு. 547–548)**

**“இறையுறை புறவின் செங்காற் சேவல்**

**இன்துயில் இரியும் பொன்துஞ்சு வியனகர்’’ (பெரும்பாண். 439–440)**

என்ற பாடலடியின் மூலம் அரண்மனையைக் குறிப்பிடுகிறது.

**“கயங்கண்டன்ன வயங்குடை நகரத்து’’ (மதுரைக். 484)**

**“பூதங் காக்கும் புகலருங் கடிநகர்’’ (பட்டினப். 57)**

என்ற பாடலடிகளின் மூலம் கோயிலைக் குறிப்பிடுகிறது.

**“குரூஉக்குய்ப் புகை மழை மங்குலிற்**

**பரந்து தோன்றா வியனகரான்’’ (மதுரைக். 757)**

**“நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளி’’ (மதுரைக். 169)**

என்ற பாடலடிகளின் மூலம் வீட்டைக் குறிக்கிறது.

## காவிரிப்பூம்பட்டினம்

பூம்புகார் பண்டைய சோழர்களின் தலைநகரமாகவும், சிறப்புமிகு துறைமுகப் பட்டினமாகவும் சிறந்து விளங்குகிறது. பூம்புகார் நகரம் பல நாட்டுக் கலைஞர்கள் வணிகர்கள் வாழ்ந்த புகழ்பெற்ற நகரமாகும்.

## வேறுபெயர்கள்

காவிரி கடலொடு கலக்குமிடத்து அமைந்த நகரமாதலால் புகார் எனப்பட்டது. புகார் என்பது ஆற்றுமுகத்தைக் குறிக்கும். காவிரிப்பூம்பட்டினம் என்னும் முழுமையான பெயர் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. புகார், பூம்புகார், பெருநகரி, பட்டினம், காவிரிப்பட்டினம், காவிரிப்படப்பை, நன்னகர், கவீரப்பட்டணம், காகந்தி, கமரா, சபரிஸ்,

சம்பாபதி, சோழபட்டினம், கோலப்பட்டினம், மண்ணகத்து வான்பதி எனப் பல பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பெயர்ச்சிறப்பு

பூம்புகார் சங்க காலத்திலேயே பெருநகரமாக வளர்ச்சியடைந்த நிலையில் அதன் பெயர்கள் பற்பலவாய் இலக்கியங்களில் ஆளப்பெற்றிருப்பதை அறியமுடிகிறது. பூம்புகாரின் அத்தகைய பெயர் அமைப்புகளிலேயே அதன் இயற்கைச் சூழல், கடல் சார்ந்த இடஅமைப்பு காலவாரியாக வளர்ந்த பெருநகரத் தன்மை போன்றவற்றை அறியமுடிகிறது.

**“குறும்பல் யாணர்க் குரவை யயரும்**

**காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்**

**புகார்ச் செல்வ’’ (பதிற்று. 8:3–5)**

**“புகார்அர்ப் புகுந்த பெருவழிச் சொரியும்**

**கடற்பல் தாரத்த நாடு’’ (புறம். 30:7–8)**

என்றும்,

**“கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்**

**கடுஞ்சூள் தருகுவன் நினக்கே’’ (அகம். 110:4–5)**

என்றும்,

**“பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்**

**தண்புனற் படப்பை என்மூர்’’ (புறம். 166:8–9)**

என்றும்,

**“காவிரி அணையும் தாழ்நீர்ப் படப்பை**

**நெல்விளைகழனி’’ (புறம். 385:7–8)**

என்னும் அடிகளால் பூம்புகார், படப்பை என்றும் புகார் என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளதை அறியலாம்.

கழார், சாய்க்காணம், பட்டினம், பெருந்துளை என்றெல்லாம் அகநானூற்றில் பூம்புகார் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

> "பல்வேல் மத்தி, கழாஅர் முன்துறை" **(அகம். 226:8)**

என்றும்,

> "கலாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்" **(அகம். 222:5)**

என்றும்,

> "கைவண் மந்தி கழாஅர் அன்ன" **(ஐங். 61:3)**

என்றும்,

> "மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
> ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
> கலிகொள் சுற்றமொடு கரிகால் காண" **(அகம். 376:79)**

என்றும்,

> "பூவிரி நெடுகழி நாப்பண் பெரும்பெயர்க்
> காவிரிப் படப்பை பட்டினத் தன்ன" **(அகம். 205:7–9)**

என்னும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

பூம்புகாரைப் பற்றி அயல் நாட்டார் குறிப்புகளில் காணப்படுகின்றன. இதனை,

> "பெரிப்ளூசு இப்படினத்தைக் கமரா **(camara)** எனவும், தாலமி கபேரிஸ் **(kaberis emporion)** எனவும் குறிப்பிட்டுள்ளனர். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் புத்ததத்தர் இங்கிருந்த புத்த விகாரத்தில் தங்கியிருந்து பிராகிருத மொழியில் அபிதம்மவதாரம் என்னும் இலக்கியத்தை இயற்றியதாகக் கருதப்படுகிறது. இதில் இப்பட்டினம் காவேரிபட்டினம் எனக் குறிப்பிடப்படுகிறது. மேலும், அபிதம்மவதாரம் காவிரிப்பூட்டினத்தின் எழில்மிகு தோற்றம், அமைப்பு, அங்கு வாழ்ந்த உயர்குடி மக்கள் மற்றும் அரிய வைரக்கற்கள் முதற்கொண்டு விற்கப்பெற்ற பெரிய கடைத்தெருக்கள்

> **போன்றவை குறித்தும் பேசுவதை ஆய்வாளர்கள் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளனர்’’[7]**

என பா. ஜெயக்குமார் குறிப்பிட்டுள்ளார்.

> **“காவிரிப்பூம்பட்டினத்தை டாலமி என்னும் யவன ஆசிரியர் சபரிஸ் (chabaric) என்று கூறுகிறார். பெரிப்ளஸ் என்னும் கிரேக்க நூலாசிரியர் இந்நகரத்தை கமரா(kamara) என்கிறார்’’[8]**

என்று மயிலை சீனி வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

## சம்பாபதி

பாரதம் உள்ளிட்ட நாவலந்தீவினைக் காக்கும் மேருமலை உச்சியில் தோன்றிய சம்பு எனும் தெய்வம் பண்டு அரக்கரால் இந்நிலத்து மக்களுக்கு வரும் துயரினைக் கேட்டு மேருவைவிட்டுத் தென்திசைக்கு வந்து புகாரில் தவஞ்செய்திருந்ததால் இவ்வூர்க்கு சம்பாபதி எனும் பெயர் உண்டானது என்பர்.

## காகந்தி

காந்தமன் எனும் அரசனுடைய காவற்கணிகையின் மகன் ககந்தன் ஆவான். முன்பு வேரோடு அழிக்க வந்த பரசுராமரின் முன் தோன்றுவதற்கு அஞ்சி நடுங்கி காந்தமன்,தன் மகன் ககந்தனைக் காவல் புரியச் சொல்லிவிட்டு ஒளிந்து கொண்டான். இக்காகந்தனால் காக்கப்பட்டமையால் புகார் ‘காகந்தி’ என்று பெயர் பெற்றது என்பதனை,

> **“ககந்தன் காத்தல் காகந்தி என்றே**
>
> **இயைந்த நாமம் இப்பதிக்கு’’[9]**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

## காவிரிப்பூம்பட்டினம்

சூரிய குலத்தில் தோன்றிய ‘காந்தன்’ எனும் மன்னன், தனது சோழ பூமிக்குத் தண்ணீர் வேண்டிய போது, குடகுமலையிலிருந்த அகத்தியன் கமண்டலத்திலிருந்து தோன்றிய காவிரிப்பாவை இவ்வூர்க்கு ஓடிவந்த நிலையில் சம்பாபதித் தெய்வம்

மகிழ்ச்சியுடன் காவிரியை வரவேற்று, ‘‘படைப்புக் காலம் முதல் சம்பாபதி எனும் என் பெயரால் அமைந்த இம்மூதூரை இனிமேல் நின் பெயரால் வழங்கச் செய்தேன். நீ நீடு வாழ்க என வாழ்த்தியதாம். அன்று முதல் இது காவிரிப் பூம்பட்டினமாகப் பெயர் பெற்றது. சம்பாபதி, காந்தன், காவிரி, அகத்திய முனி இவர்களை இணைத்து வழங்கிய புராணக்கதையில் இவ்வூர்ப் பெயரின் வரலாறு. காலந்தோறும் வழங்கியதையும் இதிகாச புராணக் கதைகளால் பெயர் மாற்றம் பெற்றதையும் அறியமுடிகிறது.

## கவேரப்பட்டினம்

> **‘‘கவேர முனிவர் தவம் செய்து பிரம்மனிடம் விஷ்ணுமாயையை மகளாகப் பெற்று முத்தியடைந்தார். பிரம்மாவின் கட்டளையால் அந்தப் பெண் நதி வடிவு பெற்றுச் சென்றதால் கவேர கன்னி ஆனாள். காவேரி என்று பெயர் பெற்றாள். இது பற்றிய செய்திகள் வடமொழியில் ஆக்னேய புராணத்தில் காவேரி மகாத்மியத்தில் காணப்படுகின்றது’’[10]**

என்று உ.வே.சா. குறிப்பிடுவார். இந்தப் புராணச் செய்தியை மணிமேகலையின் ஆசிரியர் சாத்தனார் பூம்புகாருக்கு ஏற்றிக் கூறியதனை,

> **‘‘கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய**
>
> **தாவக்களி மூதூர்’’[11]**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

## பிராகிருத நூல்களில் பூம்புகார்

> **‘‘அபிதம்மாவதாரம், மதுராந்த விலாசினி முதலிய பௌத்த நூல்களில் ‘காவேரிப் பட்டனே என்று பூம்புகார் குறிப்பிடப்பட்டுள்ளது’’[12]**

என மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

> **‘‘‘மலிந்த அரசனுடைய கேள்விகள்’ (Questions of King Milinda) எனும் புத்த நூல் கடற்கரைப் பட்டினங்களில் சிறந்த ஒன்றாகக் கோளப்பட்டினம் என்ற ஊரைக் குறிப்பிடுகிறது. இக்கோளப்பட்டினம் (சோழப்பட்டினம்) காவிரிப் பூம்பட்டினத்தையே குறிக்கும்’’[13]**

என்பார் நா. தியாகராசன்.

## பூம்புகாரின் நிலப்பரப்பு

சிலப்பதிகார காலத்தில் பூம்புகார். நான்கு காத தூரம் பரப்புடையதாய்த் திகழ்ந்தது என்பதனை,

> **"காதம் நான்கிலும் கடுங்குரல் எடுப்பிப்**
>
> **பூதம் புடைத்துண்ணும் பூதசதுக்கமும்"[14]**

என்று இந்திரவிழவுரெடுத்த காதையில் பூம்புகாரின் எல்லையும் பரப்பும் சுட்டப்பட்டுள்ளன.

## நகரமைப்பு

காவிரியாறு கடலுள் கலக்கின்ற புகார் முகத்தின் வடகரையில் காவிரிப்பூம்பட்டினம் அமைந்திருந்தது. இப்பட்டினத்தின் தெற்கெல்லை காவிரி ஆறும், கிழக்கெல்லை வங்காள விரிகுடாக் கடலுமாக இருந்தன. தூய காற்று வீசுகிற கடற்கரையோரத்திலே இரண்டு நீர் நிலைகளை எல்லையாகப் பெற்றிருந்த காவிரிப்பூம்பட்டினம், கிழக்கு மேற்காக நீண்ட சதுர அமைப்புடையதாக இருந்தது. மணல் பரந்த கடற்கரைப் பக்கம் நெய்தலங்கானல் என்று பெயர் பெற்றிருந்தது. நெய்தலங்கானலுக்கு மேற்கே நாளங்காடியாகிய மரச்சோலையுள்ள இடைநிலமும், அதற்கு மேற்கே பட்டினப்பாக்கமும் இருந்தன. துறைமுகமும் பண்டக சாலையும் மருவூர்ப்பாக்கத்திற்குத் தெற்கே காவிரியாற்றின் வடகரையில் இருந்தன.

> **"ஒவ்வொரு பெரிய கடற்கரை நகரமும் இரண்டு பக்கங்களையுடையதாய் இருந்தது. அவற்றுள் ஒரு பாகம் ஊர் என்றும், மற்றொரு பாகம் பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன. பூம்புகார் நகரத்தின் ஒரு பாகம் மருவூர்ப்பாக்கம் என்றும் மற்றொரு பாகம் பட்டினப்பாக்கம் என்றும் பெயரிடப்பெற்றன"[15]**

என்பர் ஆர்.நாகசாமி

> **"கடற்கரையிலிருந்த வாணிக மையங்களைப் பட்டினம் என்று அழைத்தனர்"[16]**

என ரா.பி.சேதுப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

> **“காவிரி ஆறு அன்று அகலமும் ஆழமும் மிக்கதாய் இருந்தது. அதனுள் பளூவேறிய சரக்குகளைச் சுமந்த கப்பல்கள் பாய்மடக்காமலே தொகுதி தொகுதியாக வந்து புகுந்தன. காவிரிப்பூம்பட்டினம் இரு பாகங்களாகப் பிரிவுற்றிருந்தது. ஒன்று மருவூர்பாக்கம் என்பது. மற்றது பட்டினப்பாக்கம் என்பது இது அதன் மேல்கரையிலிருந்து, இந்த இரு பகுதிகளுக்குமிடையே ஒரு திறந்த பெருவெளி இருந்தது. இதில் ஒழுங்கான இடையீடிட்டு மரங்கள் வைக்கப்பட்டிருந்தன. இவ்விடத்திலேயே நகரின் பெருஞ்சந்தை நடைபெற்றது’’[17]**

என்பார் அப்பாதுரை.

சங்க காலத்தில் பல நாட்டு வணிகர்களும் காவிரிப்பூம்பட்டினத்தில் வந்து தங்கியிருந்தனர். நாள்தோறும் விழா நடக்கும் ஊரினைப் போலவே மக்கள் கூட்டம் உடையதாகக் காவிரிப் பூம்பட்டினம் காட்சியளித்தது. அக்காலத்தில் பட்டினம் என்றால் அது காவிரிப்பூம்பட்டினம்தான் என்று அறியும் அளவிற்குப் புகழ்பெற்றுச் சிறந்து விளங்கியது.

## அறக்கூழ்ச்சாலைகள்

செல்வம் சிறந்த சோழ நாட்டில் உணவின்றித் தவிக்கும் வறிஞர்கள் வாழ்ந்தனர். அந்த வறிஞர்களுக்கும் செல்வமுடையவர்கள் உணவளித்துக் காப்பாற்றி வந்தனர். பலர்க்கும் அன்னமிடும் அறக்கூழ்ச்சாலைகள் பல காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தன. இவ்வுலகில் புகழுடன் வாழவேண்டும். இறந்த பின் நற்கதியைப் பெற வேண்டும் என்று விரும்பிய செல்வர்கள் இந்த அறக்கூழ்ச் சாலைகளை நடத்தி வந்தார்கள்.

இவ்வுலகில் புகழ் நிலைக்கக் கூடிய சொற்கள் பெருகவும் மறுமையில் இன்புறுவதற்கான அறம் பெருகி நிலைக்கவும் எண்ணியவர்கள் பெரிய சமையல் அறையை வீடுகளில் அமைத்து ஏராளமாகச் சோற்றையாக்கி வந்தோர்க்கெல்லாம் அள்ளி வழங்கினர் என்பதையும் அச்சோற்றை வடித்த சத்துள்ள கஞ்சி ஆறைப் போலத் தெருவிலே ஓடியது என்பதையும்,

> **“புகழ்நிலை இயமொழி வளர**
>
> **அறன் நிலைஇய அகன் அட்டில்**

சோறு வாக்கிய கொழுங்கஞ்சி

யாறு போலப் பரந்து ஒழுகி'' (பட்டினப். 42–45)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. அறங்கருதிச் சோறிடும் இடங்களுக்கு 'அறக்கூழ்ச்சாலை' என்று பெயரிட்டுள்ளனர். இப்பெயரே பிற்காலத்தில் அன்னசத்திரம், தருமசத்திரம் என்ற பெயர்களால் வழங்கப்படுகிறது. கூழ் என்பது உணவின் பொதுப்பெயர் அறகூழ்ச்சாலை தருமத்திற்கு உணவிடும் இடம் என்று பொருள்படுகிறது.

## கேணி முற்றம், எருதுச் சாலைகள்

உயிரினங்கள் நீர் அருந்துவதற்கு வசதியாகக் கிணறு போன்ற நீர்த்தொட்டி முற்றத்தில் அமைக்கப்பட்ருந்தமையை,

''தண்கேணி தகை முற்றத்து'' (பட்டினப். 51)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. கேணி அல்லது கிணறு என்று சொல்லத்தக்கவாறு கற்பாறைகளைச் செதுக்கி வடிவமைக்கப்பட்ட நீர் நிறைந்த தொட்டிகள் உயிரினங்கள் இளைப்பாறிட அனைத்து வீடுகளின் முற்றங்களில் அமைக்கப்படுவதைக் காணலாம்.

பெரிய எருதுகள் கட்டப்பட்டுள்ள தொழுவங்கள் இருந்தன என்பதனை,

''பகட் பெருத்தின் பலசாலை'' (பட்டினப். 52)

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது. விவசாயப் பெருங்குடி மக்கள் வேளாண்மை மற்றும் வணிகம் செய்வதற்கு ஏதுவாக எருதுகளை அவரவர் வீடுகளில் வளர்த்தனர். எருதுகள் கட்டப்பட்டுள்ள தொழுவங்கள் யாவும் சாலை என்னும் பெயரில் அமைந்திருந்தன என்பதையும் அறியமுடிகின்றது.

## தவப்பள்ளிகள்

துறவிகள் தவம் புரியும் சமண பௌத்தப் பள்ளிகளும் புகார் நகரில் இருந்தன மற்றும் விளங்கும் சடையையுடைய முனிவர்கள் வேள்வி செய்யும்போது வேள்வித் தீயில் நெய் முதலிய ஆவுதிப் பொருள்களை இடுவர். அப்பொழுது எழும் நறுமணமுடைய புகையை வெறுத்த குயில்கள், தம்முடைய கருமையும் பெருமையும் உடைய இனத்துடன் அவ்விடத்தை

விட்டு அகன்று சென்று, பூதங்கள் காவல் புரிகின்ற ஒருவரும் புக இயலாத காவலையுடைய நகரில் கல்லையே உணவாகக் கொள்ளும் அழகிய புறாக்களுடன் மாடங்களில் உறைந்தன என்பதனை,

**“தவப்பள்ளி: தாழ் காவின்**

**அவிர் சடைமுனிவர் அங்கி வேட்டும்**

**ஆவுதி நறும்புனை முனைஇக் குயில்தம்**

**மாயிரும் பெடையோடு இரியல் போகிப்**

**பூதம் காக்கும் புகழ் அருங் கடிநகர்**

**தூது உண்அம் புறவொடு துச்சில் சேக்கு’’ (பட்டினப். 53–58)**

என்ற பாடலடியால் உணரமுடிகின்றது.தவம் மேற்கொள்ளும் முனிவர் பெரு மக்கள் இல்லறத்தார் வாழும் வீதிகள் மற்றும் குடியிருப்புகளைவிட்டு நீங்கி ஊரின் ஒருபகுதியில் அமைந்துள்ள சோலையில் உடைந்து சிதிலம் அடைந்து இடிந்து கிடக்கும் கட்டடங்களை அண்டித் தங்கியுள்ளனர்.

இரவுப்பொழுதில் கடலில் மீன்பிடிக்கச் சென்ற வளைந்த படகையுடைய பரதவர். கரையிலுள்ள மாடங்களிலுள்ள விளக்குகளை நோக்கி அவற்றின் நிறம் பொருந்திய ஒளி விளக்குகளை எண்ணினர். சிலர் பாடல் கேட்டனர். சிலர் நிலவின் காட்சி இன்பப் பயனை நுகர்ந்தனர். கடையாமத்தில் கண் அடைத்துத் துயில் கொண்டனர் என்பதனை,

**“நெடுங்கால் மாடத்து ஒள்ளரி நோக்கிக்**

**கொடுந்திமிழ் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்**

**பாடல் ஓர்த்தும் நாடகம் நயத்தும்**

**வெண்ணிலவின் பயன்துய்த்தும்**

**கண் அடைஇய கடைக்கங்குலான்’’ (பட்டினப். 111–115)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

## துறைமுகம்

கடல் வழியாகக் கப்பல்களில் வாணிகம் நடைபெற்றது. தரைவழி வாணிகத்தைவிடக் கடல் வழி வாணிகம் அதிகமாக இருந்தது. தரை வாணிகத்தைவிடக் கடல் வாணிகம் அதிகச் செலவில்லாமலும் விரைவாகவும் இருந்தபடியால் கப்பல் வாணிகம் சிறப்பாக நடைபெற்றது. கடல் வாணிகத்துக்கு கப்பல்கள் அதிகளவில் தேவைப்பட்டன. கப்பல் கட்டும் தொழில்கள், ஒவ்வொரு நாட்டிலும் நடைபெற்றன. மேலும் கப்பல்களில் கொண்டு செல்லும் பொருள்களை இறக்குமதி ஏற்றுமதி செய்வதற்கு அந்தந்த நாடுகளில் துறைமுகங்கள் தேவைப்பட்டன. ஆதலால் ஒவ்வொரு நாட்டிலும் துறைமுகப்பட்டினங்களை ஏற்படுத்தினர். பெரும்பாலும் துறைமுகப்பட்டினங்கள் ஆறுகள் கடலில் சேர்கின்ற புகர்முகங்களிலும் ஆற்று முகத்துவாரங்கள் இல்லாத இடங்களிலும் துறைமுகப்பட்டினங்கள் இருந்தன. ஒவ்வொரு பெரிய துறைமுகங்களிலும் கலங்கரை விளக்குகளை அமைத்தனர். துறைமுகங்களில் ஏற்றுமதி செய்யும் பொருள்களுக்கு வரிகள் வசூலிக்கப்பட்டது. இந்த வரிப்பணம் அந்தந்த நாட்டை ஆளும் அரசர்களுக்கு உரியதாக அமைந்தது.

கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் உரோமாபுரியிலிருந்து யவன வணிகர் காவிரிப்பூட்டினத்திற்கு வந்து வாணிகம் செய்தார்கள். தூரக் கிழக்கிலிருந்தும் (சாவக நாட்டிலிருந்தும்) வட இந்தியாவிலிருந்தும் கப்பல் வாணிகம் செய்தார்கள். சோழநாட்டுக் கப்பல் வாணிகர் இந்த துறைமுகத்திலிருந்து புறப்பட்டுச் சாவகநாடு, காழகம், கங்கைத்துறைமுகம் முதலான இடங்களுக்குச் சென்று வாணிகம் செய்தார்கள்.

சோழ நாட்டின் முக்கியமான துறைமுகப்பட்டினமான காவிரிப்பூம்பட்டினத்தில் சோழ இளவரசர்கள் வாழ்ந்திருந்தார்கள். கரிகாற் சோழனுக்குப் பிறகு இருந்த கிள்ளிவளவன் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தான். காவிரியாற்றின் முகத்துவாரம் ஆழமாகவும்அகலமாகவும் பல கப்பல்கள் தங்குவதற்கு ஏற்றதாகவும் இருந்தது. வாணிகக் கப்பல்கள் பாய்களைச் சுருட்டாமலும் பாரத்தைக் கழிக்காமலும் நேரே ஆற்றினுள் புகுந்து துறைமுகத்தையடைந்தன. இதனை,

**“ஒளித்த துப்பினை ஆதலின், வெளிப்பட்ட**

**யாங்ஙனம் பாடுவர்புலவர் கூம்பொடு**

**மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது**

**புகாஅர்ப் புகுந்த பெருங்கலம், கதாஅர்**

**இடைப்புலப் பெருவழிச் சொரியுங்**

**கடற்பல தாரத்த நாடுகிழ வோயே'' (புறம். 30:10–15)**

என்ற பாடலால் உணரமுடிகின்றது.

நெய்தல் நிலங்களில் விளைந்த வெள்ளை நிற உப்பினை வெளியூர்களுக்கும் கொண்டுபோய்ப் பண்டமாற்றாக விற்று அதற்கு ஈடாக நிறைய நெற்குவியலை ஏற்றிக்கொண்டு வந்த வலிய அகன்ற பெரும் படகுகள் ஒழுங்குறக் கட்டுமனைகளிலே பிணைக்கப்பட்டிருந்தன. அவை அயலிலிருந்து காண்போர்க்குக் குதிரைகளைக் கட்டியிழுப்பது போன்று காட்சியளித்தது என்பதனை,

**''வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**

**பணைநிலைப் புரவியின் அணைமுதல் பிணிக்கும்**

**கழிசூழ் படப்பை'' (பட்டினப். 29–32)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

துறைமுகத்தில் வந்து தங்கிய கப்பல்கள், யானைப்பந்தியில் நிற்கும் யானைகள் அசைந்துக் கொண்டு நிற்பன போல அசைந்தும் கொண்டிருந்தன. பாய்மரத்தின்மேல் கொடிகள் பறந்ததனை,

**''உறழ் குறித்து எடுத்த உருகெழு கொடியும்**

**வெளில இளகும் களிறுபோல**

**தீம் புகார் தரை முன்துறை**

**தூங்கு நாவாய் துவன்று இருக்கை**

**மிசைக் கூம்பின் நசைக் கொடியும்'' (பட்டினப். 171–175)**

என்ற பாடலடிகளில் கண்ணுக்கு இனிய புகாரின், நீர் அலைகளையுடைய கடற்கரைப் பகுதியில் நிறைந்த இருப்பிடத்தைக் கொண்ட நாவாய்கள் அசைந்து செல்லும். அவற்றில் நாட்டப்பட்டுள்ள பாய்மரத்தின் கம்பங்களின் உச்சியில் காண்போர்க்கு விருப்பத்தைத் தரும் கொடிகள் கட்டப்பட்டிருக்கும்.

தறியில் கட்டப் பெற்ற யானைகள் ஒருநிலையில் நிற்காமல் அசைந்துகொண்டே இருக்கும். அதுபோலக் கடலில் நின்று கொண்டிருக்கும் கப்பல்கள் கடல் அலையின் தன்மைக்கேற்ப அசைந்து கொண்டே இருக்கும் தன்மையானது உவமை நயத்தோடு காட்சிப் படுத்தப்பட்டுள்ளது.

அயல் நாடுகளிலிருந்து கப்பல் ஒட்டி வந்த மாலுமிகளும் கப்பலோட்டிகளும் கடற்கரைப்பக்கத்தில் தங்கியிருந்தார்கள். அவர்கள் வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்தபடியால் வெவ்வேறு மொழிகளைப் பேசுபவர்களாக விளங்கினர். அம்மாலுமிகள் புகார் நகரத்து மக்களுடன் கலந்து உறவாடி ஒற்றுமையாய் இனிதுவாழ்கிற அளவில்லாத புகழினைக் கொண்டவர்களாக இருந்த காட்சிகளை,

**“மொழி பல பெருகிய பழிதீர் தேஎத்துப்**

**புலம்பெயர் மாக்கள் கலந்துஇனிது உறையும்**

**முட்டாச் சிறப்பின் பட்டினம்’’ (பட்டினப். 216–218)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

கப்பல்களில் விலையுயர்ந்த குதிரைகளும், நிலத்தின் வழியே வந்தமிளகுப் பொதிகளும், இமயமலையில் உண்டான மணிகளும், பொன்னும் குடகு மலையிற் பிறந்த சந்தனமும் அகிலும், தென்கடலிற் பிறந்த முத்தும், கீழ்க்கடலில் உண்டான பவளமும் கங்கையில் உண்டான பொருள்களும் காவிரியில் உண்டான வளங்களும் ஈழ நாட்டிலிருந்து வந்த உணவுப் பொருள்களும், காழக நாட்டுப் பொருள்களும் பிற அரிய பெரிய பொருள்களும் கூடிய வளமிகுந்த பரந்த இடத்தையுடைய தெருக்களும் இருந்தன என்பதனை,

**“நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**

**காலின் வந்த கருங்கறி மூடையும்**

**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**

**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**

**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**

**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**

**ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்**

**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**

**வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்'' (பட்டினப். 185–193)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

சாவடிகளில் காவல் காப்போர் இரவு வீட்டிற்குச் செல்லாமல் கடமையே கண்ணாகக் கொண்டு கடையாமத்தில் சுங்க வரிகொடுக்காமல் பொருட்களைக் கொண்டு போய்விடுவார்கள் என்று கருதி உறங்காமல் காவல் காப்பவர்களாகவும் அரசனுக்கு உண்மையான காவலர்களாகவும் விளங்கினர். கடையாமத்தில் மட்டும் கடற்கரையில் உள்ள அகன்ற தெருவில் சிறிதுநேரம் உறக்கம் கொள்வர் என்பதனை,

**''உறுபொருளம் உலகுபொருளும் தம் ஒன்னார்த்**

**தெறுபொருளும் வேந்தன் பொருள்''[18]**

என்ற பாடலால் அறியமுடிகின்றது.

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குச் சென்று வரும் வணிகப் பொருள்களுக்குச் சுங்கவரி விதித்தல் அக்காலத்திலேயே நடை முறையில் இருந்துள்ளது. சோழர்களின் கொடி புலிக்கொடி எனவே முத்திரைகளில் புலி பொறிக்கப்பட்டிருந்தது. மலைபோல் குவிந்து கிடக்கும் பொருட்களில் புலி முத்திரை பொறித்து மூட்டைகளில் அடுக்கி வைத்தனர். இந்த மூட்டைக் குவியல்களின் மீது ஆட்டுக்கிடாய்கள் ஏறிக் குதிக்கின்றன. மூட்டைகளைப் பண்டகச் சாலை முற்றங்களில் கொண்டு குவித்து வைத்தனர். இதனை,

**''புலி பொறித்துப் புறம் போக்கி,**

**மதி நிறைந்த மலி பண்டம்**

பொதியா மூடைப் போர் ஏறி,

மழைஆடு சிமையமால் வரைக் கவாஅன்

வரைஆடு வருடைத் தோற்றம் போலக்

கூர்உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏன்றை

ஏழகத் தகரோடு உகளும் முன்றில்'' (பட்டினப். 135–141)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## பலவகைக் கொடிகள்

இல்லுறை தெய்வத்தை மகிழச் செய்வதற்காக மலரணிந்த வீட்டு வாசலில் பலரும் கொடிகளைக் கட்டினர். பெருக்கெடுத்து ஓடிவரும் வெள்ள நீர் கொண்டு வந்து தந்த வெண்மணலையுடைய காட்டாற்றின் கரையில் வளர்ந்துள்ள அழகுடைய கரும்பின் வெண்ணிற பூக்களைப் போல, கடைத்தெருவின் இருபுறமும் காவல்களை ஊன்றிக் கொடிகள் நாட்டப் பெறும். பலவாகிய கேள்வியாலும் பல நூல்களைக் கற்று முழு அறிவைப் பெற்ற நூல் ஆசிரியர்கள் வாதுக்குக் காரணமான பட்டிமன்றக் கொடிகள், கண்ணுக்கு இனிய புகாரின் நீர் அலைகளையுடைய கடற்கரைப் பகுதியில் அசைந்து கொண்டிருக்கும் மரக்கலங்கள் நின்றன. அம்மரக்கலங்களில் தறியில் கட்டப்பெற்ற களிறுகள் போல பலரும் விரும்பிப் பார்க்கும் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். கடற்கரையில் கள்ளுக் கடைகள் இருந்தன. அவற்றில் கள்விலை பற்றிய கொடிகள் இருந்தன. மீனைவெட்டி இறைச்சியையும்அறுத்து, அவ்வூன்களைப் பொறித்தனர். மணலைக் குவித்து மலரைச் சிதறி கள்ளுக்கடைத் தெய்வத்திற்குப் பலியாகக் கொடுக்கும் வாயில்களிலும் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். பிற பண்டங்களை விற்கும் கடைகளிலும் பல்வேறு வண்ணங்களில் வடிவங்களில் கொடிகள் அசைந்து கொண்டிருந்தன. அக்கொடிகளின் நிழலில் கொடிகள் மிகுதியாகப் பறந்து கொண்டிருந்ததால் கதிரவன் கதிர்கள் நுழையாத செழுமையான நகராகக் காவிரிப்பூம்பட்டினம் இருந்தது. இதனை,

''மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய

மலர்அணி வாயில் பலர்தொழு கொடியும்

வருபுனல் தந்த வெண்மணல் கான்யாற்று

உருகெழு கரும்பின் ஒண்பூப் போலக்

கூழுடைக் கொழுமஞ்சிகைத்

தாழுடைத் தண்பணியத்து

வால் அரிசிப் பலிசிதறிப்

பாகு உகுத்த பசுமெழுக்கின்

காழ் ஊன்றிய கவிகிடுகின்

மேல் ஊன்றிய துகிந்கொடியும்

பல்கேள்வித் துறைபோகிய

தொல்லாணை நல்லாசிரியர்

உறழ்குறித்து எடுத்த உருகெழு கொடியும்

கெளில் இளக்கும் கயிறுபோலத்

தீம்புகார்த் திரைமுன்துறைத்

தூங்குநாவாய் துவன்று இருக்கை

மிசைக் கூம்பின் நசைக்கொடியும்

மீன்தடிந்து விடக்கு அறுத்து

ஊன்று பொரிக்கும் ஒலிமுன்றில்

மணந்குவைஇ மலர்சிதறிப்

பலர்புகுமனைப் பலிப்புதவின்

நறவுநொடைக் கொடியோடு

பிறபிறவும் நனிவிரைஇப்

பல்வேறு உருவின் பதாகை நீழல்

செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பின்'' **(பட்டினப். 159–183)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## வாணிகம்

ஓரிடத்தில் கிடைக்கும் பொருட்களைத் தேவையுள்ளவர்களிடம் கொண்டு சென்று அதற்கு ஈடாக அவர்களிடம் உள்ள பொருள்களைப் பண்டமாற்றாகப் பெற்றது வாணிகம் ஆகும். இதனை,

> **“அங்காடியிலோ மக்களிடமோ பொருட்களைச் சில்லறையாகவோ மொத்தமாகவோ வாங்கி அங்காடிக்கு அல்லது மக்களுக்கு, பொருட்களைச் சில்லறையாகவோ மொத்தமாகவோ விற்றலை வாணிகம் என்ற சொல்லுக்கு விளக்கமாகக் கூறலாம். இச்சொல்லுக்கு வியாபாரம், இலாபம், ஊதியம் ஆகிய பொருட்களும் உள்ளன’’[19]**

என மதுரைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது.

> **“பண்டைக் காலத்தில் இந்த வாணிகம், உலக உதவியாகவே நடைபெற்று வந்தது. பொருளீட்டுவது என்னும் கருத்தால் மட்டும் வணிகர்கள் இதனை நடத்தியதாகத் தெரியவில்லை’’[20]**

என்கிறார் தி.மு. பாலசுந்தரனார்.

வாணிகம் அப்போது பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றதனை,

> **“கிடைக்கும் பொருள்களைத் தேவையுள்ளவர்களிடம் கொடுத்து அவர்களிடமுள்ள பொருள்களை அதற்கு ஈடாகப் பெறும் பண்டமாற்று முறையே வணிகத்தின் அடிப்படையாயிற்று’’[21]**

என்பார் அ. ஆறுமுகம். பொதுநலன் அடிப்படையிலிருந்த வணிகம் தமக்கெனத் தனிப்பயன், தரக்கூடிய நிலைக்கு மாறியது. அதிலிருந்து ‘இலாபம்’ பெறுதல் எனும் நோக்கத்தை அடிப்படையயாகக் கொண்டிலங்கியது. இது பிற்கால வளர்ச்சி நிலை. ஆனால், சங்க காலத்தில் இம்முறை காணப்பெறவில்லை.

## வாணிகக் கொள்கை

காவிரிப்பூம்பட்டினத்தின் வணிகர்கள் நேர்மையுள்ளவராய் காணப்பட்டனர். வள்ளுவர் நடுவுநிலைமை என்னும் அதிகாரத்தில் வணிகர்களின் அறம் பற்றிக் கூறியுள்ளார்.

பிறர் பொருளையும் தம் பொருள் போல போற்றிச் செய்தல் அதுவே வணிகம் செய்வோர்க்கு உரிய நல்ல வணிக முறையாகும் என்பதனை,

**''வாணிகம் செய்வார்க்கு வாணிகம்பேணிப்**

**பிறவும் தமபோல செயின்''[22]**

என்ற குறளின் மூலம் உணரமுடிகின்றது. இக்குறளுக்கு இணங்க காவிரிப்பூம்பட்டினத்தின் வணிகரும் காணப்பட்டனர். இதனை,

**''நெடு நுகத்துப் பகல் போல**

**நடுவு நின்ற நல் நெஞ்சினோர்**

**வடு அஞ்சி வாய்மொழிந்து**

**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**

**கொள்வதூஉம் மிகைகொளாது**

**கெடுப்பதூஉம் குறைகொடாது'' (பட்டினப். 206–210)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகின்றது. வணிகர் நீண்ட நுகத்தடியில் நடுமத்தியில் அமைக்கப் பெற்ற பகல் ஆணி போன்று நடுநிலைமையுடன் காணப்பட்டனர். நல்ல உள்ளத்துடன் பழிக்கு அஞ்சி உண்மையே பேசுவர். தாம் பொருள்களைப் பெறும்போது மிகுதியாகக் கொள்ளாமல் கொடுக்கும் போது குறைவாகக் கொடாமல் வாழ்ந்தனர். பல பொருள்களையும் தம் ஊதியத்தை வெளிப்படையாகக் கூறி விற்றனர்.

## மதுரை நகரமைப்பு

சங்ககாலத்தில் பாண்டியர்களின் தலைநகரமாக மதுரை விளங்கியது. மதுரையில் மூன்று சங்கங்களை நிறுவித் தமிழாராய்ந்த செய்தி மிக முக்கியமானதும் போற்றத்தக்கதுமாகும். மதுரை என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். தமிழும் மதுரையும் இனிமையின் இயல்பாய் அமைந்தவை. தமிழ் என்றால் மதுரை, மதுரை என்றால் தமிழ். இங்ஙனம் இவையிரண்டும் பிரிக்க இயலாதவை, இணைப்புடையன. அதனாலேயே மதுரையைப் போற்றிய புலவரெல்லோரும் தமிழோடு சேர்த்தே போற்றிப் புகழ்ந்தனர் என்பதை,

**‘‘தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே’’ (புறம். 58:13)**

**‘‘தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**

**மகிழ்நனை மறுகின் மதுரை’’ (சிறுபாண். 66–67)**

**‘‘தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை’’[23]**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகின்றது.

மதுரைக்கு மருதை, கூடல், நான்மாடக்கூடல், ஆலவாய், ஜீவன்முத்திபுரம், கன்னிபுரம், சமட்டிவிச்சாபுரம், பூலோக சிவலோகம், சிவநகரம், முடித்தலை கொண்ட சோழபுரம் முதலிய வேறுபெயர்கள் காலந்தோறும் வழங்கி வந்துள்ளன.

## மருதை

சங்க காலத்தில் வையை ஆற்றங்கரையில் மருத மரங்கள் மிகுதியாக இருந்துள்ளது. மருத மரங்கள் நிறைந்திருந்த காரணத்தால் ‘மருதை’ என்று அழைக்கப்பட்டதாகவும் பிற்காலத்தில் ‘மதுரை’ என்று திரிந்ததாகவும் சில ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அதற்குச் சான்றாக தற்போது மதுரையின் சுற்றுப் பகுதிகளில் வாழுகின்ற கிராமப்புற மக்கள் இன்றைக்கும் மதுரையை ‘மருதை’ என்றழைப்பதன் மூலம் அறிந்து கொள்ளலாம். இதனை,

> **‘‘மதுரை என்பது இன்றும் கிராம மக்களின் பேச்சு வழக்கில் ‘மருதை’ என்றே வழங்குகிறது. எனவே, இதுவே சரியாகவிருக்கலாம்’’[24]**

என்று மெ.சுந்தரம் குறிப்பிடுகிறார். மேலும்,

> **‘‘மருதை என்ற வழக்கே ஒலியிடம் பெயரால் (Metathesis) முறைப்படி மதுரை என்றானது’’[25]**

என்கின்றார் மெ. சுந்தரம்.

வையை யாற்றின் வளமான கரையில் அமைந்த இந்நகரின் மக்கள் இறங்கி நீராடுந்துறையாக ‘மருதத்துறை’ என்றொரு நீர்த்துறை இருந்துள்ளது. இதனை,

**‘‘தீம்புனல் வையைத் திருமருத முன்றுறை’’ (பரி. 22:45)**

"உருபுனல் வையை மருதோங்கு முன்துறை''

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## கூடல் மாநகர்

சங்கம் வைத்துச் செந்தமிழை வளர்த்த புலவர் எல்லாரும் கூடியதால் 'கூடல்' என்னும் பெயர் ஏற்பட்டதாக அறிஞர்கள் கூறுவர். சங்ககாலத்தில் தமிழ்ப் புலவர்கள் அனைவரும் கூடி இலக்கியப் பூர்வமான கலந்துரையாடல்கள் நடத்தியதன் காரணமாய் 'கூடல் மாநகர்' என்ற பெயர் ஏற்பட்டது என்பர்.

கூடல் என்ற சொல்லுக்கு நதிகளின் சங்கமம் என்று பொருள் உள்ளமையை எடுத்துக்காட்டி மதுரை வையையாறு வேறொரு கிளைநதியுடன் சங்கமமான இடத்தில் தோன்றிருக்க வேண்டும் என்றும் காலப்போக்கில் அக்கிளை நதியின் போக்கு மாற்றம் பெற்றிருக்க வேண்டுமென்றும் கூறுவர்.

சங்க இலக்கியத்தில் மதுரைக்கு உரிய பெயராகக் கூடல் என்பது குறிக்கப்படுவதை,

"பொய்யா விழவின் கூடற் பறந்தலை'' (அகம். 116:14)

"பெரும்பெயர் வழுதி கூடல் அன்னதன்'' (அகம். 315:7)

"நீள் உயர்கூடல் நெடுங்கொடி எழவே'' (கலி. 31:25)

"மாடம் மலிமறுகின் கூடல் குடவயின்'' (திருமுருகு. 71)

"பெரும்பெயர்க் கூடல் அன்ன'' (நற். 39:10)

"மூன்றுடன் கூடிய கூடுல் அனையை'' (பதிற்று. 50:7)

"பூந்தண்தார்ப் புலர்சாற்றின் தென்னவன் கூடல்'' (கலி. 57:8)

என்னும் பாடலடிகளின் மூலம் பல இடங்களில் கூடல் என்ற பெயர் வழக்கில் இருந்துள்ளது என்பதனை அறியமுடிகிறது. வந்தாரை வாழ வைத்து எந்நாட்டவரும் எவ்வூரினரும் வந்துகூடும் 'வளமான நகர்' என்பதால் கூடல் என்றும் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

## நான்மாடக்கூடல்

திசைக்கொன்றாய் கோட்டையின் நான்கு வாசற்புறங்களைக் கொண்டு ‘மாடக்கூடல்’ என்றும் ‘நான்மாடக்கூடல்’ என்றும் ‘மாடமதுரை’ என்றும்அழைக்கப்பட்டது.

மயமதம் கோட்டையின் வாயிலில் கோபுரம் இருப்பது சிறப்பு என்று பேசுகிறது. பண்டைத் தமிழகத்தில் மயமதே பெரிதும் போற்றப்பட்டது என்பது இலக்கியங்கள் மூலம் புலனாகிறது. மாடக்கூடல், நான்மாடக்கூடல், மாடமதுரை என்ற பெயர்கள் கோட்டை வாயில்களில் இருந்த கோபுரங்களால் ஏற்பட்ட பெயர்கள் என்பர். மதுரையிலும் கோட்டை வாயிலில் கோபுரம் இருந்ததை,

**‘‘மழையாடு மலையன் நிவந்த மாடமொடு**

**வையை அன்ன வழக்குடைவாயில்’’ (மதுரை. 335–356)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

இந்திரன் ஏழு மேகங்களை அனுப்பி மிகுதியான மழையை பெய்வித்து நகரை அழிக்க நினைத்தான். அதைப்பற்றி சிவபெருமானிடம் பாண்டியமன்னன் முறையிட்டான். சிவபெருமான் இந்திரன் அனுப்பிய ஏழு மேகங்களில் நான்கு மேகங்களை மதுரையின் நான்கு மாடங்களாக அமைத்து நகரைக் காத்தமையால் ‘நான்மாடக்கூடல்’ என்று அழைக்கப்பட்டதை திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்ற நான்கு பகுதிகள் சேர்ந்ததே நான்மாடக்கூடல் என்றும் கூறுவர். கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்ற தெய்வங்கள் இந்நகரில் கூடியதால் நான்மாடக் கூடலாயிற்று என்பர்.

## ஆலவாய்

ஆலவாய் என்ற பெயராலும் மதுரை அழைக்கப்பெற்றது. ‘ஆலம்’ என்ற சொல்லுக்கு நீர்நிலை என்று பொருள். பண்டைய மதுரையைச் சுற்றி அகழியும். கோட்டையின் உட்புறத்தில் அகழியையொட்டி வைகையும் எப்போதும் நீர்நிலைக்கு நடுவே அமைந்த ஊர் என்ற பொருள்பட இப்பெயர் வழங்கப்பெற்றது என்று அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

பாண்டியன் மதுரையை விரிவுபடுத்த எண்ணி, இறைவனிடம் அதன் எல்லையை வரையறுத்துத் தருமாறு வேண்டினான். சிவபெருமான் தன் கையணியாகிய பாம்பிடம் எல்லையை வரையறுக்க ஆணையிட்டார். பாம்பு வாலை நீட்டி வலமாகத் தன் உடலை வளைத்தது. அவ்வாலைத் தனது வாயில் சேர்த்து மதுரையின் எல்லையை வகுத்துக் காட்டியது. அன்றுமுதல் மதுரைக்கு ஆலவாய் என்னும் பெயர் அமைந்ததாகத் திருவிளையாடற் புராணம் கூறுகிறது. ஆலவாய் என்பது விடத்தைஉடைய பாம்பினைக் குறிக்கும். மதுரையில் எழுந்தருளிய ஈசன், ஆலமர நிழலில் வீற்றிருந்ததால் 'ஆலவாய்' என்னும் பெயர் ஏற்பட்டதாகவும் கூறுவர்.

## மதுராபுரி

மதுரம் என்றால் இனிமை என்றும் பொருள் தனஞ்செயன் எனும் விவசாயி ஒருமுறை வனப்பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்த போது கடம்பமரம் ஒன்றின் கண் சுயம்பு லிங்கம் இருப்பதையும் கடவுளின் கடவுளான இந்திரன் அந்த சுயம்புலிங்கத்தை வணங்கிக் கொண்டிருப்பதையும் பார்த்த விவசாயி அந்தச் செய்தியை உடனே குலசேகர பாண்டிய மன்னரிடம் தெரிவித்தார்.

பின் மன்னன் உடனே அந்தப் பகுதியைச் சுத்தம் செய்ய உத்தரவிட்டார். அந்த சுயம்புலிங்கத்தை மையமாக வைத்து புதிய நகரம் உருவாக்கவும் அதற்கு என்ன பெயர் வைக்கலாம் என்று மன்னர் அங்கு தோன்றி தனது தலை முடியிலிருந்து சில தேன் துளிகளை நகரின் மீது தூவி அந்த புதிய நகருக்கு மதுராபுரி என்னும் பெயர் சூட்டப்பட்டதாக ஒரு கதை உண்டு.

> **"மதுரமென்றால் இனிமை. அவ்வினிமையை உடையது மதுரையென்றும் சொல்லப்படுகிறது''**[26]

என்பார் சாம்பசிவன்.

## சிவராதானி, சிவநகரம்

சிவபெருமான் சுந்தரபாண்டியனாக அரசாண்ட காரணத்தால் பூலோக கைலாயம், சிவராஜதானி, சிவநகரம் என்றும் அழைப்பர். வரகுணபாண்டியனுக்குச் சிவலோகம் காட்டியதால் சிவலோகம் என்று பெயர் பெற்றது.

## சமட்டி விச்சாபுரம்

ஆன்மாக்களுக்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கையும் அருளுவதால் சமட்டிவிச்சாபுரம் எனப்படும்.

## ஜீவன் முக்திபுரம்

ஜீவன் முக்தர்கள் வாழ்ந்ததால் ஜீவன்முக்திபுரம் எனப்படும்.

## தலைநகர் மதுரை

சங்ககாலத்தில் மதுரை நகரம் பாண்டியனுக்குரிய தலைநகரமாகத் திகழ்ந்ததை,

**‘‘பெரும்பெயர் வதி கூடல் அன்ன’’ (நற். 39:10)**

**‘‘வாடா வேம்பின் வழுதி கூடல்’’ (அகம். 93:9)**

**‘‘…………………….. தென்னவன்**

**நெடுமாடக் கூடலகம்’’[27]**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகிறது.

வையை ஆறு மணலைக் கொழித்துக் கரைகளில் தள்ளியது. கரைகளில் மரச்சோலைகள் இருந்தன. சோலைகளில் கோங்கு மரங்கள் மிகுந்திருந்தன. கோங்கின்மலர்களும் மற்ற மரங்களின் மலர்களும் கரைகளிலெல்லாம் உதிர்ந்து கிடந்தன. நீர்ப் பெருக்கின்மேல் மலர்கள் மாலை போன்று வையை நீரில் மிகுந்தோடின. அச்சோலைகளைச் சுற்றி நீண்ட நாள்களாக வாழ்ந்து வரும் பாணர் குடிகளின் குடியிருப்புகள் இருந்தன. இதனை,

**‘‘தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்,**

**கோதையின் ஒழுகும் விரிநீர் நல்வரல்**

**அவிர்அறல் வையைத் துறைதுறை தோறும்**

**பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி**

**அழுந்துபட் டிருந்த பெரும்பாண் இருக்கையும்’’ (மதுரைக். 338–342)**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

## நகரமைப்பு

மதுரை நகரைச் சுற்றிலும் ஆழமான அகழியிருந்தது. அதன் கீழே மண்ணுள்ள வரையிலும் தோண்டப்பட்டு நீர் நிறைந்திருந்தது. வானத்தைத் தொடும்படி உயர்ந்த மதில் அமைக்கப்பட்டிருந்தன. மதிலில் பாதுகாவலுக்காகப் பல படைகள் இருந்தன. அம்மதிலின் வாயிலில் யாராலும் அசைக்க முடியாத வலிமையான கதவுகள் பொருத்தப்பட்டிருந்தன. அம்மதில் கதவிலுள்ள விளக்குகளுக்கு நெய்யூற்றி எரிப்பதால் திண்மையான கதவுகள் கருமையாகக் காணப்பெற்றன. மேகங்கள் உலாவுமாறு மலைகளைப் போல உயர்ந்த மாடங்கள் இருபக்கத்தும் ஓங்கியிருந்தன. வையை ஆற்றிலே எப்பொழுதும் நீர் ஓடிக் கொண்டிருப்பது போல் அக்கோட்டை வாயிலின் வழியே மக்களும் விலங்குகளும் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருந்தனர். அதனுள் பல்வகை ஊர்திகளும் வந்து கொண்டிருந்தன. இதனை,

**‘‘மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்**

**விண்ணுற ஓங்கிய பல்படைப் புரிசை**

**தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை**

**நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்**

**மழையாடு மலையின் நிவந்த மாடமொடு**

**வையை அன்ன வழக்குடை வாயில்’’ (மதுரைக். 351–355)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

## அகநகர் தோற்றம்

மதுரை நகருக்குள் பெயரி வீடுகள் இருந்தன. ஒவ்வொரு வீட்டிலும் கூடம், தாழ்வாரம், சமையற்கட்டு விருந்தினர் அறை, படுக்கையறை போன்ற பல பகுதிகள் இருந்தன. அந்த வீடுகள் வானத்தைத் தொடும் அளவிற்கு உயர்ந்திருந்தன. நல்ல காற்று வீசும்படியான பல சாளரங்களும் அவ்வீடுகளிலே அமைக்கப்பட்டிருந்தன. அந்நகரின் வழிகள் அகலமானது, நீளமானது. அவைகளின் தோற்றம் உயர்ந்த இரு கரைகளுக்கு இடையிலான வெள்ளம் பெருகியோடும் ஆறுகளை போல் காணப்பட்டதை,

''வகைபெற எழுந்து வானம் மூழ்கி

சில்காற்று இசைக்கும் பல்புழை நல்லில்

யாறுகிடந் தன்ன அகல் நெடுந்தெருவில்'' (மதுரைக். 357–360)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

காற்றை ஏற்ற இறக்கக் கோணங்களில் சுவர்களினூடே அமைத்த சாளரம் என்ற அமைப்பின் வழியே உட்செலுத்தவும் வெளித்தள்ளவும் செய்தன. வேனிற்காலத்தில் தமிழகம் துய்க்கும் வெப்பத்தைத் தணிக்க வீட்டின் வெளியில் உள்ள தென்றலை முற்றிலும் அனுபவித்துவிடும் வகையில் இல்லங்களின் கதவு மற்றும் சாளரங்களை அமைத்தனர். காற்று நன்கு வருவதால் விசிறி பயனின்றி வலையில் கிடந்தது. வேனில் காலத்தில் தென்றல் காற்றைத் தென்திசையில் இருந்து வரும் தென்றல் காற்றனாது சாளரங்களின் கதவுகள் வழியாகக் கட்டடத்தின் உள்ளே சென்றது. கட்டடங்களின் உள் வெளியில் உள்ள காற்று வரும் விதத்தைப் பொறுத்து அமைக்கும் அறிவியல் தொழில்நுட்ப அறிவைக்கொண்டு கட்டடங்களைக் கட்டி இருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

காற்று வீசும் திசையைக் கொண்டு அதற்குக் கொண்டல், கோடை, தென்றல், வாடை எனவும் அவர்கள் பெயரிட்டு அழைத்தனர். வடக்கிலிருந்து வீசும் வாடைக் காற்று உடலுக்குத் தீமை விளைவிக்கும் என்பதால் அத்திசையில் உட்புகும் காற்று வெளியேறும் வகையில் சாளரங்கள் எதிர்எதிர் திசையில் அமைக்கப்பட்டிருந்தன.

## தெருக்கள்

மதுரையில் நாளங்காடி, அல்லங்காடி என இரு கடைத் தெருக்கள் உண்டு. நாளங்காடி என்பது பகலில் விற்பனை நடக்கும் கடைத்தெருவாகும். அல்லங்காடி என்பது இரவில் விற்பனை நடக்கும் கடைத்தெருவாகும். அவை அழகிய ஓவியங்களைக் கண்டாற் போன்ற கண்ணுக்கினிய தோற்றத்தோடு அமைக்கப்பட்டிருந்தன. இதனை,

''மகிழ்ந்தோர் ஆடும் கலிகொள் சும்மை

ஓவுக்கண் டன்ன இருபெரு நியமத்து'' (மதுரைக். 364–365)

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்

முதலியோர்க்குரிய தெருக்கள் இருந்ததை,

**‘‘நால்வேறு தெருவினும் காலுற நிற்றர’’ (மதுரைக். 523)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகின்றது.

நூலோர் தமக்கு விதித்த நெறியில் தவறாது, இல்லற நெறிப்படி நடந்தனர். நெருங்கிய பல திரட்சிகளையுடைய மலைகளைப் போன்ற பல திரட்சிகளையுடைய மலைகளைப் போன்ற வீடுகளில் வணிகர் வாழ்ந்தனர். அவ்வீடுகள் பலவகை மாட்சிமைகளையுடையதாயிருந்தன. மிக உயரமாக இருந்ததலால் பருந்துகள் வந்து தங்கி மறுபடியும் மேலே பறக்கும் நிலையில் உயர்ந்திருந்தன. பலவகையான பொருள்களுடன் பல உணவுகளும் மிகுந்து அழகாயிருந்தன. மலைப் பொருள்கள் (மணிகள்), நிலத்தில் கிடைக்கும் பொருள்கள், கடலில் வரும் முத்துகளையும், பொன்னையும் வாங்கிக் கொண்டு பிற சிறந்த தேயத்திலிருந்து வரும் பொருள்களை எல்லாம் விற்போர் வாழும் வணிகத் தெரு மதுரையில் இருந்தது. இதனை,

**‘‘அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகிக்**

**குறும்பல் குழுவின் குன்றுகண் டன்ன**

**பருந்து இருந்து உகக்கும் பல்மாண் நல்இல்**

**பல்வேறு பண்டமோடு ஊண்மலிந்து கவினி**

**மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்**

**பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு**

**சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்’’ (மதுரைக். 500–506)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

**நாளங்காடி**

மதுரையில் நாளங்காடி, அல்லங்காடி என்று இருவேறு கடைகள் இருந்தன. கடல்நீர் ஆவியாகி மேகமாவதால் கடல்வற்றிவிடுவதில்லை. ஆறுகள் பலகடலில் வந்து கலப்பதால் கடல் பொங்கி வழிவதுமில்லை. அதுபோல் மக்கள் திரளாக வந்து பொருட்களை வாங்குவதால் பொருட்கள் தீர்ந்துவிடுவதும் இல்லை. பல இடத்திலிருந்தும் வணிகர்கள்

விற்பனைக்குப் பொருட்களைக் கொண்டு வருவதால் பொருட்கள் மிகாமலும் இருந்தன என்பதனை,

**‘‘மழைகொளக் குறையாது புனல்புகு மிகாது**

**கரைபொருது இரங்கு முந்நீர்போலக்**

**கொளக் கொளக் குறையாது தரத்தர மிகாது’’ (மதுரைக். 424–426)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## அல்லங்காடி

வெண்மையான பாய் விரிந்த காற்றால் செலுத்தப்பெற்ற கப்பல், பல வகையான பொருட்களை இறக்குமதி செய்யும் பட்டினத்தில் ஒல்லென ஒலிக்கும் ஓசைபோல கல்லென்ற முழக்கத்துடன் வந்து நிற்கும். இடமகன்ற நகரில் வணிகர் பலபேர் அணிகலன்களை வாங்கிக் கொண்டு உலவினர். பெரிய கடல் சூழ்ந்த இடத்தில் புலால் நாறும் பேரலைகளாகிய ஓதம் கரிய கழிகளில் விரைவாகப் பாயும்போது ஓசை பெரிதாக எழுந்தது. அச்சம் தருகின்ற நடுச்சாமத்தில் பேரலைகள் வந்து செல்வதால் பலவகையான பறவைகள் எழும்போது ஏற்படுகின்ற ஓசைபோல அந்திக் கடைகளில் மிகுதியான ஆரவாரம் இருந்தது என்பதனை,

**‘‘வால்இதை எடுத்த வளிதரு வங்கம்**

**பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து**

**ஒல்லென் இமிழ்இசை மானக் கல்லென**

**நனந்தலை விளைஞர் கலங்கொண்டு மறுகப்**

**பெருங்கடற் குட்டத்துப் புலபுத்திரை ஓதம்**

**இருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்து**

**உருகெழு பானாள் வருவன பெயர்தலின்**

**பல்வேறு புள்ளின் இசைஎழுந்தற்றே**

**அல் அங்காடி அழிதரு கம்பலை’’ (மதுரைக். 536–544)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

நக்கீரர் அங்காடியை ஆவணம் என்றும் சுட்டிச் சொல்கிறார் இதனை,

**“மல்லல் ஆவணம் மாலை அயர” (நெடுநல். 14)**

கோவலன் பகற்பொழுதில் நகரைச் சுற்றிப் பார்க்கும்பொழுது வையம், சக்கரங்களுடைய வண்டி, தேர்மொட்டு, கவசம், அங்குசம், தோற்கைத்தளம், அரைப்பட்டிகை, வளைகுடி, சாமரை, மூன்று வகைக்கேடயங்கள், குத்துக்கோல்கள், செப்புப் பொருட்கள், வெண்கலப்பொருட்கள் கயிற்றால் முடிந்து செய்யப்பட்ட பொருட்கள் இடையால் புனையப்பட்ட மாலை, ஈர்வான், தந்தத்தைக் கடைந்து செய்யப்பட்டவை, வாசனைப் புகைக்குரியவை, மயிர்ச்சாந்து பூசப்பட்ட பொருட்கள், பூமாலைகள் முதலியவை அங்காடித் தெருவில் விற்கப்பட்டமையை கண்டு நடந்தான் என்பதனை,

**“பண்ணும் கிளையும் பழித்த தீஞ்சொல்**

**எண்ணென் கலையோர் இருபெரு வீதியும்**

**வையமும் பாண்டிலும் மணித்தேர்க் கொடுஞ்சியும்**

**மெய்புகு கவசமும் வீழ்மணித் தோட்டியும்**

**அதற்புனை அரணமும் அரியா யோகமும்”[28]**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

அங்காடியில் பூக்கள், பூமாலைகள், சுண்ணம், வாசப் புகைக்குரிய பொருட்கள், செப்புப் பொருட்கள், பல்வகை திண்பண்டங்கள், பாக்கு வெற்றிலை, சங்கு சுட்ட சுண்ணாம்பு, சங்கு வளை முதலிய பொருட்கள் விற்கப்பட்டன என்பதனை,

**“தீம்புழல் வலசிக் கழற்கால் மழவர்**

**பூந்தலை முழவின் நோங்தலை கடுப்ப**

**பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்**

**பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்**

**பலர்தொகுப்பு இடித்த தாதுஉகு சுண்ணத்தர்**

**தகைசெய் தீம்சேற்று இன்னீர் பசுங்காய்**

**நீடுதொடி இலையினர் கோடுசுடு நூற்றினர்'' (மதுரைக். 395–401)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது.

சங்கை அறுத்து வளையல் முதலியன கடைந்து செய்வோர், அழகிய மணிகளைத் துளையிடுவோர், பொன்னை உருக்கி ஒளி பொருந்திய பொன் அணிகலன்கள் செய்வோர், பொன் தரம் பார்ப்போர், ஆடை விற்போர், கச்சுமுடிவோர், ஓவியத் தொழில் செய்வோர், நெய்தல் தொழில் செய்வோரும் என பல்வேறு தொழில் செய்வோர் மதுரையில் இருந்தனர். இதனை,

**''கோடுபோழ் கடைநரும் திருமணி குயினரும்**

**சூடுறு நன்பொன் சுடர் இழை புனைநரும்**

**பொன்னுரை காண்மரும் கலிங்கம் பகர்நரும்**

**செம்புநிறை கொண்மரும் வம்புநிறை முடிநரும்**

**பூவும் புகையும் ஆயும் மாக்களும்**

**எவ்வகைச் செய்தியும் உவமம்காட்டி**

**நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கின்**

**கண்ணுள் வினைஞரும் பிறரும் கூடித்**

**தென்திரை அவிர்அறல் கடுப்ப ஒண்பல்'' (மதுரைக். 511–519)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

அயல்நாட்டுப் பண்டங்களுக்குப் பல்வேறு மணிகளும் பொன்னும், முத்தும் பண்டமாற்றாகக் கொடுக்கப்பட்ட செய்தியை,

**''மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்**

**பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு**

**சிறந்த தோத்துப் பண்ணியம் பகர்நரும்'' (மதுரைக். 504–506)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது.

## வளம்

பாண்டிய மன்னன் பகைவரை போரில் வென்று பகை நாட்டிலிருந்து யானை, குதிரை, பசுக்கள், அரண்களை அழித்து அரண் கதவுகளைக் கொண்டு வந்தனர். நாள்தோறும் திறையாகச் சிறந்த பொருள்கள் வந்தன. கங்கையாறு மலைவளங்களைக் கொண்டு கடலில் புகுவதுபோல் எல்லா வகையான வளங்களும் மதுரையில் புகுந்தன. வந்த பொருட்களை அளந்து கணக்கிட்டுக் காண இயலாத அளவு பலவகையான பண்டங்கள் குவிந்தன. தேவருலகம் போன்று பொலிவுற்று மதுரை மிகுந்த புகழைக் கொண்டு விளங்கியதை,

**''மைபடு பெருந்தோள் மழவர் ஓட்டி**

**இடைப்புலத்து ஒழிந்த ஏந்துகோட்டு யானை**

**பகைப்புலம் கவர்ந்த பாய்பரிப் புரவி**

**வேல்கோல் ஆக ஆள்செல நூறி**

**காய்சின முன்பின் கடுங்கண் கூளியர்**

**ஊர்சுடு விளக்கின் தந்த ஆயமும்**

**நாடுடை நல்எயில் அணங்குடைத் தோட்டி**

**நாள்தொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி**

**நாள்தர வந்த விழுக்கலம் அனைத்தும்**

**கங்கையம் பேரியாறு கடல்படர்ந் தாஅங்கு**

**அளந்துகடை அறியா வளம்கெழு தாரமொடு**

**புத்தேள் உலகம் கவினிக் காண்வர**

**மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை'' (மதுரைக். 687–699)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

## பரிபாடலில் மதுரையின் அமைப்பு

எழுபது பாடல்களைக் கொண்ட பரிபாடலில் நான்கு பாடல்கள் மதுரையைப் பற்றியன என்று பழம்பாடல் ஒன்று கூறுகின்றது.

மதுரைமாநகரின் நடுவில் திருக்கோயில் அமைந்துள்ளது. நாற்புறமும் தெருக்களின் பின் தெருக்களாக அமைந்துள்ளன. இவ்வமைப்புத் தாமரைப்பூவின் அமைப்பை ஒத்திருந்தது. தாமரை மலரின் நடுவில் உள்ள பொகுட்டினைப் போன்று இறைவன் திருக்கோவில் விளங்கியது. பொகுட்டினைச் சுற்றியிருக்கும் இதழ்களைப் போன்று தெருக்கள் திகழ்ந்தன என்பதனை,

**''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**

**பூவொடு புரையும் சீருர், பூவின்**

**இதழகத்து அனைய தெருவம் இதழகத்து**

**அரும்பொருட்டு அனைத்தே அண்ணக் கோயில்''(பரி.திரட்டு. 8:1–4)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது. மதுரை நகரில் வேதியர் ஓதும் மறையொலி நிறைந்திருக்கும். அந்த மறையொலி கேட்டே மதுரை நகரத்து மக்கள் துயிலெழுவர். சோழன் தலைநகராகிய உறையூரிலும் சேரன் தலைநகராகிய வஞ்சியாலும் வாழும் மக்கள் கோழி கூவும் ஒலி கேட்டுத் துயிலெழுவது போன்று மதுரை மக்கள் துயிலெழுவதில்லை என்று மதுரை நகரின் சிறப்பைக் கூறுகிறது.

வையையாற்றில் நீராடிய மக்கள் ஒப்பனை செய்து கொள்ளுவதற்கென்று சில தனிமாடங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அம்மாடங்களுள் சில புலிமுக வடிவில் விளங்கின. அப்புலி வடிவத்தைக் கண்டு உண்மைப் புலியென்று கொண்டு களிற்றைப் பாயுமென வெருண்டு, பிடிகள் சிதைந்து ஓடுவதுண்டு.

மதுரை நகரில் பூக்களை ஆராய்ந்து கொய்பவர் பலர் இருந்தனர். அவர்கள் மலர் கொய்தற்கெனத் தனிக்கோல் ஒன்று வைத்திருந்தனர். அவர்கள் கொய்த மலர்களை மாலையாகக் கட்டுதற் பொருட்டு ஓரிடத்தில் குவிப்பர். அவற்றைக் குவிப்பதற்காகத் தனியே பூமண்டபங்கள் இருந்தன.

மதுரைமாநகரின் மதிலையொட்டி வையை சென்றது அதில் பெருகிவரும் வெள்ளத்தின் அலைகள், விண்ணுற நிவந்த மதிலின்மீது மோதும். அவ்வலையோசை கேட்டு நகரமக்கள் துயலெழுவர். மதிலில் நீண்டதொரு சுரங்கவழி நிலவியது. அதன் உள்ளே சென்ற ஆற்றுநீரை மதில் புறத்தே சொரியும் காட்சி, களிறு துதிக்கையைத் தூக்கி நீரைப்

பொழிவது போன்றிருக்கும். மதிலின் புறத்தே வையைக் கரையிலுள்ள மலர்ச்சோலைகளின் நடுவே பாணரும் கூத்தரும் வாழ்தற்கென்று பாக்கங்களும் சேரிகளும் விளங்கின.

## உறையூர்

உறையூர் சங்ககாலத்திய சோழ மன்னர்களின் தலைநகராகத் திகழ்ந்தது. அது சோழ நாட்டின் மேற்கில் காவிரியின் தென்கரையில் அமைந்திருந்தது. உறையூர் பண்டைய காலத்தில் உறந்தை என்ற பெயரிலேயே வழங்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் உறந்தை என்றே சொல்லே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் உறந்தை என்ற பெயரை உறையூர் என்று இளங்கோவடிகள் பயன்படுத்தியுள்ளார்.

## வேறுபெயர்கள்

உறந்தை, கோழியூர், வாரளம், உசகபுரம் என்ற பெயர்களாலும் உறையூர் அழைக்கப்பட்டது. எல்லாவகையான செல்வச் செழிப்புகளும், வளங்களும் உறையும் நகரமாதலின் உறையூர் என வழங்கப்பட்டது.

மதுரைத் தமிழகராதி உறையூர் பற்றி,

> **‘‘உறையூர் – திருச்சிராப்பள்ளிக்கருகிலுள்ள சோழனூர் மருதநிலத்தூர், உறந்தை, கோழி’’[29]**

என்று குறிக்கப்பட்டுள்ளது.

கோழி ஒன்று யானையை எதிர்த்துப் போரிட்டமையால் வீரமிக்க இந்த ஊர் கோழியூர் எனப்பட்டது. சோழ மன்னன் கோழியான் எனப்பட்டது. சோழ மன்னன் கோழியான் எனவும் அழைக்கப்பட்டான்.

> **‘‘கோழி யோனே கோப்பெருஞ்சோழன்’’ (புறம். 212:8)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. உறந்தை வெளிநாட்டார் குறிப்புகளில் ‘அர்கரு’ என்றும் கூறப்பெறுகின்றது. தாலமி குறிப்புகளில்  குறிக்கப்பெறும் ஓர்த்தூரா என்ற பெயரே உறந்தை என்ற சங்கப் பெயருடன் ஒப்பிடத்தக்க ஒலிப்புடன் காணப்பெறுகின்து.

உறையூர் வளம் நிறைந்து காணப்பட்டதை,

**''வளம் கெழு சோழர் உறந்தை பெருந்துறை'' (குறுந். 6:5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

சோழ நாட்டின் பண்டைய தலைநகரமான உறையூர் காவிரியாற்றின் கரையில் அமைந்திருந்தது.

> **''உறப்பு என்ற சொல் செறிவு என்று பொருள்படுவதைக் காணும்பொழுது மக்கள் நெருங்கி வாழ்ந்த இடமாக இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது''[30]**

என்பர் ஆர். ஆளவந்தார்.

உறையூர் இன்று திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு பகுதியாக இருக்கிறது.

> **''உறையூருக்குக் கிழக்கே திருச்சிராப்பள்ளி மலை இருந்தது. தாலமி என்னும் யவனர் 'ஒர்தொவுர' என்று குறிப்பிடுவது இந்த உறையூர்தான். ஒர்தொரவுர சோர் நகரின் (சோழ நகரின்) தலைநகரம் என்று தாலமி கூறுவது சிந்திக்கத்தக்கது. சோழர் நகார் இனத்தைச் சேர்ந்தவர் என்று அவர் கருதுகின்றார். உறையூரை, உரகபுரம் என்று வடமொழியாளர் கூறியிள்ளான்''[31]**

என்பர் மயிலை சீனி. வேங்கடசாமி.

## சேரி

உறையூரில் ஏணிச்சேரி, கதுவாய்ச்சேரி என்னும் சேரிகள் இருந்துள்ளன. முடமோசியர் என்னும் புலவர் உறையூரில் உள்ள ஏணிச்சேரியில் வாழ்ந்தமையால் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்றழைக்கப்பட்டார். அதுபோல் சாத்தனார் என்னும் புலவர் உறையூரில் உள்ள கதுவாய்ச்சேரியில் வாழ்ந்தமையால் தம் பெயரோடு உறையூர் இணைத்துக் கொண்டு உறையூர்க்கதுவாய் சாத்தனார் என்றழைக்கப்பட்டார்.

## அறங்கூறும் அவையங்கள்

உறையூரில் அறங்கூறும் அவையங்கள் இருந்துள்ளதால் அறம் நிலைபெற்றதை,

**“மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து**

**அறம்நின்று நிலையிற்று ஆகலின்’’ (புறம். 39:8–9)**

**“மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து**

**அறம் கெட அறியாதாங்கு’’ (நற். 400:7–8)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

## நாட்டைப் பண்படுத்துதல்

திருமாவளவன் சோழ நாட்டில் காடாக இருந்த பகுதிகளை எல்லாம் அழித்து மக்கள் வாழும் இடங்களாக மாற்றினான். தூசிகளினால் நிறைந்து காணப்பட்ட குளங்களைத் தூர்வாரி நீர்வளம் பெருக்கி நாட்டின் செல்வ வளத்தைப் பெருகச் செய்தான். நீண்ட தூண்கள் உடைய மாடங்களைக் கொண்ட உறையூரைச் சோழ நாட்டின் தலைநகராக்கினான். கோயில்கள் எடுப்பித்துப் பழமையான குடிகளைத் தன் முறைமையில் நிலை நிறுத்தினான். இலக்குமி வாழும் உறையூரின் பெரிய மதில் சுவரில் பெரிய வாசல்களையும் சிறிய வாசல்களையும் அமைத்து அதன் உச்சியில் மறைந்து நின்று அம்பு எய்தும் இடங்களில் எல்லாம் அம்புகளைச் சேர்த்து வைத்தான் என்பதனை,

**“காடுகொன்று நாடாக்கிக்**

**குளந்தொட்டு வளம்பெருக்கிப்**

**பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்**

**கோயிலொடு குடிநிறீஇ**

**வாயிலொடு புழையமைத்து**

**ஞாயிறுதொறும் புதைநிறீஇ’’ (பட்டினப். 283–288)**

என்று கூறுவதன் மூலம் நாடு வளமுடைய நன்கு தொழில்நுட்பம் வாய்ந்த கட்டிடங்களும் நீரினைச் சேமிக்கும் இடங்களும், படை பலமும் தேவை என்பதை அறிந்து அதற்கு முக்கியத்துவம் கொடுத்து நகரத்தை அமைத்தான் என்பதனை அறியமுடிகிறது.

உயர்ந்த மாடங்களை உடையது உறையூர் என்பதனை,

**''பிறங்கு நிலை மாடத்து உறந்தையோனே'' (பட்டினப். 285)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

குமரி ஆற்றிற்கும் வடமலைக்கும் இடைப்பட்ட சோழநாட்டில் உயர்ந்த மாளிகைகள் நிறைந்த ஊராக உறையூர் விளங்கியது என்பதனை,

**''குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி**

**வடமலைப் பெயர்குவை ஆயின் இடையது**

**சோழன் நன்னாட்டுப் படினே கோழி'' (புறம். 67:6–8)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

சோழ நாட்டின் தலைநகராகிய உறையூரில் வீற்றிருந்து ஆட்சிபுரிந்த பெருவேந்தன் தித்தன் ஆவான். இவனைத் தித்தன் வெளியன் என்றும் அழைத்தனர் என்பதனை,

**''சினம்கெழு தானைத் தித்தன் வெளியன்'' (அகம். 15:2–5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

ஆற்றல்மிக்க பாணன் கற்றி என்பார் தித்தனோடு போர் செய்வதற்குப் படைத்திரட்டி வந்தனர். அப்போது தித்தனின் அவையில் எழுந்த தெளிவான முரசின் ஓசை கேட்டு அஞ்சிப் போரைத் தொடங்காமல் ஓடிவிட்டனர் என்பதனை,

**''முன்நாள் ஆடிய கவ்வை, இந்நாள்**

**வலிமிகும் முன்பின் பாணனொடு, மலிதார்த்**

**தித்தன் வெளியின் உறந்தை நாள்அவை**

**பாடுஇன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்**

**போர்அடு தானைக் கட்டி**

**பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே'' (அகம். 226:12–17)**

என்ற பாடல் அடிகளில் தித்தனின் தலைநகரமாகிய உறந்தை மதிலரணாய்ச் சிறப்புற்றது. நகரரைச் சுற்றிலும் காவற்காடுகள் இருந்ததை,

> **“நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்**
>
> **கல்முதிர் புறங்காட்டு அன்ன’’ (அகம். 122:21–22)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

தித்தனுக்கு உரிமையான கானலம் பெருந்துறை என்னும் துறைமுகத்திற்கு வாணிகத்தின் பொருட்டுப் பொன்னைக் கொண்டு வரும் மரங்கலங்கள் சிதையும்படி இறாமீன்களின் கூட்டம் தாக்கும் என்பதனை,

> **“இரங்குநீர்ப் பரப்பின் கானல்அம் பெருந்துறை**
>
> **தனம்தரு நன்கலம் சிதையத் தாக்கும்**
>
> **சிறுவெள் இறவின் குப்பை அன்ன’’ (அகம். 152: 6–8)**

என்ற பாடலடிகள் மூலம் சோழநாட்டின் வணிக வளமும் கடல் வளமும் ஒருங்கே கூறப்பட்டுள்ளது.

உறையூரில் சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறை அகழாய்வு செய்துள்ளது. அவ்வகழாய்வு உறையூர் கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 4 ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்தில் சிறந்த வாணிக மையமாக விளங்கியமைக்குச் சான்றுகள் தருகின்றன. கார்னீலியன், பெரில் முதலிய அழகு மணிக்கற்கள், சாயம் தோய்ப்பதற்கான சாயத்தொட்டி, சங்ககாலச் சோழர் காசுகள், தமிழ்ப்பிராமி எழுத்து பொறிக்கபெற்ற பானை ஓடுகள் முதலியவை அகழாய்வில் கிடைத்துள்ளன.

## வஞ்சி

சங்ககாலத் தமிழகத்தில் வஞ்சி சேரர்களின் மிகச்சிறந்த தலைநகரமாக விளங்கியுள்ளது. வஞ்சி ஒரு பேராற்றாங்கரையிலே இருந்தது. வஞ்சி மாநகர் வளம் தந்த பேராறு, தன்பொருநை, தன்னான் பொருநை எனப் பலவாறு அழைக்கப்பெறும். வான் அளவிய புகழையும் வெற்றியையும் கொண்டதாக வஞ்சி மாநகரம் விளங்கியுள்ளது. புகார், மதுரை போன்று வஞ்சி மாநகரம் விரிவாகக் கூறப்படவில்லை.

## வேறுபெயர்கள்

பூவா வஞ்சி, வாடாவஞ்சி, ஆதிபுரம், வஞ்சுளாரணியம், கர்ப்பப்புரி, கருவூர், பாற்கரபுரம், கண்மங்கலசேத்திரம், முடிவழங்கு சோழபுரம் முதலான பெயர்களால் வஞ்சி மாநகரம் அழைக்கப்பட்டுள்ளது.

திருச்சி மாவட்டத்தில் உள்ள கருவூரை 'வஞ்சி' என்று சங்கப்புலவர்கள் அழைக்கின்றனர். அமராவதி ஆற்றங்கரையில் இவ்வூர் உள்ளது. இப்பகுதியிலுள்ள எல்லா ஊர்களுக்கும் இவ்வூர் மையமாக கருவூலமாக கருவாக அமைந்ததால் கருவூர் எனப் பெயர்பெற்றது நாளடைவில் கரூர் ஆயிற்று எனலாம். கருவூர் பண்டைய பெருவழிகள் சந்தித்த இடத்தில் அமைந்திருந்தமையால் அவ்வூருக்குப் பிறநாட்டு வாணிகர்களும் விரும்பி வந்தனர். அதனால் பொன்வளம் கொழித்தது. பொன்வளம் மிகுந்திருந்த கருவூரை 'திருமாவியனகர்' என்று சங்கப்புலவர்கள் போற்றினர்.

கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக கரூர் இருந்தது. சேரர் இந்நகரத்தைக் கைப்பற்றிய பிறகு தங்கள் சேரநாட்டின் தலைநரமாகக் கருவூரின் பெயரையே அமைத்துக்கொண்டனர். என்பதனை,

> **“கருப்புராணம் எழுதியுள்ள சா.கிருட்டிணசாமி என்பவர் சேரநாட்டில் பெரியாறு என்னும் ஆற்றின் அருகில் உள்ள கரூரே சேரர்களின் வஞ்சிமாநகர் என்று குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தையே கனகசபை பிள்ளையவர்களும் கே.ஜி. ஷேசய்யரும் ஒப்புக்கொண்டு உள்ளனர். கொங்கு நாட்டிலுள்ள கரூர் பகுதியையும் ஆனிலை என்னும் நகரையும் அதனைச் சுற்றியுள்ள இடங்களையும் பிற்காலச் சோழர்கள் வென்று தங்கள் நாட்டுடன் சேர்த்துக் கொண்ட பிறகு அதற்குச் சேரர் கொங்கு என்று பெயர்சூட்டினர். சோழநாட்டிலுள்ள கரூர்ப்பட்டினமே சங்க நூல்களில் காணப்பெறும் வஞ்சிமாநகர் எனக் கொள்ளல் வேண்டும்”[32]**

என்று மயிலை. சீனி வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார்.

> **“கி.பி. 15இல் தாலமி தம்முடைய நூலில் இதைக் கரொவுர என்று குறிப்பிட்டுள்ளார்”[33]**

என்று மயிலை. சீனி. வேங்கடசாமி கூறுகிறார். கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரை கருவூர் சேரர்தலை நகரமாக விளங்கியது. அதற்கு பின் இரட்டர்கள், கங்கர்கள் ஆகியோரின் தலைநகரமாகவும் நிலைபெற்றிருந்தது. கருவூரில் அடிக்கடி அரசியல் மாற்றம் ஏற்படினும் வாணிக வளர்ச்சி தொடர்ந்து நிலைபெற்று வந்தது. அதனால் கி.பி. 13ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் இவ்வூர் கருவூராகிய வஞ்சி மாநகர் என்று அழைக்கப்பெற்றது.

வானளாவிய புகழும் வெற்றியும் உடைய நகரம். வஞ்சி தண்பொருநை ஆறு பாயும் நகரம். இப்பொருநை வஞ்சிமா மாநகரை வளைந்து ஓடி, அந்நகர்க்கு இயற்கை அரணாக அமைந்தன.

செல்வக்கடுங்கோ வாழியாதனின் யானைகள் அவனது பகைவரின் மதிலை இடறின. அப்போது மதிலின் புழுதி அதன் கன்னங்களில் படிந்தன. இவற்றின் கழுத்துமேடு அழகிய புள்ளிகளைக் கொண்டது. தனித்தனியாகப் பிரிந்து சென்று பல்வேறு மன்னர்களின் காவல் காடுகளில் திரிந்தன. அவ்யானைகளின் தாக்குதலுக்கு எதிர்நிற்க முடியாமல் பகைவர்கள் பணிந்து திறை தந்தனர். திறைப்பொருளை வறுமையோடு இருப்பவர்களுக்கு கொடுத்து வறுமையைப் போக்கிய உன் சேவடி பொலிவுடன் திகழவேண்டும். இப்படிப் பலரும் வாழ்த்தினர். இவனது பகைவர் இவனைக் குடையுடன் பணிவர். புல்லிய சிறு இலைகளைக் கொண்டது வஞ்சி மரம். வஞ்சிமரங்கள் கோட்டை மதிலை உரசிக்கொண்டு இருப்பதால் இவன் ஊர் வஞ்சி எனப்பட்டது. இந்த மரத்தை உரசிக்கொண்டு ஒடுவது பொருநை ஆறு. இந்தப் பொருநை ஆற்று மணலின் எண்ணிக்கையைக் காட்டிலும் பலநாள் வாழ்க என வாழ்த்தியதனை,

> **“செல்வக் கடுங்கோ வாழி யாதன்**
>
> **ஒன்னாத் தெவ்வர் உயர்குடை பணிந்துஇவன்**
>
> **விடுவர் மாதோ நெடிதோ நில்லாப்**
>
> **புல்லிலை வஞ்சிப் புறமதில் அலைக்கும்’’ (புறம். 379:30–33)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

மணிமேகலையில் வஞ்சியைப் பற்றி விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. வஞ்சிமாநகர் புறநகர், அகநகர் என்று இரு பிரிவாக இருந்தன. வஞ்சியின் புறநகரில் தெய்வங்களுக்கான

கோயில்கள் இருந்தன. வேதம் ஓதுவோர் அமரும் திண்ணைகள் (மேடைகள்) துறவிகள் அமர்ந்து அறங்கூறும் பள்ளிகள் இருந்தன.

நல்ல தவம்புரியும் முனிவர்கள், கற்றறிந்து புலன் அடக்கமுடன் வாழும் அறிஞர்கள், நன்னெறிகளைக் கண்டறியும் பொருட்டுப் பழமையான பல நூல்களையும் ஆராயும் புலவர்கள் அப்புற நகரிலே எங்கும் பரவியிருந்தனர். இதனை,

**“தேவகுலமும் தெற்றியும் பள்ளியும்**

**பூமலர் பொழிலும் பொய்கையும் மிடைந்து**

**நல்தவ முனிவரும் கற்றுஅடங் கிவரும்,**

**நல்நெறி காணிய தொல்நூல் புலவரும்**

**எங்கணும் விளங்கிய எயில்புற இருக்கை’’**[34]

என்ற அடிகளால் அறியலாம்.

அகநகருள் பல வீதிகள் அமைந்திருந்தன. தொழிலாளர்கள், கலைஞர்கள், அரசர்கள், அந்தணர்கள் இவர்களுக்குத் தனித்தனி வீதிகள் இருந்தன. சோலைகள், நீர்நிலைகள், அறச்சாலைகள், செய்குன்றுகள் முதலியன இருந்தன. கண்ணகியின் கோயில் அகநகருள்தான் அமைக்கப்பட்டிருந்தது. கோவலனுக்கு ஒன்பது தலைமுறைக்கு முன்னோன் ஒருவனால் வஞ்சி நகரில் புத்த விகாரம் ஒன்று கட்டப்பட்டிருந்தது.

நகரைக் காக்கும் காவலாளர்கள் நிறைந்து வாழ்கின்ற பெரிய வீதி, பலவகையான மீன்களை விற்பனை செய்வோர், உப்பு விற்போர், கள் விற்போர், பிட்டு வாணிகர், அப்ப வாணிகர், மாமிசம் விற்போர், கீரைகள் விற்போர், வாசனைப் பொருள்கள் விற்போர், இவர்கள் வாழும் வீதிகள் இருந்தன. குயவர்கள், செம்பு வேலை செய்வோர், வெண்கல வேலைக்காரர்கள், பொன் ஆபரணம் செய்வோர், பொன்னை உருக்குவோர், மரவேலை செய்யும் தச்சர்கள், சிற்பிகள், ஓவியர்கள்,தோல் தைப்பவர்கள், தையல்காரர்கள், மாலை தொடுப்பவர்கள், சோதிடர்கள், இசையின் நுணுக்கங்களை வகைகளை அறிந்து யாழ் வாசிக்கும் பாணர்கள் ஆகியோர் வாழ்கின்ற பலவகைப்பட்ட வீதிகள் இருந்தன.

## முசிறி

முசிறித் துறைமுகப்பட்டினம் சேரநாட்டுத் துறைமுகப் பட்டினங்களிலே சிறப்பானதாகும். இத்துறைமுகம் கிழக்குக் கடற்கரையில் உலகப் புகழ் பெற்றிருந்த காவிரிப் பூம்பட்டினத்தைப் போன்று மேற்குக் கரையில் உலகப் புகழ் பெற்றிருந்தது. இத்துறைமுகமானது மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து உண்டான பேரியாறு விழுந்த இடத்தில் அமைந்திருந்தது என்பர்.

> **''முசியினானது ஊர் என்றும் பட்டினம் என்றும் அழைக்கப்படும். இவ்வூர் கடற்கரை நகரங்களின் அமைப்பு மரபினையொட்டி அமைந்த மகோதைப்பட்டினமாகிய கொடுங்களூரில் அமைந்த நகரமாகும்''[35]**

என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.

## முசிறிப்பெயர்க்காரணம்

> **''முசுறுப்புல் என்பது ஒரு வகைப்புல் ஆகும். இக்கடற்கரைப் பட்டினத்தை அடுத்து இவ்வகையான புல் மிகுந்து விளையும் இயல்புடையது. இதனாலேயே இவ்வூர் முசிறி எனப் பெயர் பெற்றது''[36]**

சேர நாட்டுக் கடற்கரையில் முசிறி என்னும் துறைமுகம் அமைந்திருந்தது. சேரநாட்டின் விளைபொருட்கள் அனைத்தும் அத்துறைமுகத்தில் குவிக்கப்பட்டிருந்தன. ஏறக்குறைய ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த யவன நாட்டு அறிஞர்களாகிய பிளினியும், தாலமியும் இத்துறைமுக நகரத்தை 'முசிரிஸ்' என்று குறித்துள்ளார்கள். சேரநாட்டு மன்னர்க்கு முசிறி தலை சிறந்த துறைமுகமாய் இருந்தமையால் 'முசிரியார் கோமான்' என்னும் சிறப்புப் பெயர் அன்னவர்க்கு உரியதாயிற்று.

வஞ்சிமா நகரத்துக்கு மேற்கே கள்ளிப் பேரியாறு கலந்த இடத்தில் அதன் வடகரைமேல் கடற்கரையையொட்டி முசிறித் துறைமுகமும் முசிறி பட்டினமும் இருந்தன. சங்ககாலத்தில் இது பெரிய நகரமாகவும் இருந்தது. அந்த காலத்தில் சேரநாட்டிலிருந்து பெருவாரியாக மிளகு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று. ஆகவே சமஸ்கிருத மொழியில் மிளகுக்கு, மிரிசி என்று பெயர் கூறப்பட்டது. முசிறி பட்டினமாகிய மிரிசி பட்டினத்திலிருந்து வந்தமையால் வடமொழியாளர் அந்த நகரத்தின் பெயரையே மிளகுக்குப் பெயராக்கி மிரிசி என்று கூறினார்கள்.

முசிறி பட்டினத்திற்குச் சங்க இலக்கியங்களில் பல்வேறு பெயர்கள் காணப்படுகின்றன. இதனை,

**“கொய்கவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்**

**முதுநீர் முன்துறை முசுறி முற்றி’’ (அகம். 57:14–15)**

**“புனல்அம் கள்ளின் பொலந்தார்க்கு குட்டுவன்**

**முழங்குடல் முழவின் முசிறி அன்ன’’ (புறம். 348:9–10)**

என்னும் பாடல் அடிகள் மூலம் அறிந்து கொள்ளமுடிகிறது.

> **“முசிறியில் உண்டான முத்துக்களைக் ‘கௌர்ணெயம்’ என்பர். பேரியாற்றுக்குச் சூர்ணியாற்றின் முகத்துவாரத்தில் இம்முத்து உண்டான படியினாலும் இதற்கு ‘கௌர்ணெயம்’ என்று பெயர் வந்தது என்பர். கௌர்ணெயம் என்பது சௌர்ணெயம் எனப்பெயர் திரிந்து வந்ததாகும். முசிறிக் கடலில் உண்டான முத்துக்கள் முசிறிப் பட்டினத்தின் ஒரு பகுதியான பந்தர் என்னும் இடத்தில் விற்கப்பட்டன’’[37]**

என மயிலை சீனிவேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

முசிறி பட்டினத்தைப் பற்றிய செய்திகள் ‘பெரிப்புளுசு’ தரும் செய்திகளோடு ஒப்பிடத்தக்கன. பொன்னும், மணியும், இரத்தினமும், மென்மை மிக்க புடவைகளும், சித்திரங்கள் அமைந்த ஆடைகள் பவளங்கள் ஆகியவையும் செம்பும் ஈயமும் கோதுமையும் இத்துறைமுகங்களில் இறக்குமதி செய்யப்பட்டன என்று கூறுகின்றார். மேலும் கோதுமை மாலுமிகளுக்கு வேண்டிய அளவே இறக்குமதி செய்யப்பட்டதென்றும், உள்நாட்டு வணிகர் கோதுமை வியாபாரஞ் செய்யவில்லை என்று கூறுகிறார். மேலும் இப்பட்டினத்திற்குக் குட்ட நாட்டிலிருந்து வரும் மிளகும், முத்தும், யானைத் தந்தங்களும், பட்டும், இரத்தினமும் ஏற்றுமதி செய்யப்பட்டன என்றும் கூறுகிறார்.

சங்க காலத்தில் அரபு வணிகர்கள் முசிறித் துறைமுகப்பட்டினத்தின் ஒருபகுதியில் தங்கி வணிகம் செய்தனர். அவர்கள் தங்கியிருந்து வணிகம் செய்த இடம் ‘பந்தர்’ எனப்படும். பந்தர் என்னும் அரபுச் சொல்லின் பொருள் அங்காடி அல்லது கடைத்தெரு

ஆகும். முசிறி நகரத்து பந்தரில் அரபு வணிகர் முக்கியமாக முத்துக்களை விற்றார்கள். பந்தர்க்கு அருகிலிருந்த கொடுமணம் என்னும் ஊர் பொன் நகைகளுக்கு பேர் பெற்றிருந்தது. முசிறிப் பட்டினத்துப் பந்தர், கொடுமணம் என்னும் ஊர்களில் நகை வணிகம் சிறப்பாக இருந்தது. இதனை,

**''கொடுமணம்பட்ட நெடுமொழி ஒக்கலொடு**

**பந்தர்ப் பெயரிய பேர் இசைமூதூர்**

**கடன்அறி மரபின் கைவல் பாண**

**தெண்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை'' (பதிற்றுப். 7:1–4)**

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

மலர்ந்த காந்தளினது மலரை இது தெய்வத்திற்குரியதென்று அறிந்தும் அதனைவிட்டு நீங்காமல் ஊதிய, விரைந்து பறத்தலையுடைய தும்பியென்னும் சாதி வண்டுகள், அக்காந்தள் மலரிலுள்ள தேனை உண்டபின் தம் பறத்தல் இயல்பை இழந்தன. அத்தகைய இடமான புகழ்ச்சி மிக்க நீண்ட மலையாகிய பக்க மலைகள் உயர்ந்த நேரிக்கு உரிய ஒப்பற்றோனாகிய செல்வத்தையுடைய கோமானை நெடுமொழியையுடைய சுற்றத்தோடு பாடிச் சென்றால், யாழை வாசித்தலின் முறையையறிந்த கைதேர்ந்த பாணனே, கொடுமணம் என்னும் ஊரிலேயுண்டான நல்ல ஆபரணங்களைப் பந்தரென்னும் பெயரையுடைய பெரிய புகழையுடைய பழைய ஊரினிடத்தேயுள்ள தெளிந்த கடலில் விளைந்த முத்துக்களோடு பெறுவாய் என்பது அப்பாடலின் பொருளாகும். மேலும் இச்செய்தியினை,

**''கொடுமணம்பட்ட வினைமான் அருங்கலம்**

**பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்**

**வரையகம் நண்ணி, குறும்பொறைநாடி,**

**தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம் பொறி'' (பதிற்றுப். 8, 74:5–8)**

என்னும் பாடல் அடிகள் விளக்கி நிற்கின்றன.

கொடுமணம் என்னும் ஊரில் உண்டான தொழில் மாட்சிமைப்பட்ட அரிய

ஆபரணங்களையும் பந்தர் என்னும் ஊரில் விளைந்த பலரும் புகழ்கின்ற முத்துக்களையும், பெருமலையினிடத்தே சென்று சிறிய குன்றுகளில் தேடி ஆராய்வர் என்றும் கூறப்பட்டுள்ளது.

யவனக் கப்பல் வணிகர் முசிறித் துறைமுகத்துக்கு வந்து மிளகை வாங்கிச் சென்றதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. யவனர் மரக்கலங்களில் வந்து கறியை ஏற்றிக் கொண்டு போனதைப் புலவர் தாயங்கண்ணனார் கூறிகிறார். கறி என்பது சங்க காலத்தில் மிளகைக் குறிக்கும் சொல்லாகும்.

**‘‘………………… சேரலர்**

**கள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க,**

**யவனர் தந்த வினைமான் நன்கலம்**

**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**

**வளம்கெழு முசிறி ஆர்ப்பு எழவளைஇ’’ (அகம். 149:7–11)**

சுள்ளி என்னும் பெயர்கொண்ட பேரியாறு சேர அரசர்க்கு உரித்தானது. அவ்வழகிய ஆற்றினது வெண்ணிற நுரை சிதறுமாறு தொழில் மாட்சியமைப்பட்ட, யவனர்கள் மரக்கலத்திலே தாம் கொண்டு வந்த, பொன்னை விலையாகக் கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச் செல்லும் வளம் பொருந்தியது முசிறித்துறைமுகம் ஆகும்.

> **‘‘மிளகு வியாபாரத்திற்கு வந்த கிரேக்கர் இந்திய மருந்து என மிளகைப் பாராட்டினர். அவர்கள் இறைச்சியைப் பதம்கெடாது காக்கவும் உணவுகளுக்குப் பாகப் பொருளாகச் சேர்க்கவும் மிளகுப் பொடியைத் தூவி வந்தனர். மிளகின் சுவையை மாளிகை வாசிகள் முதலாக மண்குடிசை வாசிகள் ஈறாக அனைவரும் அறியும் நிலைமை ஏற்பட்டதால் தென்னாட்டிலிருந்து உரோம் நாட்டிற்குச் சென்ற பொருள்களில் முக்கால் பாகம் மிளகாகவே இருந்து வந்தது’’[38]**

என்பார் இளங்குமரன்.

> **‘‘கி.மு. முதல் நூற்றாண்டில் தென்மேற்குப் பருவக்காற்றை ஹிப்பல்ஸ் என்னும் யவன மாலுமி அரபு வணிகரிடமிருந்து அறிந்து கொண்டு,**

அக்காற்றின் உதவியால் நடுகடலினூடே கப்பலை முசிறிக்கு ஓட்டிக் கொண்டு வந்தான். தென்மேற்குப் பருவக்காற்றின் உதவியை யவனர் அறிவதற்கு முன்பு கப்பல்களைக் கரையோரமாகச் செலுத்திக் கொண்டு வந்தனர். அதனால் நெடுங்காலம் பிரயாணஞ் செய்ய வேண்டியிருந்தது. பருவக்காற்றின் உதவி கண்டுபிடித்த பிறகு யவனக் கப்பல்கள் நேரே முசிறித் துறைமுகத்துக்கு விரைவாகவும் காலதாமதம் இல்லாமலும் வரத்தொடங்கின. இந்தப் பருவக்காற்றுக்கு ஹிப்பல்ஸ் என்ற பெயரை (அதைக் கண்டுபிடித்த ஹிப்பல்ஸ் என்பவன் பெயரரை) யவனர் சூட்டினார்கள்''[39]

என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.

முசிறித் துறைமுகத்தில் அரபு முதலான நாடுகளிலிருந்து வந்த படகுகள் தங்கின. ஆனால் யவனரின் பெரிய கப்பல்கள் துறைமுகத்தில் வந்து நிற்கவில்லை. ஏனெனில் பெரியாறு அடித்துக் கொண்டுவந்த மணல் நெடுங்காலமாகத் துறைமுகத்தில் தூர்ந்து கொண்டு அந்த இடத்தை ஆழம் இல்லாமல் செய்துவிட்டது. யவனக் கப்பல்கள் பெரிதாகவும், உயரமாகவும் இருந்த படியால் அவை துறைமுகத்தில் நிற்காமல் தூரத்தில் கடலிலேயே நின்றன. ஆகையால் சரக்குகளைத் தோணிகளில் ஏற்றிக்கொண்டு போய் யவனக் கப்பல்களில் இறக்கினார்கள். இதனை,

''மனைக் குவைஇய கறி மூடையால்

கலிச் சும்மையகரை கலக்குறுந்து

கலம் தந்த பொற்பரிசம்

கழித் தோணியான் கரை சேர்க்குந்து

மலைத் தாமும் கடல் தாரமும்

தலைப் பெய்து வருநர்க்கு ஈயும்

புனல்அம் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்

முழங்குகடல் முழவின் முசிறி அன்ன'' (புறம். 343:3–10)

என்னும் பாடல் அடிகள் உணர்த்தி நிற்கின்றன.

நாளடைவில் முசிறி என்ற பெயர் மழுங்கி மறைந்தது. மகோதைப் பட்டினம் என்ற பெயர் அதற்கு வழங்கலாயிற்று. கடற்கரையிலே களித்திலங்கிய மகோதைத் துறைமுகமும் அதனை அடுத்து நின்ற அஞ்சைக்களம் என்ற திருக்கோயிலும் தேவாரத் திருப்பாசுரத்திலே குறிக்கப் பெற்றுள்ளன. இதனை,

**''வெளுத்தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்**

**விளங்குங்குழைக் காதுடை வேதியனே**

**இறுத்தாய்இலங் கைக்திறை யாயவனைத்**

**தலைபத்தொடு தோள்பல இயற்றுவிழக்**

**கறுத்தாய்கடல் நஞ்சமு துண்டுகண்டம்**

**கடுகப் பிரமன்தலை ஐந்திலும் ஒன்று**

**அறுத்தாய் கடலங்கரை மேல் கோதை**

**அணியார்பொழில் அஞ்சைக் களத்து அப்பனே''[40]**

என்று பாடினார் சுந்தரர். இவ்வாறு முசிறி என்றும் மகோதை என்றும் பெயர் பெற்ற இந்த பட்டினம் பின்னாளில் அழிந்துவிட்டது.

பேரியாறு கடலில் கலக்கும் இடத்திலுள்ள முசிறியில் வாழ்ந்த தமிழ் வணிகர்களும் நைல் ஆறு கடலில் கலக்கும் அலெக்சாந்திரியா நகர கிரேக்க வணிகனும், கி.பி.150ல் செய்த வணிக ஒப்பந்தம் ஒன்று (பேபிரசில் கிரீக் மொழியில் எழுதியது) வியன்னா அருங்காட்சியகத்தில் 1985–ல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது என்று பி.டி. சீனிவாச ஐயங்கார் குறிப்பிட்டுள்ளார்.

## கொற்கை

பாண்டி நாட்டின் தாமிர பரணியின் சங்க முகத்தில் அமைந்த துறைமுக நகரம் கொற்கை ஆகும். இக்கொற்கைத் துறைமுகம் தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்தில் சங்ககாலப் பாண்டியர்களின் இயற்கைத் துறைமுகமாக புகழுடன் விளங்கியது. கொற்கை என்பதற்குப் படை அல்லது படைவீடு என்று கால்டுவெல் பொருள் கொள்கின்றார்.

**“மருங்கூர்ப் பட்டினத்துக்குத் தெற்கே கொற்கைக் குடாக்கடலும் அதன் மேற்குக் கரையில் கொற்கைப் பட்டினமும் இருந்தன. கொற்கையைப் பெரிப்புளூ என்னும் கிரேக்க நூல் கொல்கிஸ் (Kolkuis) என்று கூறுகின்றது. தாலமியும் இதைக் கூறுகிறார். கொற்கைக் குடாக் கடல் அக்காலத்தில் நிலத்தின் உள்ளே ஐந்து மைல் ஊடுருவியிருந்தது’’[41]**

என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.

கொற்கைப் பட்டினம் துறைமுகப்பட்டினமாக இருந்தது. கொற்கைக் கடலில் முத்துச் சிப்பிகளும், சங்குகளும் அதிகளவில் உண்டானபடியால் முத்துக்களும், சங்குகளும் விற்கப்பட்டன. உலகம் முழுவதும் உள்ள மக்களால் விரும்பப்பட்ட முத்துக்கள் இந்த துறைமுகத்திலிருந்து பிற பகுதிகளுக்கு வணிகத்தின் பொருட்டு அனுப்பி வைக்கப்பட்டன.

கொற்கையின் கோட்டை வாயில் பொற்றகடுகளாலும் முத்துகள் மணிகள் முதலியவற்றாலும் பதிக்கப்பெற்றுக் கவினுற விளங்கின. கொற்கையில் வாணிகத்தின் பொருட்டு யவனர்களும் அரேபியர்களும் தங்கிய இடமே இன்று காயல்பட்டினம் என்றழைக்கப்படுகிறது. கொற்கைத் துறைமுகம் முத்து சங்கு குளிக்கும் இடமாய்த் திகழ்ந்துள்ளது. அங்குச் சங்கறுக்கும் தொழில் சிறப்புடன் நடைபெற்றுள்ளது என்பதை அகழாய்வு முடிவுகள் விளக்குகின்றன.

சூல்முற்றி, ஒளி முதிர்ந்து விளங்கும் சிறந்த முத்துக்களையும் விளங்கும் சங்கினையும் மூழ்கி எடுப்பவர் உறையும் சேரிகளையும், கள்ளாகிய உணவை உண்ணும் இழிந்த குடிகள் தங்கியுள்ள சிற்றூர்களையும் கொண்டது கொற்கை ஆகும். இதனை,

**“விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்**

**இலங்குவளை, இடுஞ்சேரி**

**கட்கொண்டிக் குடிப்பாக்கத்து**

**நற் கொற்கையோர் நசைப்பொருந’’ (மதுரைக். 135–138)**

என்னும் பாடலடிகள் மூலம் இச்செய்தியினை அறியமுடிகிறது. இங்கு சேரி என்பது சங்கும், முத்தும் குளிப்பார் தங்கியுள்ள இடம் ஆகும். பாக்கம் என்பது கள்ளுண்ணும் குடிகள் வாழும் சிற்றூர் ஆகும்.

கொற்கை முத்தின் சிறப்பினைப் பல்வேறு பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**''மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**

**கொற்கை அம்பெரும் துறைமுத்தின் அன்ன'' (அகம். 27:8–9)**

**''புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை**

**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து'' (அகம். 130:9–11)**

**''கவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்**

**கவர்நடைப் புரவி கால்வடுத் தடிக்கும்**

**நல்தேர் வழுதி கொற்கை முன்துறை'' (அகம். 130:9–11)**

**''நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**

**மகாஅர் அன்ன மந்தி, மடவோர்**

**நகாஅர் அன்ன, நளநீர் முத்தம்**

**வாள்வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி,**

**தோள்புறம் மறைக்கும் நல்கூர் நுசுப்பின்**

**ஊர்இயல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**

**கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்**

**தத்துநீர் வரைப்பின் கொற்கைக் கோமான்'' (சிறுபாண். 55–62)**

என்பது அப்பாடலடிகள் 'தத்துநீர் வரைப்பின் கொற்கை' என்பதனால் கொற்கை சிறந்த துறைமுகப்பட்டினமாக விளங்கியமையும், வணிகத்தில் சிறந்து விளங்கியமையும் உணர்த்தப்படுகின்றன. பாண்டிய நாட்டுக் கடற்கரை வளத்தையும், வணிகத்தையும் மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் கூறுகிறார்.

கடலில் உண்டான முத்துக்களும், சங்குகளை அறுத்து உண்டாக்கின வளைகளும் நவதானியங்களும், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்திய உப்புக் கண்டங்களும் நாவாய்களில் எற்றிக் கொண்டு வந்ததை,

"முழங்கு கடல்தந்த விளக்கு கதிர்முத்தம்

அரம்போழ்ந்துஅறுத்த கண்நேர் இலங்குவளை

பரதர் தந்த பல்வேறு கூலம்

இருங்கழிச் செநறன், தீம்புளி, வெள்உப்பு

பரந்துஓங்கு வரைப்பின் வன்கைத்திமிலர்

கொழுமீன் குறையே துடிக்கண் துணியல்

விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சநர்

நனந்தலைத் தேஎத்து உய்ம்மார்

புணர்ந்து உடன்கொணர்ந் புரவியொடு அனைத்தும்

வைகல் தோறும் வழிச் சிறப்ப

நெய்தல் சான்ற வளம்பல பயின்றுஆங்கு" (மதுரைக். 315–325)

என்ற பாடலடிகளில் மாங்குடி மருதனார் விளக்குகிறார். இதன்வழி பாண்டிநாட்டின் கடற்கரை வளத்தை அறிந்துகொள்ளமுடிகிறது.

## தொண்டி

"சங்க காலத்திலே கிழக்குக் கடற்கரையிலும்மேற்குக் கடற்கரையிலும் இரண்டு தொண்டிப்பட்டினங்கள் இருந்தன. இரண்டும் துறைமுகப்பட்டினங்கள் ஒரு தொண்டி சேர நாட்டில் மேற்குக்கரையில் இருந்தது; மற்றொரு தொண்டி பாண்டி நாட்டில் கிழக்குக் கடற்கரையிலிருந்த பாண்டி நாட்டுத் தொண்டியாகும்"[42]

என்று மயிலை சீனிவேங்கடசாமி கூறுகின்றார்.

தொண்டி நகரம் யவனர்கட்கு நன்கு அறிமுகமான வணிகப்பட்டினம் ஆகும். குறிஞ்சி, மருதம், நெய்தல் வளங்கள் நிரம்பிய நகரமாதலின், இதன் மன்னனை நாடன் என்பதா? ஊரன் என்பதா? சேர்ப்பன் என்பதா? என்று புலவர் சந்தேகத்துடன் கூறுவதிலிருந்து தொண்டிப் பட்டினத்தின் வளத்தினை அறியலாம்.

“நாடன் என்கோ ? ஊரன் என்கோ ?

பாடுஇமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ ?

யாங்கனம் மொழிகோ, ஓங்கு வாட் கோதையை ?

புனவர் தட்டை புடைப்பன் அயலது

இறங்கு கதிர் அலமிகு கழனியும்

பிறங்கு நீர்ச்சேர்ப்பினும், புள்ஒருங்கு எழுமே’’ (புறம். 49:1–6)

என்பது பாடலடிகள். தொண்டிப்பட்டினத்தின் இயல்புகளைச் சங்க இலக்கியத்தில் உள்ள பல்வேறு பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

“குலை இறைஞ்சிய கோட் தாழை

அகல்வயல், மலை வேலி

நிலவு மணல் வியன் கானல்

தெண் கழிமிசைத் தீப்பூவின்

தண தொண்டியோர் அடு பொருந’’ (புறம். 9–13)

“உப்புநொடை நெல்லின் மூலரல் வெண்சோறு

அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து

கொழுமீன் கடியொடு குறுமகள் கொடுக்கும்

திண்தேர்ப் பொறையன் தொண்டி அன்ன’’ (அகம். 60:4–7)

“வெண்கோட்டு யானை விறற்போர்க் குட்டுவன்

தெண்திரைப் பரப்பின் தொண்டி’’ (அகம். 290:12–13)

“திண்தேர் நள்ளி கானத்து அண்டர்

பல்ஆ பயந்த நெய்யின், தொண்டி

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு’’ (குறுந். 210:1–3)

என்னும் பாடலடிகள் மூலம் இச்செய்தியினை அறியமுடிகிறது.

தொண்டி என்னும் ஊரிலுள்ள வயல்களில் பருவம் தவறாது விளைந்த வெண்ணெல் அரிசி என்று தொண்டி நகரின் வளமையைச் சிறப்பித்துக் கூறுவதனை,

**"...... ....... தொண்டி**

**முழுதுடன் விளைந்த வெண்ணெல்'' (குறுந். 210:2–3)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது.

கடலலையின் இனிய இசையோடும் தெருக்கள் தோறும் எழும் மத்தளத்தின் இனிய இசையோடும் முழங்குகின்ற இடம் தொண்டி என்பதனை,

**"திரைஇமிழ் இன்இசை அளைஇ அயலது**

**முழவுஇமிழ் இன்இசை மறுகுதொறு இசைக்கும்**

**தொண்டி'' (ஐங்குறுநூறு. 171:1–3)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

தொண்டி கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ளதால், கிழக்குக் கடலிலிருந்து வீசுகிற காற்றுக்குக் கொண்டல் காற்று என்று பெயர்.

**"இந்தத் தொண்டி பாண்டி நாட்டில் இப்போதைய இராமநாதபுர மாவட்டத்தில் இருந்தது என்று தோன்றுகிறது''[43]**

என மயிலை சீனி வேங்கடச்சாமி தம்முடைய பழங்காலத் தமிழர் வாணிகம் என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.

தொண்டித் துறைமுகத்தை ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரமும் விளக்குகிறது. கடல் கடந்த நாடுகளிலிருந்து அகிற்கட்டை, சந்தனக்கட்டை, பட்டுத்துணி, சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கருப்பூரம் முதலான வாசனைப் பொருட்களை ஏற்றி வந்த நாவாய்கள் கொண்டல் காற்றின் உதவியால் தொண்டித் துறைமுகத்துக்கு

வந்ததையும், இறக்குமதியான அந்தப் பொருட்களைத் தொண்டியிலிருந்து பாண்டியனின் தலைநகரான மதுரைக்கு அனுப்பப்பட்டதையும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

**“ஓங்கு இரும் பரப்பின்**

**வங்க ஈட்டத்துத் தொண்டியோர் இட்ட**

**அகிலும், துகிலும், ஆரமும், வாசமும்**

**தொகுகருப் பூரமும் சுமந்துடன் வந்த**

**கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்**

**வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்**

**பங்குனி முயக்கத்துப் பணிஅரசு யாண்டுளன் ?”[44]**

பெருங்கடல் பரப்பிலுள்ள நாவாய்கள் தொண்டிப் பகுதியிலுள்ள மக்கள் திறையாகக் கொடுத்த அகிலையும் துகிலையும் ஆரத்தையும் வாசனைத் திரவியங்களையும் கருப்பூரத்தையும் ஒரு சேர சுமந்து, பாண்டிநாடு நோக்கி வந்த கீழக்காற்றோடு, பாண்டியனின் கூடல் நகரிலே புகுந்து நெடுவேலான கொடிய காமனின் வில் செய்யும் விழாவினைக் காணும் பின்பனிக் காலமும் எங்குளதே **?** என்பது பாடலின் பொருளாகும்.

இங்கு குறிப்பிட்ட பொருள்கள் எல்லாம் கிழக்குக் கடலுக்கப்பால் கீழக்கோடி நாடுகளிலிருந்து வந்தவை. இந்தக் காலத்தில் இந்தோனேஷியா என்றும் கிழக்கிந்தியத் தீவுகள் என்று கூறப்படுகின்ற தீவுகள் அந்தக் காலத்தில் சாவகநாடு என்று கூறப்பட்டன. இங்குக் கூறப்பட்ட பொருட்கள் எல்லாம் அந்தக் காலத்தில் சாவக நாட்டுக்கே உரியவை. இப்பொருள்கள் அந்தக் காலத்தில் வேறு எங்கும் கிடைக்காதவை ஆகும்.

## எயிற்பட்டினம் (சோபட்டினம்)

சங்க காலத்தில் தொண்டை நாட்டில் முக்கியத் துறைமுகப் பட்டினமாக இருந்தது எயிற்பட்டினம் ஆகும். இதற்கு சோ பட்டினம் என்னும் பெயர் இருந்தது. எயில் என்றாலும் சோ என்றாலும் மதில் என்பது பொருள். இந்தத் துறைமுகப் பட்டினத்தைச் சூழ்ந்து மதில் இருந்தபடியால் இப்பெயர் பெற்றது இது. பிற்காலத்தில் மரக்காணம் என்று பெயர் பெற்றது. பெரிப்ளுஸ் என்னும் கிரேக்க மொழிநூல் இந்தப் பட்டினத்தைச் ‘சோ பட்மா’ என்று கூறுகிறது. ‘சோ பட்மா’ என்பது சோ பட்டினம் என்பதன் மரூஉ ஆகும்.

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் தாம் பாடிய சிறுபாணாற்றுப்படையில் இந்தப் பட்டினத்தைக் குறிப்பிடுகிறார்.

**“பாடல் சான்ற நெய்தல் நெடுவழி**

**மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய**

**பணிநீர்ப் படுவின், பட்டினம் படரின்**

**ஓங்குநிலை ஒட்டகம் துயில்மடிந் தன்ன**

**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறதின்**

**கரும்புகைச் செந்தீ மாட்டி பெருந்தோள்” (சிறுபாண். 151–156)**

கரையிடத்துள்ள வெள்ளிய மணற்பரப்பில் கடல்பரந்து ஏறுகின்ற நெய்தல் நிலத்தே கிடந்த நெடுவழியிடை உப்பங்கழிகள் சூழ்ந்த ஊர்களையும், எயிலால் சூழப்பட்ட குளிர்மிகு பொய்கைகளையும் உடைய எயிற்பட்டினத்தை அணுகுவீர். அங்கு செல்லின் ஒட்டகம் உறங்கிக் கிடந்தாற் போன்ற கடல் கொணர்ந்து ஒதுக்கிய அகில்மர விறகால் தீயினை எரித்து அதன் புகையால் மகிழலாம் என்று கூறுவதிலிருந்து எயிற்பட்டினத்தில் அகில் கட்டைகள் வந்திறங்கிய செய்தியினை அறிந்துகொள்ளலாம். முடிச்சு உள்ள அகில் மரக்கட்டை, படுத்துத் தூங்கும் ஒட்டகம் போன்ற உருவத்தில் இருப்பதை அறியமுடிகின்றது.

**“வால்உளைப் பரவியொடு வடவளம் தரூஉம்**

**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**

**மாடம் ஓங்கிய மணல்மலி மறுகின்**

**பரதர் மலிந்த பல்வேறு தெருவின்**

**சிலதர் காக்கும் சேண்உயர் வரைப்பின்**

**நெல்உழு பகட்டொடு கறவை துன்னர்**

**ஏழகத் தகரோடு எகினம் கொட்கும்” (பெரும்பாண். 320–326)**

எயிற் பட்டினத்தில் பல்வேறு பண்டக சாலையுடைய தெருக்கள் காணப்படும். இங்குள்ள துறைமுகத்தில் நாவாய்களில் வந்து இறங்கிய பொருள்களில் குதிரைகளும் வட இந்திய பொருள்களும் இருந்தன என்று புலவர் கூறுகின்றார். பரதர் மலிந்த தெருக்கள் என்று

கூறுவதிலிருந்து கப்பல் வணிகம் இங்கு சிறப்பாக நடைபெற்றதை அறியமுடிகிறது. இந்த துறைமுகத்தில் உயரமான கலங்கரை விளக்கம் காணப்பட்டது.

## தொகுப்புரை

- நகர், நகரம் ஆகிய சொற்கள் தமிழர் சமூக வாழ்வில் வாணிகமும் கைவினைத் தொழிலும் சிறப்படைந்து பல்வேறு குடிகளைச் சேர்ந்த மக்கள் வாழும் பேரூரைக் குறிக்கப் பயன்பட்டன.
- குறிப்பிட்ட அளவிற்குக் காட்டை அழித்தலும் முன்னுள்ள குளங்களை ஆழப்படுத்துதலும் அடுக்குமாடிக் கட்டடங்களைக் கட்டுதலும், நகரைச் சுற்றிக் காவல், அரண், வளைந்த மதில்கள், கோபுரங்கள், மாடங்கள், கூடங்கள், அகன்ற வீதிகள், வாயில்கள், மன்றுகள், பூம்பொழில்கள் முதலியன கண்டு உருவாக்கம் செய்வதே நகரமைப்பாகும்.
- சோழநாட்டின் தலைநகரங்களாக உறையூர், காவேரிப்பூம்பட்டினம் ஆகியவை இருந்துள்ளன. பூம்புகாரில் உணவின்றித் தவிக்கும் வறிஞர்களும் அன்னமிடும் அறங்கூழ்ச் சாலைகளும் இருந்தன. உயிரினங்கள் நீர் அருந்துவதற்கு வசதியாக நீர்த்தொட்டி முற்றத்தில் அமைக்கப்பட்டிருந்தன. துறவிகள் தவம் புரியும் சமண பௌத்துவ பள்ளிகள் இருந்தன. காவிரிப்பூம்பட்டினம் பழங்காலத் தமிழகத்தில் புகழ்பெற்ற வணிகத்தலமாக விளங்கியது. இந்தத் துறைமுகத்தில் மிகப் பெரிய பாய்மரக் கப்பல்கள் பாய்களை விரித்து அதன்மேல் கொடிகள் அசைய வந்து நிற்கும் என்று குறிப்பிடுவதன் மூலம் காவிரிப்பூம்பட்டினம் மிகப் பெரிய துறைமுகம் என்று அறியலாம்.
- சங்ககாலத்தில் பாண்டியர்களின் தலைநகரமாக மதுரை விளங்கியது. புலவர்கள் மதுரையைத் தமிழொடு சேர்த்து போற்றிப் புகழ்ந்தனர். மதுரை நகரைச் சுற்றிலும் ஆழமான அகழியும், உயர்ந்த மதிலும் அமைக்கப்பட்டிருந்தன. மதுரை அகநகருக்குள் பெரிய வீடுகள் இருந்தன. நாளங்காடி அல்லங்காடி என இருகடைத் தெருக்கள் காணப்பட்டன.
- வஞ்சி சேரர்களின் மிகச்சிறந்த தலைநகரமாக விளங்கியுள்ளது. சேரநாட்டு கடற்கரையில் இருந்த முசிறித் துறைமுகப் பட்டினமும் சங்ககால மக்களின் வணிகச் சிறப்பிற்குச் சான்றாகக் காணப்படுகின்றன. முசிறித் துறைமுகத்தில் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களில் மிக முக்கியமானது கறி என்றழைக்கப்படும் மிளகு

ஆகும். இத்துறைமுகத்தில் பொன், வெள்ளி, முத்து போன்ற விலையுயர்ந்த பொருட்கள் பண்டமாற்று செய்யப்பட்டன.

- கொற்கை பாண்டிய நாட்டுத் துறைமுகங்களுள் மிகச் சிறந்தது ஆகும். இங்கு முத்து குளிக்கும் தொழில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதனால் முத்துகளும், சங்குகளும் கொற்கைத் துறைமுகத்திலிருந்து வெளிநாடுகளுக்கு அதிகமாக ஏற்றுமதி செய்யப்பட்டன.

# சான்றெண் விளக்கம்


1. மயிலை சீனி. வேங்கடசாமி, தமிழர் வளர்த்த அழகுக்கலைகள், ப. 24
2. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 2
3. கா. அப்பாதுரை, தென்னாடு, ப. 35
4. தமிழ் லெக்சிகன் – தொகுதி ஐந்து, ப. 2124
5. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும், ப. 64
6. தமிழ் லெக்சிகன் – தொகுதி ஐந்து, ப. 2124
7. பா. ஜெயக்குமார், தமிழகத் துறைமுகங்கள், ப. 20
8. கோ. தேவராசன், மயிலை சீனி. வேங்கடசாமி, தமிழுக்கு வழங்கிய கொடை, ப. 103
9. மணி. சிறை செய் காதை, 37–38
10. மேலது, பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதை, 52
11. மேலது (குறிப்புரை), 52–53
12. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், பக். 38–40
13. நா. தியாகராசன், பூம்புகாரில் வரலாற்று எச்சங்கள், ப. 7
14. சிலம்பு. இந்திரவிழவு எடுத்த காதை, 133–134
15. Indian Anti Query, Vol XII, PP. 332-333
16. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழும் ஊரும் பேரும், ப. 33
17. கா. அப்பாத்துரை, ஆயிரத் தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப. 51
18. குறள். 756
19. இ.மா. கோபால கிருஷ்ணன், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 78
20. தி.மு. பாலசுந்தரனார், சங்க நூற் கட்டுரைகள், பக். 68–69
21. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப. 127
22. குறள். 120
23. சிலம்பு. நாடுகாண் காதை, 58
24. மெ. சுந்தரம், மதுரை பெயர் ஆராய்ச்சி ஒன்பதாம் ஆய்வுக்கோவை, தொகுதி இரண்டு, ப. 460
25. மேலது, ப. 459
26. ச. சாம்பசிவன், மாநகர், மதுரை, ப. 15

27. முத்தொள்ளாயிரம், 37:3–4

28. சிலம்பு. ஊர்காண் காதை, 166–170

29. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப. 373

30. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் தொகுதி–1, ப. 80

31. மயிலை சீனி. வேங்கடசாமி, சங்ககாலத் தமிழக வரலாறு, ப. 41

32. மேலது, ப. 95–96

33. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்கு நாடும் துளுநாடும், ப. 56

34. மணி. வஞ்சி மாநகர் புக்க காதை, 72–76

35. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 72

36. கலைக்களஞ்சியம் தொகுதி–8, ப.

37. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 74

38. இரா. இளங்குமரன், தென்னாட்டு வணிகம், ப. 41

39. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 86

40. தேவாரம். 1014

41. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 79

42. மேலது, ப. 72

43. மேலது, ப. 73

44. சிலம்பு. ஊர்காண் காதை, 106–112

# இயல் – 4

# சங்ககால அரண்மனையின் அமைப்புகள்

## முன்னுரை

அரசன் வாழும் இல்லம் கோயில் என்று குறிக்கப்பட்டது. மன்னன் அறநெறியோடு அருள்நெறியும் பெற்றவனாக நீதி நெறிமுறைகளை வழுவாது நின்று ஆட்சி செய்துள்ளான்; மக்களால் தெய்வமாக மதிக்கப்பட்டான். அரசர்களுக்குள் பொறாமையால் பகை ஏற்பட்ட காலத்தில் அரசன் பாதுகாப்பான மனையில் வாழவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. ஆகையால் தனது பெருமனையைப் பாதுகாக்கும் பொருட்டு பெரிய மதில்களைத் தனது அரண்மனையைச் சுற்றிலும் எழுப்பிப் பெரிய அகழிகளையும் உண்டாக்கினான். இவ்வமைப்பினால்தான் அரண் சூழ்ந்த மனையானது அரசனது அரண்மனை என்னும் பெயரைப் பெறுவதாயிற்று. அரசன் தன் அரண்மனைக்கும் மக்களுக்கும் தக்க பாதுகாப்பளிக்கும் நோக்கத்தில் ஞாயில்களுடன் அரண்களையும் எழுப்பினான். ஐவகை அரண்கள், வாயில், மகரவாயில், நாளோலகம் (சபை கூடும் மண்டபம்), அந்தப்புரம், சுவரில் சாலோகம் (சாளரம்), மாடம், நிலா முற்றம், மன்றம், மதிலைப் பள்ளி என அரண்மனைகள் பலவகையான அங்கங்களோடு கட்டப்பட்டிருந்ததை இலக்கியங்கள் குறித்துள்ளன. அவ்வகையில் அரண்கள் பற்றியும் அரசனுடைய மனையைப் பற்றியும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## அரசு உருவாக்கம்

தனித்து வாழ்ந்த மனிதன் குழுவாக வாழ ஆரம்பித்தவுடனே அவனுள் தலைமைப் பண்பு துவக்கம் பெறலாயிற்று. எண்ணங்கள், செயல்கள், தனிமனித நடவடிக்கைகள், வாழ்வியல் முறைகள் எனப் பலவற்றிலும் வேறுபட்டிருக்கும் மனிதனை ஒன்றிணைக்க இத்தலைமை தேவைப்பட்டது. இத்தனிமனிதத் தலைமையே அரசனாக, அவனது ஆட்சிக்குட்பட்டதே அரசாக மாறியது.

தமிழ் மக்களுடைய பண்பாட்டு வளர்ச்சியை முல்லை நில மக்களின் முன்னேற்றம் மூலம் அறிந்துகொள்ளவும். இம்மக்களின் தொழில் ஆடு மாடுகளை மேய்த்தல் ஆகும். அவற்றில் கிடைக்கும் பொருள்களை விற்று அதில் கிடைக்கும் செல்வத்தை வைத்து சிறப்போடு வாழ்ந்தனர். அதனால் தன்னிடம் இருக்கும் செல்வத்தையோ, ஆநிரைகளையோ பகைவர்கள் கவர்ந்து செல்லாதிருக்க முல்லை நில மக்களுக்குத் தலைமை தேவைப்பட்டது. எனவே அவர்களுள் வளமையும் வலிமையும் திறமையும் கொண்ட ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர். கால்நடைகளை அதிகமாக வைத்திருந்த குடும்பத்தலைவனே அக்காலத்தில் செல்வச் சிறப்பால் முதன்மை பெற்றுத் திகழ்ந்தான். அத்தலைவனைத்தான் மக்கள் முதன்முதலில் 'கோன்' என அழைத்து வந்தனர் மக்கள். இடையரைக் குறித்த 'கோன்' என்ற சொல்லே அரசனையும் குறித்துள்ளது என்பதை,

**''கொற்றவர்தம் கோன் ஆகுவை'' (மதுரைக். 74)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. ஆகவே, முல்லை நில மக்களிடையேதான் முதன்முதலில் தலைமைப்பண்பு தோன்றியிருக்க முடியும் என்பது தெளிவாகிறது. இதனையே,

> **''நாட்டிற்குத் தலைவனாய் இருக்கும் அரசனின் தலைமை முல்லை நிலத் தலைவரிடமே தோன்றி இருத்தல் வேண்டும்''[1]**

என்று வித்தியானந்தன் கூறுகின்றார்.

மிருக நிலையிலிருந்து தன்னை உயர்த்திக் கொண்டவன் மேலும் அவன் அனுபவத்தின் அடிப்படையில் தலைமையின் தேவையை உணர்ந்திருக்க வேண்டும். ஆகவேதான், தலைமைப்பண்பு என்பது பண்பாட்டின் சுழற்சியில் விழுமியதாகப் போற்றப்படுகிறது.

> **''முல்லை நிலம் விவசாயத்திற்குரிய நிலமாக்கப்பட்டது. முல்லை மருதமானது. முல்லை நிலத்தவர்கள் விவசாயிகளானார்கள். முல்லையில் குடியேற்றங்கள் நிகழ்ந்தன. நிலையான வாழ்க்கை ஏற்பட்டது. விவசாயம் குடியிருப்புகளை வேண்டி நின்றது. அதிகளவு குடியிருப்புகள் ஏற்பட்டன. விவசாய விளைச்சல்களை சேமித்துவைக்கும் முறைகள் தோன்றின. ஆயர்கள் அரசரானார்கள். இதன் விளைவாக மன்னன் தோற்றம் பெறுகிறான்''[2]**

என்று மௌனகுரு குறிப்பிடுகிறார்.

முல்லை நில மக்களைப் போலவே மருதநில மக்களிடம் செல்வச் செழிப்பு மிகுந்து காணப்பட்டது. வயல் சார்ந்த பகுதியில் இவர்கள் வாழ்ந்ததால் வயலில் விளையக்கூடிய தானியங்களையும் பயிர்களையும் விலங்குகளிடம் இருந்தும் பிற நில மக்களிடம் இருந்தும் பாதுகாக்க அங்கு ஒரு தலைவர் தேவைப்பட்டார். அதனால் தம்மில் அதிக நிலம் உடையவர்களை தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர் என்பதை அறியமுடிகின்றது. இதனையே,

> **''முல்லை நிலத்தைவிட மருத நிலத்திற்குப் பாதுகாப்பு மிகுதியாகத் தேவைப்பட்டது. எனவே மருத நிலத்தில் நிலையான அரசு ஏற்பட்டது''[3]**

என்கிறார் இராசமாணிக்கனார். மருத நிலத்தில் ஏற்பட்ட அரசு வளர்ந்து ஓங்கி பிற குறுநில அரசுகளையும் தனது ஆளுகைக்குள் கொண்டு வந்தது.

> **''இத்தகைய வர்க்கப் பேதங்கள் ஏனைய மூன்றுவித நிலங்களிலும் அன்றைய காலகட்டத்தில் திட்டவட்டமாக ஏற்படவில்லை. எனினும், 'அரசு வளர்ந்தோங்கிய பிறகு அங்கே கோலோச்சிய அரசனுக்கு அருகாமையில் அவன் படைக்கலம் சென்று ஆணை புரியும் சூழ்நிலையில் அருகாமையிலிருந்த முல்லை, நெய்தல், குறிஞ்சி நிலங்கள் அவனது ஆளுகைக்குள் அடங்கின. இவ்வாறு மருத நிலத்தில் உண்டான அரசுகள் தாம் வடக்கே மகதம், கோசலம், வங்கம், பாஞ்சாலம் ஆகிய தேசங்களும் தெற்கே சேர, சோழ, பாண்டிய அரசுகளுடன் 'தமிழ் கூறும் நல்லுலகிலிருந்த பன்னிரு குறுநில அரசுகளுமாகும். அரசு என்ற அடக்குமுறை ஆட்சிக்கருவி உள்ள நாட்டில் இருந்த அடிமை வர்க்கங்களை அடக்கும் கருவியாகச் செயல்பட்டது. மட்டுமல்ல, ஏனைய இளைத்த குறுநில மன்னர்களை அழித்துத் தன்னுடன் இணைத்துக்கொள்ளும் ஆக்கிரமிப்புத் தன்மையும் கொண்டவையாக விளங்கியது''[4]**

என்று கே.முத்தையா குறிப்பிடுகிறார்.

## வேந்தன்

சங்க இலக்கியத்தில் வேந்தனை மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், கோ,

வேந்தர், மன்னர், அரசர் ஆகிய சொற்கள் ஒரேவிதமான பொருள் பொதிவைக் கொண்டவைகளாகக் கருதப்படுகின்றன. ஆனால் இந்தச் சொற்கள் தன்னளவில் சிறுசிறு வேறுபட்ட பொருள் அமைப்பு உடையவை. இதனை,

> **“சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவனை வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால் சுட்டுகின்றன. பின்னர் எழுந்த நிகண்டுகள் ஆட்சித் தலைவனை முப்பத்தைந்து பெயர்களால் சுட்டுகின்றன. வேந்தனை குறிக்கும் அனைத்துப் பெயர்களும் ஏதோ ஒரு காரணம் பற்றி வழங்குவன. நிகண்டுகள் சுட்டும் முப்பத்தைந்து பெயர்களும் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை வேந்தன், மன்னன், அரசன், இறை அல்லது இறைவன், காவலன் ஆகியவையே மிகுதியாகப் பயின்று வருகின்றன’’[5]**

என்பார் அரங்க. இராமலிங்கம்.

## வேந்தர்

சங்க இலக்கியங்களில் பெரு வேந்தர்கள் அதிகார ஆளுமை நிறைந்த நிலையிலேயே குறிக்கப்படுகின்றனர். இச்செய்தியைத் தொல்காப்பியம்,

> **“போந்தே வேம்பே ஆரென வரூஉம்**
>
> **மாபெரும் தானையர் மலைந்த பூவும்’’[6]**

என்று குறிக்கின்றது.

## மன்னர்

வழிமுறை வழிமுறையாக மண்ணோடும், மக்களோடும் பழகி அவர்களோடு உணவருந்திக் கள் குடித்து இன்பதுன்பகளிற் பங்கேற்ற சீறூர் தலைவர்களை வேந்தர் என்று புலவர் பெருமக்கள் குறிக்கவில்லை. அவரை மன்னரென்றும், இறைவன் என்றும் பெருந்தகை என்றும் நெடுந்தகை என்றும் குரிசில் என்றும் அழைத்துப் போற்றினர்.

மண் என்பதற்கு ‘நிலை பெறுதல்’’ என்று பொருளாகும்.

**“மன்னுயிர்ப் பான்மையுங் கூற்றத்தொருமையும்’’ (புறம். 331:11)**

**“மன்னாவுலகத்து மன்னுதல் குறித்தோர்’’ (புறம். 165:1)**

என்னும் புறப்பாட்டு அடிகள் விளக்கம் தருகிறது. இவர்களுள் குறுநில மன்னர் எனப்படுவோர் தன்னை ‘வேள்’ என்ற குடிப்பெயராற் குறித்தனர். ‘வேள்’ என்பதற்குத் தலைவன் என்பது பொருள்.

## அரசர்

ஆட்சித் தலைவனையே ‘அரசன்’ எனக் கூறும் மரபு இருந்தது. ‘அரசன்’ என்பது அரசர்களைக் குறிப்பதற்குக் கையாளப்பட்டது. இந்தச் சொற்கள் பொருட் பின்னணியில் உருப்பெற்ற சொற்களாக உள்ளன. வெற்றி எனப் பொருள்படும். ‘ஆடு’ எனும் சொல் வெற்றிக்கு உரிய தலைவனை சுட்டி, ’ஆர்’ விகுதியைச் சேர்த்து ‘ஆடவர்’ எனும் சொல் உருவாகி ‘வெற்றிக்கு உரியவர்’ என்ற பொருளில் ஆள்பவரைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

## அரசனது கடமைகள்

சங்ககால மக்கள் செம்புலப்பெயல் நீர்போல் அமைந்த காதலை உடையவர்களாகவும் போரில் விழுப்புண் ஏற்படாத நாள் வீண்நாள் என்று கருதும் வீரப்பண்புடையவர்களாகவும் வாழ்ந்தனர். நாடாளும் அரசன் மக்களுக்கு நன்மைகள் புரிவதையே குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் மக்கள் மன்னனைப் போற்றுவர், அரசர் ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல் என்னும் ஐந்து கடமைகளைக் கொண்டு சிறந்து விளங்கினர். இதனையே,

> **“அரசனாவதற்குரியவன் இளமையிலே பல கலைகளையும் கற்று பல்வகை பயிற்சிகளையும் பெற்று வேட்டையாடுவதில் தேர்ச்சியுற்று, அறிவு ஆற்றல், அன்பு, அறம், மறம் முதலிய குணங்களை ஒருங்கேயுடையவனாய், பல அருஞ்செயலும் அறச்செயலும் ஆற்றிக் குடிகளின் உள்ளத்தைக் கவர்ந்தவனாய் இருத்தல் வேண்டும்’’**[7]

என்று மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகிறார். அரசன் அறிஞர்களின் அறிவுரைகளையும் புலவரின் பொன்னுரைகளையும் கேட்டு நல்லாட்சி செய்தான். அரசன், மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவவேண்டும் என்பதை உணர்ந்து அதைப் போற்றிப்

பாதுகாத்தான். இதனால் மன்னன் மக்களின் தந்தையாகவும் உயிராகவும் இறைவனாகவும் கருதப்பட்டுட்டான். நாட்டிலுள்ள மக்களுக்கு நெல்லும் நீரும் உயிரைக் காக்கக் கூடியதாகக் கருதப்படவில்லை. அம்மக்களுக்கு உயிராகத் திகழ்பவன் அரசனே ஆவான் என்பதனை,

**''நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**

**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' (புறம். 186:1–2)**

என்ற பாடல் அடிகள் மூலம் அறியமுடிகிறது.

## போர்

சங்க கால நிலங்கள் மூவேந்தர்களாலும், பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டது. அவர்களுக்கிடையே போர்கள் ஓயாது நடைபெற்றுக் கொண்டிருந்தன. இல்வாழ்க்கையில் போராட்டம் என்பது தன்னைத் தற்காத்துக் கொள்வதற்காக முதலில் ஏற்பட்டது. அதுவே காலத்தின் மாற்றத்தால் மக்களிடையே உணவு, உடை, உறையுள், பொன், புகழ், மண், பெண், வேட்கை ஆகியவை காரணமாகப் போராட்டம் நிகழ்ந்தது. ஒருவரை ஒருவர் தாக்கொள்வதும் அதனால் அழிந்துபடுவதும் புதியதன்று. இது உலகத்து இயற்கை என்பர். இதனை,

**''ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**

**புதுவதன்று இவ் வுலகத்து இயற்கை'' (புறம். 76:1–2)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

> **''உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் போரே முதன்மையாகக் காணப்பட்டது. தொல்காப்பியர் காலச் சமுதாயம் அதற்கு விலக்கன்று. போர்வயிற் பிரிவும் மறக்காதலனைத் தடுப்பது போல இலக்கியச் சான்றோ இலக்கணக் குறிப்போ ஒன்று கூட இல்லாமை உணரத்தக்கது. தொல்காப்பியப் புறத்திணை அகத்திணையிலும் தலைமை உடையது. அகமா புறமா எனில் புறமே முதல் என்பது அற்றை நாட்கருத்து என்று போர் திணையாகப் புறத்திணையைப் பற்றிக் கருத்துரைக்கின்றனர்''[8]**

என்கிறார் க.ப.அறவாணன். இதன்மூலம் மன்னரும் மக்களும் விரும்பிப் போரில் பங்கேற்றனர் என்பதையும் அறியமுடிகின்றது.

## போருக்கான காரணங்கள்

பண்டைத் தமிழரின் நில அமைப்பிலும் வாழ்க்கை முறையிலும் போர் தவிர்க்க இயலாத ஒன்றாகும். ஆட்சி எல்லையை விரிவுபடுத்தவும், விரிவுப்படுத்தப்பட்ட எல்லையைப் பாதுகாக்கவும், பழித்தோரை எதிர்த்து அழிக்கவும், வேற்று நாட்டில் காணலாகும் உயிர்ப்பொருளை அடையும் பொருட்டும், மகட்கொடை வேண்டியும், மகள் மறுத்தாரொடும் போர்கள் நடைபெற்றன.

மறவர்களின் மிகைப்பட்ட மறப்பண்பு போருக்குத் தோற்றுவாயாக அமைந்துள்ளது. உணவு, உடை, உறையுள் என்பன மனிதனின் அடிப்படைத் தேவைகள். இந்த அடிப்படைத் தேவைகளை மக்களுக்கு வழங்குவது ஒவ்வொரு நாட்டு அரசனின் கடமை ஆகும். ஒரு நாட்டின் இயற்கை வளத்தினைக் கொண்டு அந்நாட்டு மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்ய முடியாத நிலையில் நட்பு நாடுகளிடம் உதவி பெற்றும், பகை நாடுகளுடன் போரிட்டு வென்றும் அதனால் பெற்ற வளத்தினைக் கொண்டு, தன் நாட்டு மக்களின் தேவைகளை நிறைவு செய்வது அரசின் கடமையானது.

> **"அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்ய வேண்டும் என்ற எண்ணம் போருக்கு உரிய காரணங்களில் முதன்மையானது"[9]**

என்கிறார் கு.பாண்டுரங்கன்.

## பாதுகாப்பு

உள்நாட்டில் குழப்பம் விளையாமலும் மக்கள் பயமின்றி வாழவும் எதிரிகள் தம் நாட்டை எளிதில் கைப்பற்றாமலும் இருக்கச் செய்யும் செயலே பாதுகாப்பு எனப்பட்டது. தன் மக்களைப் பலவகைத் தீங்குகளினின்றும் காத்தல் மன்னனின் கடமையாகும். மன்னர்கள் தன் நாட்டையும் மக்களையும் பாதுகாப்பாக வைத்திருக்கும் பொருட்டு உயர்ந்த அரண்களை உருவாக்குவதையே தம் நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

## அரண்

மன்னர்கள் பகை அரசர்களால் தம் நாட்டுக்குத் தீங்கு நேரா வண்ணம் பலவகையான உத்திகளைக் கையாண்டு பாதுகாப்பு அரண்களை ஏற்படுத்தினர். அரண் எனும் சொல் கோட்டை, பாதுகாப்பு என்று பொருள்படும். பகைவன் படையெடுத்து எளிதில் நாடு கொள்ளாதவாறு தடுத்து நிறுத்துவது அரண். அது நாட்டு மக்களையும் நாடாளும் வேந்தனையும் பகைவரிடமிருந்து பாதுகாக்குமோர் அமைப்பாகும். இவ்வரண் பேரரசு மற்றும் சிற்றரசு ஆகியவற்றின் தலைநகரங்களில் அமைந்திருந்தது. பகைவரால் துன்பம் ஏற்படும்பொழுது தன்னையும் தன் நாட்டு மக்களையும் பாதுகாக்க வேண்டி நாட்டின் பல இடங்களில் அரண் அமைத்து காத்து வந்தனர். இவ்வரண்களை நிலையானதாகவும் தற்காலிமாகவும் வடிவமைத்திருந்தனர். இத்தகைய அரண்கள் எதிரிகளின் முன்னேற்றத்திற்குத் தடையாக அமைந்தன. இவ்வாறு அரண்களைத் தனக்கு நன்மை செய்யக்கூடியதாகவும் பகைவர்களுக்குத் தீங்குச் செய்யக் கூடியதாகவும் வடிவமைத்திருந்தனர். அரசன் தன் நாட்டிலுள்ள செல்வங்கள், படைக்கருவிகள், உணவு தானியங்கள் போன்றவற்றையும் ஆட்சி நடத்துவதற்கான இடங்களையும் பாதுகாப்பதற்காக அமைக்கப்பட்ட அமைப்பு முறை கோட்டை ஆகும்.

பாதுகாப்பதில் படைக்கு அடுத்த நிலையில் அரண் அமைந்துள்ளது. அரசனுக்குரிய ஆறு அங்கங்களுள் அரணும் ஒன்று. இயற்கையும் செயற்கையுமாய் அமைந்த அரண்கள் ஐந்து வகைப்படும். காடுகளும் நீர் நிலைகளும் நிலங்களும் மலைகளும் இயற்கை அரண்களாகவும், உயர்ந்த மதில்கள் செயற்கை அரண்களாகவும் அமைந்துள்ளன. ஐந்து அரண்களைப் பெற்ற கோட்டைகளே சிறந்த பாதுகாவலை உடைய கோட்டைகளாகக் கருதப்பட்டன.

சங்ககாலத்தில் அரசனுடைய அரண்மனைகளைச் சுற்றி வலிமை வாய்ந்த அரண்கள் பாதுகாப்பிற்காக அமைக்கப்பட்டிருந்ததனை,

> **“முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**
>
> **அனைநெறி மறபிற் றாகும் என்ப”[10]**

என்று தொல்காப்பியர் அரணை முழுமுதல் அரண் எனக் குறிப்பிட்டுள்ளார். முழு அரணாவது மலையும் நாடும் நீரும் அல்லாத அகநாட்டுச் செய்த அருமதில். அது வஞ்சனை பலவும்

வாய்த்து தோட்டி, முள் முதலியன உள்ளுடைத்தாகிய அகழி புறஞ்சூழ்ந்து யவனர் இயற்றிய பல பொறிகளும், ஏனைய பொறிகளும் பதனமும் ஏப்புழை ஞாயிலும் ஏனைய பிறவும் அமைந்து எழுவுஞ் சீப்பும் முதலியவற்றால் வழுவின்றி அமைந்த வாயில் கோபுரமும் பிற இயந்திரங்களும் பொருத்த இயற்றப்பட்டதாகும். அக்காலத்தில் அரண்களை அமைப்பதில் வல்ல கற்கொல்லார் இருந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகின்றது.

நாட்டின் பாதுகாப்பு அந்நாட்டில் அமைந்துள்ள அரண்களைப் பொருத்தே அமைந்துள்ளது. வேற்று வேந்தன் குலத்துக்கெலாம் அஞ்சாது முதலாய் வருகின்ற முழு அரணைச் சென்ற வேந்தன் வளைத்தலும் இருந்த வேந்தன் அரணைப் பாதுகாப்பதிலும் மண்ணாசை கொண்டு படையெடுத்து வந்த வேந்தனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்து பின்தொடர்ந்து சென்று அவர்கள் நாட்டிலேயே பகைப்புலப் பாசறை அமைத்து அரசனை அழித்து கோட்டையைக் கைப்பற்றுவதிலும் தம் ஆற்றல் அனைத்தையும் காட்டினான். அரண்களைப் பாதுகாக்கும் போரும் அழிவுப் போரும் அரண் அமைந்த இடத்திலேயே நடைபெற்றன. இவ்வாறு அரண் கருதி நிகழும் போர் நடவடிக்கைகளை உழிஞை என்னும் ஒரே துறையாகத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

அகழியும் வெட்ட வெளியான நிலப்பரப்பும் உயரமான மலையும் மரநிழலாற் செறிந்த காடும் கொண்டுள்ளதே பாதுகாப்பான அரண் என்பர் திருவள்ளுவர். இதனை,

> **‘‘மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
>
> **காடும் உடையது அரண்’’**[11]

என்ற குறள் வழி அறியலாம். நீரரண், மலையரண், காட்டரண், நிலவரண் என்னும் நான்கு அரண்களும் மதிற் புறத்தே அமைக்கப்படுவன. பகைவன் மதிற்புறத்தை எளிதில் முற்றுகையிடா வண்ணம் தடுத்து நிறுத்துவதன் பொருட்டு இயற்கையும் செயற்கையுமாய் அரண் அமைக்கப்படும். அபிதான சிந்தாமணி அரண் என்பதற்கு,

> **‘‘பகைவரால் துன்பம் நேர்ந்த இடத்து அது தனக்கும் அரசனுக்கும் காத்தலாக உள்ளது’’**[12]

என விளக்கம் தருகின்றது. அரண் என்ற சொல்லிற்கு,

**“அரண் என்பது பகைவர் அணுக அரியதாகவும், வஞ்சனை மிக்கதாகவும் ஆழமான அகழியை உடையதாகவும் காணப்படும். அதனைச் சுற்றிலும் அடர்ந்த காவல் காட்டினையும் தோட்டி, முள் போன்ற தடைகளையும் அமைத்திருந்தனர். இதில் பகைவர்களுக்குத் தொல்லை விளைவிக்கும் பல பொறிகளையும் படைக்கலன்களையும் பாதுகாத்து வந்தனர். இங்கு உணவுப் பொருள்களையும் பிற பொருள்களையும் சேமித்து வைக்கும் கிடங்கினையும் வடிவமைத்திருந்தனர். இதில் அம்புகள் எய்யும் இடமும் எந்திரப் பொறிகளை அமைக்கும் இடமும் காவல் கோபுரங்களும் இருக்கும்’’[13]**

எனக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகின்றது.

மனுதர்ம சாஸ்திரம் அரணுக்கு இலக்கணம் கூறுகையில்,

**“பன்னிரண்டு முழ உயரமுள்ள கற்கோட்டையாவது, மிகுந்த ஆழமுள்ள ஜலக்கோட்டையாவது, ஒரு யோசனை தூரம் உள்ள வனக்கோட்டையாவது, சதுரங்க பலக்கோட்டையையாவது, சுற்றிலும் ஐந்து யோசனை தூரம் உள்ள நீரற்ற பூமிக் கோட்டையையாவது ஏற்படுத்திக் கொண்டு அதற்குட்பட்ட பட்டணத்தில் அரசன் வாழ்தல் வேண்டும்’’[14]**

எனக் குறிப்பிடுகின்றது.

## அரண் அமைப்பு

பகைவர் ஏறமுடியாத உயரம், காவலர் நிற்க இயங்க வசதியான அகலம், இடிக்க முடியாத வலிமை கடக்க முடியாத பொறிகளின் அருமை ஆகிய இந்நான்கும் அமைந்திருப்பதே அரண் என்பர். இதனை,

**“உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்**

**அமைவரண் என்றுரைக்கும் நூல்’’[15]**

என்ற குறளின் மூலம் அறியலாம். பகைவர்கள் மதில் மேல் ஏணி சாய்த்து ஏறமுடியாத அளவிற்கு உயரமானதாக இருக்கவேண்டும். புறத்தோர் மதிலை எளிதில் அகழ்தல் இயலா வண்ணம் அடி அகலமும், உள்ளிருந்து போர் புரிபவர் போர் செய்யும் அளவிற்குத் தலை

அகலமும் இருத்தல் வேண்டும். பகைவர் தம் பொறிகளால் மதிலைக் குத்த முடியாத படித் திண்மை பெற்றிருத்தல் வேண்டும். மதிலின்கண் பலவகையான பொறிகள் அமைக்கப்பட்டு மாற்றார் அணுகா வண்ணம் அருமையுடைத்தாய் அமைந்திருத்தல் வேண்டும். இந்நான்கன் தன்மையிலே அமைக்கப்படும் அரணைத்தான் சிறந்த அரண் என்கிறார் வள்ளுவர்.

அரண் தன்னைப் பகைவர் தகர்க்காத வண்ணம் காத்துக்கொள்ள வேண்டிய வெளிப்புற இடம் சிறியதாய் இருந்தாலும், உள்ளே அகன்ற இடத்தைத் தன்னகத்துக்குக் கொண்டிருத்தல் வேண்டும். பகைவர்கள் ஒருநாள் இருநாள் முற்றுகையிட்டு இடிக்கும் பொழுதும் அதனைத் தாக்க முயலும் பொழுதும், அவர்களால் அழிக்க முடியாமல் சோர்வடைந்து அவர்களது மன எழுச்சியை கெடுப்பதாக இருப்பது அவசியமாகும். கோட்டையானது ஒரு பக்கம் மலையையும் மற்றொரு பக்கம் காவற்காட்டையும், வேறொரு பக்கம் அகழியையும் பெற்றிருக்க வேண்டும். கோட்டையின் வாயில் கதவுகளும் கோட்டைக்குள் செல்லும் வழிகளும் சிறியதாக இருக்க வேண்டும். சிறு படையினாலும் காத்துக் கொள்ள வல்ல தன்மையுடையதும் அரணின் இயல்பாகும். பகைவர் முற்றுகையிடும் காலத்தில் உள்ளிருப்பவர் வருத்தமில்லாமல் தங்குவதற்கு ஏற்ற பல்வேறு வசதிகளைக் கொண்டு அரணானது அமைக்கப்பட்டிருந்தது.

பகைவர் சேர்தற்கு அரிய திரட்சியையுடையது காவற்காடு, அதற்கு அடுத்து ஆழமான அகழி, உயர்ந்து வளர்ந்த நிரல்பட வாயில்கள், நீண்ட உயரமான மதிற்சுவர்கள், அம்மதிலில் ஞாயிலாகிய மதில் உறுப்புகள் மற்றும் அம்பினையும் வேலினையும் வீசுகின்ற பல்வேறு அமைப்புகளை அரண் கொண்டிருந்ததை,

> **‘‘அருங்குழுமிளைக் குண்டுகிடங்கின்**
>
> **உயர்ந்து ஓங்கிய நிரைப்புதவின்**
>
> **நெடுமதில் நிரை ஞாயில்**
>
> **அம்பு உமிழ் அயில் அருப்பம்’’ (மதுரைக். 64–68)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

அகழியையும், வானளாவிய மதிலையும் சுட்டு என்னும் அம்பு எய்யும் துளையும் மரங்கள் செறிந்த காவற்காட்டையும், பகைவர் நெருங்க இயலாத பல அங்கங்களையும் கொண்டதாக அரண் அமைந்திருந்ததை,

**''நிலவரை இறந்த குண்டுகண் அகழி**

**வான்தோய்வு அன்ன புரிசை விசும்பின்**

**மீன்பூத் தன்ன உருவ ஞாயில்**

**கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை**

**அருங்குறும்பு உடுத்த கானப் பேர்எயில்'' (புறம். 21:2–6)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

அரண் காவல் காட்டையும் ஆழ்ந்த அகழியையும் உயர்ந்த மதிலையும் மதிலில் பலவிதமான அம்புக் கட்டுகளையும் கொண்டு விளங்கியதை,

**''கடிமிளை குண்டு கிடங்கின்**

**நெடுமதில் நிலைஞாயில்**

**அம்புடை ஆர்எயில் உள்அழித்து உண்ட'' (பதிற்.20:17–19)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

மதில் வாயில்களில் கணைய மரங்கள் செறிக்கப்பட்டிருந்தது. அவ்வாயிலில் அம்புக் கட்டுகள் பொருத்தப் பெற்றிருந்தன. இதனையடுத்து காவலையுடைய காட்டையும், ஆழமான அகழியையும், உயர்ந்த மதிலையும் மதிலினுள் மேடையையும் கொண்டிருந்தன. இத்தகைய காவலமைந்த அகப்பா என்ற அரணத்தைக் கைக்கொண்டவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன், அவன் பொன்னால் செய்த உழிஞைப் பூவைச் சூடிப் போர் புரிந்தவன் என்பதனை,

**''துஞ்சமரம் துவன்றிய மலர்அகன் பறந்தலை**

**ஓங்குநிலை வாயில் தூங்குடி தகைத்த**

**வில்விசை மாட்டிய விழுச்சீர் ஐயவிக்**

**கடிமிளைக் குண்டு கிடங்கின்**

**நெடுமதில் நிரைப்பத ணத்து**

**அண்ணல்அம் பெருங்கோட்டு அகப்பா’’ (பதிற்.22:21–26)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

இளஞ்சேரல் இரும்பொறை தானையோடு சென்று சோழ, பாண்டியரையும், விச்சி என்னும் குறுநில மன்னனையும் வென்று மலையிடத்தமைந்த அரிய காவல் காட்டினையுடைய ஐந்து அரண்களை அழித்தான் என்பதனை,

**“வெருவரு தானையொடு வெய்துறச் சென்று**

**இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ**

**அருமிளைக் கல்லகத்து ஐந்தெயில் எறிந்து’’ (பதிற்.பதி.9:3–5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

**காட்டரண்**

காட்டரண் என்பது வீரர் பகைவர்க்குத் தெரியாமல் மறைந்திருக்கவும் பகைவர் வராமல் தடுக்கவும் ஏற்ற முள்மரம் அடர்ந்த காடாகும். இது பொதுவாக மலையை அடுத்து அமைக்கப்பட்டு இருக்கும், மலையில்லாத இடங்களில் அகழிக்கு அப்பால் அமைந்திருக்கும். கோட்டையைப் பாதுகாக்க அரணாக நிற்கும் காட்டைக் காவற்காடு என்றும், கமழிகளை என்றும் கூறுவர்.

பகைவரால் எளிதில் அழிக்க முடியாத காடே சிறந்த காட்டரணாகும். முள்ளும் முரணும் உடைய காடு மிகச் சிறந்த அரணாகக் கொள்ளப்பட்டது. மரம், செடி, கொடிகள் வளர்ந்து ஒன்றோடு ஒன்று பின்னிக்கொண்டுள்ளதால் எளிதில் மக்களும் விலங்குகளும் கடந்து செல்ல முடியாது. இவ்வாறு பல்வேறு இடையூறுகளைத் தரக்கூடிய பெரும் மரக்காடுகளை அழித்துக்கொண்டு செல்வது என்பது எதிரிகளுக்கு இயலாத செயல் என்பதை அறிந்த அக்கால அரசர்கள் தங்கள் நாட்டையும் தலைநகரையும் சூழ்ந்திருக்குமாறு பெருங்காடுகளை விரும்பி வளர்த்தனர்.

காட்டரண் என்பதற்குத் தேவநேயபாவாணர் அவர்கள்,

> **“படைமறவர் பகைவர்க்குத் தெரியாமல் மறைத்திருக்கக் கூடியதும் தொகுதியாகப் பகைவர் புகமுடியாததுமாய் மரம் அடர்ந்து அமைந்திருப்பது ஆகும்”[16]**

என விளக்கம் கூறியுள்ளார். காவல் காடுகளில் மிக உயரமான அடர்ந்த மரங்களும் முட்புதர்களும் சூரியக் கதிர்கள் உள்ளே நுழைய முடியாதபடி பகலிலேயே அச்சத்தைத் தரக்கூடிய அடர்ந்த இருளும் சூழ்ந்து காணப்படும் என்பதனை,

**“கதிர்நுழை கல்லா மரம்பயில் கடியிளை” (புறம். 21:5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

காவல் காட்டினுள் வேலியாக நொச்சி மரங்களும் முள்வேலிகளும் அமைந்திருந்தன. முள்வேலியை இடுமுள் வேலி, வாழ் முள்வேலி என இரண்டு வகையாகப் பிரித்துக் காட்டரணை வலிமையுடையதாக அமைத்தனர். வாழ்முள்வேலி என்பது முள்செடிகளையும் மரங்களையும் வளர்த்து, அவற்றால் ஆக்கிய வேலியைக் குறிப்பதாகக் கொள்ளலாம். காவலையுடைய அரணைச் சுற்றி உயிருள்ள முள் வேலியைக் குறிப்பதாகக் கொள்ளலாம். காவலையுடைய அரணைச் சுற்றி உயிருள்ள முள் வேலிகள் அமைக்கப்பட்டிருப்பதை,

**“வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை” (பெரும். 126)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. முள்ளை வெட்டிக் கொணர்ந்து அமைக்கும் வேலி இடுமுள் வேலி என்றழைக்கப்பட்டது. காவலையுடைய அரணைச் சுற்றி முள்ளை வெட்டி வேலியாக அமைக்கப்பட்டிருந்ததை,

**“இடுமுள் வேலி” (அகம். 394:8)**

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

தித்தனின் உறையூரைச் சுற்றியுள்ள காவல் காடானது நொச்சி மரங்களையே வேலியாக இட்டுப் பாதுகாத்தமையை,

"நொச்சி வேலித் தித்தன் உறந்தை'' (அகம். 122:21)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

கடலாலும் மலையாலும் சூழப்பெற்ற நாட்டில் உம்பர்க்காடு ஒரு சிறுபகுதி ஆகும். இதனை வேழக்காடு என்றும் வழங்குவர். இப்பகுதியில் களிறுகள் மிகுதியாகக் காணப்படும். கருவுற்ற தன் பெண்புலிக்கு அதன் இணைப்புலி உணவினைக் கொடுக்க விரும்பி நீண்ட பெரும் கோடுகளையுடைய யானை ஒன்றைக்கொன்று வீழ்த்தியது. அடியுண்ட களிற்றை அதன் செங்குருதி பரந்த பாறைகளிலெல்லாம் படியுமாறு இழுத்துச் சென்றது. தன் அன்புடைத் துணைக்கு அதை மகிழ்ச்சியுடன் அளித்து வெற்றிச் செருக்கால் புல்தரையில் வீழ்ந்து புரண்டது. இத்தகைய கொடுமையுடையது அந்த வேழக்காடு, இதனை அறிந்த யானைகள் அந்தக் கானுறை வாழ்வை வெறுத்து வழியில் கிடக்கும் பலாக்கனிகளைத் தின்று கொண்டே வெளியேறும் என உம்பற்காட்டின் கொடுமைகளை,

"கொடுமுள் ஈங்கை சூரலொடு மிடைந்த

வான்முகை இறும்பின் வயவொடு வதிந்த

உண்ணாப் பிணவின் உயக்கம் தீரிய

தடமருப்பு யானை வலம்படத் தொலைச்சி

வியல்அறை சிவப்ப வாங்கி முணங்குநிமிர்ந்து

புலவுப்புலி புரண்ட புல்சாய் சிறுநெறி

பயில்இருங் கானத்து வழங்கல் செல்லாது

பெருங்களிற்று இனநிரை கைதொடுஉப் பெயரும்

தீம்சுளைப் பலவின் தொழுதி, உம்பற்

பெருங்காடு'' (அகம். 357:1–10)

என்ற பாடல் மூலம் உணரமுடிகின்றது. எனவே, நெடுங்கோடுடைய களிற்றையே கொன்று தீர்க்கும் புலிகளும் யானைகளும் நிறைந்த இத்தகு காட்டினைப் பகைவர்கள் கடந்து வருவது எளிதன்று என்ற செய்தியை அறியலாம்.

கடப்பதற்கு அரிய இவ்வும்பற்காட்டையும் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் வென்றான் என்ற செய்தியை,

**“இமைய வரம்பன் நம்பி யமைவர**

**உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ’’ (பதிற்.பதி.3:1–2)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம். இவ்வும்பற்காடு ஐந்நூறு சிற்றூர்களைக் கொண்டதொரு சிறுநாடு ஆகும். எனவே, இவ்வகைக் காவல் அரண்களைக் கொண்ட காட்டினைப் பகைவர்கள் கடந்து வருவது எளிதன்று.

வெட்சி வீரர்கள் கரந்தை வீரர்களுடன் போர் புரிய வரும்போது இலைகளால் மூடப்பட்ட பெரிய காட்டின்கண் மறைந்திருப்பர் என்பதனை,

**“ஏறுடைப் பெருநிரை பெயர்தர பெயராது**

**இலைபுதை பெருங்காட்டுத் தலை கரந்துஇருந்த’’ (புறம். 259:1–2)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. இதன்மூலம் வீரர்கள் மறைந்திருந்து தாக்குவதற்குக் காடுகள் பயன்பட்டன எனத் தெரிகின்றது. வீரர்கள் பாசறை அமைத்து நீண்ட நாட்கள் தங்கிப் போரிடக் காடுகள் ஏதுவானது.

காவற்காட்டினுள் நுழைய ஆங்காங்கே சிறிய வாயில்கள் காணப்படும். இதற்குப் புழை என்று பெயர். போர் தொடங்கும் முன் இவ்வாயில்கள் கவை முள்ளினாலும் எந்திரப் புழையினாலும் அடைக்கப்படும் என்பதனை,

**“செலவசைஇய மறுக்குளம்பினின்**

**இனம்நல்மாச் செலக்கண்டவர்**

**கவைமுள்ளிற் புழையடைப்பவும்’’ (புறம். 98)**

**“திங்களும் நுழையா வெந்திரப் படுபுழை’’ (புறம். 177:5)**

என்னும் புறநானூற்றுப் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

பகைவர்கள் அச்சம் கொள்ளும் வகையில் நன்னனுடைய நாடு காட்டரண்களால் சூழ்ந்து காணப்பட்டது. இக்காட்டரண் பின்னிவைத்தாற் போன்ற பின்னிய கொடிகளையும் முன் கடந்த வீரர்கள் பின்வரும் வீரர்களுக்கு வழி தெரிவிக்கும் வகையில் ஊகம் புல்லை முடித்துவிட்டுச் செல்வார்கள் என்பதையும் இக்காடு பல கொடிய பாலை வழிகளைக் கொண்டது என்பதனையும்,

**''அரசுநிலை தளர்க்கும் அருப்பமும் உடைய**

**பின்னி யன்ன பிணங்கரி னுழைதொறும்**

**முன்னோன் வாங்கிய கடுவிசைக் கணைக்கோல்'' (மலைப். 378–380)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

சோழரின் வல்லம் என்னும் ஊரின் புறத்தே உள்ள காவல் காட்டினை வந்தடைந்த ஆரியரின் படைகள் இக்காவல் காட்டின் சிறப்பினைக் கண்டு அஞ்சி ஓடின என்பதனை,

**''மாரி அம்பின் மழைத்தோற் சோழர்**

**வில்ஈண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை'' (அகம். 336:20–21)**

என்று பாலைக் கொட்டியலார் கூறுகின்றார். மிளை என்பது அரிய திரட்சியுடைய காட்டினைக் குறிக்கும். இது காவற்காடு. குறுங்காடு எனப் பொருள் கொள்ளப்படுகிறது. தஞ்சை மாவட்டத்தின் வல்லத்துப் புறத்தே இருந்த சோழர்களின் காவற் காட்டினை 'மிளை' என்று அழைத்தனர்.

## நீரரண்

நீரால் சூழப்படும் அரண் நீரரண் ஆகும். இயற்கையான கடலும் ஆறும் பாதுகாவலாக அமைவது நீரரண் எனப்படும். ஒரு நாடு கடலையோ அல்லது மிகப்பெரிய ஆற்றையோ எல்லையாகக் கொண்டு அவற்றையே அது பாதுகாவலுக்கான அரணாகவும் கொண்டு அமைந்திருந்தால் அது நீரரண் உடைய நாடு எனப்படும். பகைவர்கள் கோட்டைக்குள் நுழையாமல் இருக்க நீரினால் பாதுகாப்பு செய்து மன்னனையும் கோட்டையையும் பாதுகாப்பதே நீரரண் ஆகும்.

**“நீரரண் என்பது புறமதிற் புறத்து ஆறுகள் கடலுமாகிய இயற்கை நீர் நிலையாகவும், அகழி அல்லது கிடங்கு என்னும் செயற்கை நீர் நிலையாகவும் இருக்கும் அரண்”**[17]

என்பர் தேவநேயப் பாவாணர்.

திருவள்ளுவர் நாட்டினை உருவாக்கும்போது நீரரண் சூழ்ந்துள்ள இடத்தினைத் தேர்வு செய்ய வேண்டிய முறை குறித்துக் குறிப்பிட்டுள்ளார். நீர் நிலைகளும், மலையும் அமைந்திருந்தால் அந்நாடு சிறப்புடையதாகக் கருதப்படும்.

நீரினை வள்ளுவர் ஊற்று நீர், வேற்று நீர், ஆற்று நீர் என மூவகையாகப் பகுத்துக் கூறியுள்ளார்.

**“இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்அரணும் நாட்டிற்கு உறுப்பு”**[18]

என்ற குறளின் மூலம் அறியமுடிகிறது. இருபுனல் எனக் குறிப்பிட்டது ஊற்று நீராகிய கீழ் நீரையும் வேற்று நீராகிய மேல் நீரையும் குறிப்பதாகும். கிணறு, குளம், ஏரி முதலியவை கீழ்நீரையும், மழைநீர் வேற்று நீரையும் சார்ந்தவை ஆகும். வருபுனல் என்பது ஆற்றுநீரைக் குறிப்பதாகும். இதன் வாயிலாக வள்ளுவர் நீரரணின் அமைப்பு முறை குறித்துக் குறிப்பிட்டுள்ளதனை அறியமுடிகின்றது.

இயற்கையான நீரரண் இல்லாத இடங்களில் செயற்கையான நீர் நிலைகளை அமைத்துக் கொள்ளுதல் வழக்கம். அவை அகழி எனப்படும். அகழி என்பது அரண்மனையைச் சுற்றி அமைப்படும் நீர்நிலையாகும். இது பகைவர்களிடமிருந்து தற்காத்துக் கொள்ளுவதற்குச் செயற்கையாக ஏற்படுத்தப்பட்ட ஒன்றாகும். ஆழ அகழ்ந்து அமைப்பதால் ‘அகழி’ என்று அழைக்கப்படுகிறது. இது பகைவர்களை எவ்வகையிலும் கோட்டைக்குள் நுழையாமல் தடுப்பதற்குப் பயன்படுகிறது. கோட்டையைச் சுற்றிலும் அகழி ஏற்படுத்தப்பட்டு அதனுள் நீர் நிரப்பப்பட்டு முதலைகள் வளர்க்கப்படும். அகழியில் வீழ்ந்தார் நீந்திக் கரையேறாதபடி பற்றிக் கொள்ளும் தன்மையுடைய கராமும், முதலையும், சுறாவும் இனிது வாழ்வதற்கேற்ப ஆழமுடையதாயும் அகலமுடைதாயும் அகழி அமையும்.

“அகழியை ஆறு அடி இடைவெளியுள்ள மூன்று பள்ளங்களாக ஏற்படுத்த வேண்டும். அவற்றில் முதல் அகழி எண்பத்து நான்கு அடியும், அதற்கடுத்த அகழி எண்பத்து இரண்டு அடியும், அதற்கடுத்த அகழி அறுபது அடியும் இருக்க வேண்டும். இவற்றின் ஆழம் அகலத்தில் நான்கில் மூன்று பங்கு. அல்லது நான்கில் இரண்டு பங்காக இருக்க வேண்டும். இவற்றைக் கற்களால் கட்ட வேண்டும் அல்லது அவற்றின் பக்கங்களிலுள்ள படிக்கட்டுகளையாவது கற்களாலும் மண்ணாலும் கட்ட வேண்டும். அகழிகளைத் தோண்டும்போது பூமிக்குள் நீர் மட்டம் இருக்கும்வரை தோண்டுவதாகவும் இருக்கலாம். அல்லது வெளிப்பக்கத்திலிருந்து தண்ணீர் அளவு அதிகரிக்கும்போது அதை வெளியேற்றுவதற்குரிய வழியும் இருக்கவேண்டும். இவ்வகழிகளில் தாமரைகளையும் முதலைகளையும் வளர்க்க வேண்டும்’’[19]

என்று அர்த்தசாஸ்திரம் அகழிகள் அமைக்க வேண்டிய வழிமுறைகளைக் கூறுகிறது.

இயற்கையான நீர்நிலை இல்லாத இடத்தில் செயற்கையான நீர்நிலையான அகழியை உருவாக்கி எதிரிகளை அழிக்கும் திறன் குறித்து,

“எதிரிகள் அகழியிலுள்ள நீரை அருந்தும்போது அவர்களை அழிக்கும் வகையில் அவர்கள் அறியா வண்ணம் செங்கொடை, அரங்கள், நாயுருவி, மருதமரம் ஆகியவற்றின் மலர்களுடன் ஏலமரம், தானிமரம், குங்கிலியம், ஆலாலம் ஆகியவற்றின் சாறும், செம்மறி ஆட்டின் குருதியுடனும் மக்கள் குருதியையும் சேர்த்து நன்கு அரைத்து அதனைப் பிண்ணாக்குடன் நீரில் கலந்துவிட்டால் இந்நீரை அருந்துபவனும் தொடுபவனும் உடனே இறந்துவிடுவான்’’[20]

என நீரரணில் செய்ய வேண்டிய மறைச் செயல்கள் குறித்துக் கௌடில்யர் குறிப்பிட்டதனை அறியமுடிகிறது.

இலக்கியங்களில் பெரும்பாலும் இருவகையான அகழிகளைக் குறிப்பிட்டுள்ளனர். ஒன்று நகரின் மதிலுக்கு வெளியில் அமைந்த அகழி. மற்றொன்று மன்னனின் அரண்மனையைச் சுற்றி அமைந்த அகழி என இவ்விருவகை அகழிகளைக் குறிப்பிட்டுள்ளனர். இந்த இரண்டு அகழிகளிலும் கொல்லும் ஆற்றலை உடைய

விலங்கினங்களும் பலவகையான பொங்கன் இருந்ததாகவும் குறிப்பிட்டுள்ளனர். அகழியிலுள்ள நீர் பாசிபடர்ந்ததாகவும் ஆழமானதாகவும் தெளிந்த நீரை உடையதாகவும் முந்நீரும் பாய்வதாகவும் இருந்தது. அகழியானது இயற்கையான பாறையைப் பிளந்து உருவாக்கப்பட்டதாகவும், பளிங்கு கற்களைப் பழித்துப் பாதுகாக்கப்பட்டு வந்ததாகவும் இருந்ததை அறியமுடிகிறது.

அகழி நிலத்தைத் தோண்டியும், எதிர்ப்படும் பாறையை உடைத்தும் நிலத்திருந்து நீர் சுரக்கும் அளவிற்கு ஆழமாகத் தோண்டப்படும். ஆகையால் அகழி முழுவதும் ஆழமான நீர் நிறைந்திருக்கும். இதனை,

**‘‘பார் உடைத்த குண்டு அகழி**

**நீர் அழுவ நிவப்புக் குறித்து’’ (புறம். 14:5–6)**

**‘‘தெண்கடல் குண்டு அகழி’’ (மதுரைக். 86)**

**‘‘குண்டுகண் அகழி’’ (பதிற். 45:7)**

**‘‘மாரிஅம் கிடங்கின் ஈரிய மலர்ந்த’’ (நற். 379:8)**

**‘‘புனல் பொரு கிடங்கின்’’ (பதிற். 62:10)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. அகழி கல் தரையைத் தோண்டிச் செய்த சிறியதாகிய நீர் வரும் வாயை உடையது. இதனை,

**‘‘கல் இடித்து இயற்றிய இட்டுவாய்க் கிடங்கு’’ (மதுரைக். 730)**

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

தொலைதூரம் தாண்டும் குதிரையால் கூட தாண்டமுடியாத அகழியில் காஞ்சி மரத்தின் மலர்களைக் கவ்வும் வாளை இன மீன்களும், சிறிய ஆரல் மீன்களும், வரால் மீன்களும் நிறம் பொருந்திய கெளிற்று மீன்களும், பருத்த இறால்களும், முதலை இனங்களும், அன்றில் பறவைகளும், அன்னப் பறவைகளும் வாழ்ந்ததை,

“நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்

பூக்கதூஉம் இனவாளை

நுண்ஆரல் பருவரால்

குரூஉக் கெடிற்ற குண்டு அகழி’’ (புறம். 18:7–10)

“கோள்வல் முதலை குண்டுகண் அகழி’’ (பதிற். 53:84)

“கராஅம் கலித்த குண்டுகண் அகழி

இடம்கருங் குட்டத்து உடன்தொக்கு ஓடி

யாமம் கொள்பவர் சுடர்நிழல் கதூஉம்

கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சி’’ (புறம். 37:7–10)

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. இத்தகைய சிறப்புப் பெற்ற அகழி கடந்து செல்வதற்கு அரிய காவலை உடையதாகவும் அகழியில் உள்ள முதலைகள் இரவில் காவல் புரிவோர் கையில் உள்ள தீபபந்தத்தின் நிழல் நீரில் விழும்போது அந்நிழலையும் பாய்ந்து கவ்வும் ஆற்றல் உடையதாகவும் இருந்துள்ளன என்பதையும் அறியமுடிகிறது.

பாண்டிய மன்னனுடைய அகழியானது அடிமண் வரை ஆழமான நீலமணி போன்ற நீரையுடையதாகக் காணப்பட்டது. பகைவேந்தர் பாண்டியனுடைய நீரரணாகிய அகழியைக் கடக்க முடியாமல் தம் முரசங்களை இடைப்பகுதியிலே விட்டு ஓடினர் என்பதனை,

“இன்இசை முரசம் இடைப்புலத்து ஒழிய

பல்மாறு ஓட்டிப் பெயர்புறம் பெற்று

மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கு’’ (மதுரைக். 349:351)

என்ற பாடலடியால் அறியலாம். மண்ணை ஆழமாக அகழ்ந்து, நிறைந்து நீரால் நீலமாகத் தோன்றும் அகழி என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.

## நிலவரண்

புறமதிலைப் பற்றாமை பொருட்டு அதன் புறத்தேயுள்ள நிலமும், பகைவர் முற்றுகை நீடித்திருக்கும்போது அகத்தார்க்கு வேண்டும் உணவுப் பொருட்களைப் பயிர் செய்யும் வகையில் மதிலின் உட்புறமாகவிடப்படும் தண்ணடை நிலமும் நிலவரண்கள் ஆகும். நிலவரண் என்பது,

> **“நிலவரண் இருநிலைகளில் அமைந்திருக்கும். பகைவர் புறமதிலைப் பற்றாமைப் பொருட்டு அதன் புறத்தேயுள்ள வெள்ளிடை நிலமும் பகைவர் முற்றுகை நீடித்திருக்கும்போது அகத்தோர்க்கு வேண்டும் உணவுப்பொருள்களைப் பயிர் செய்யும் வகையில் மதிலின் உட்புறமாக விடப்படும் தண்டை நிலம் நிலவரணாகும்’’[21]**

என தேவதேயப் பாவாணர் நிலவரணிற்கு விளக்கமளித்துள்ளார். அகழிக்கும் மதிலுக்கும் இடைப்பட்ட இடமான புறநகரினை நிலவரண் என்பர். இங்கு காவல் வீரர்கள் தம் பாசறையை அமைத்துக் காவல் காட்டினையும் அகழியையும் அழித்துக் கொண்டு வரும் பகை வீரர்களின் படைகளை எதிர்த்துத் தடுத்து நிறுத்துவார்கள்.

நிலவரண் குறித்த செய்திகள் அன்றாட மக்களின் வாழ்வியல் தேவையுடன் ஒத்துக் காணப்படுவதால் இலக்கியங்களில் தனியாக இதனை விவரித்துக் கூறாமல் ஆங்காங்கு சில இலக்கியங்களில் மட்டுமே இடம் பெறுமாறு செய்திருக்கின்றனர். நிலவரண் குறித்த செய்திகள் இலக்கியங்களில் மிகக் குறைவாகப் பதிவு செய்யப்பட்டதன் வாயிலாக இக்கருத்தினை உறுதி செய்ய முடிகின்றது.

## மலையரண்

சங்க காலச் சீறூர் மன்னர்கள் நீண்ட மலைத் தொடர்களையும், மலைகளையும் சிறந்த இயற்கை அரண்களாகக் கொண்டனர். மலைகளில் கோட்டை கட்டி இவர்கள் ஆட்சி புரிந்தனர். இவற்றில் பாண்டிய நாட்டின் பறம்புமலையும் கொங்கு நாட்டின் கொல்லிமலையும் முற்காலத்தில் சிறந்து விளங்கின. இவ்வகை மலைகள் வளங்கள் நிறைந்து காணப்படுவதால் பகைவர் முற்றுகையின்போது இந்நாட்டிற்கு எவ்விதப் பாதிப்பும் ஏற்படுவதில்லை.

தென்பாண்டி நாடானது மலையை அரணாகக் கொண்டிருப்பதை,

> **“குலையிறைஞ்சிய கோட்டாழை**

அகல்வயன் மலைவேலி'' (புறம். 17:9–10)

என்ற புறநானூற்றுப் பாடல் குலை தாழ்ந்து கொள்ளத்தக்கதாய் அமைந்த தென்னையும் அகன்ற வயலையும் மலையாகிய வேலியையும் உடைய தென்பாண்டி நாடு என்று குறிப்பிடுகிறது.

இயற்கையாகவே உருவான அரண் பாரியின் பறம்பு மலை ஆகும். இம்மலையை முரசை உடைய மூவேந்தர்களும் முற்றுகையிட்டனர். இம்முற்றுகையினால், இம்மலையில் வாழும் மக்கள் வெளியில் இருந்து கிடைக்கும் உணவுப்பொருள்கள் எதுவும் கிடைக்கப் பெறாது உயிருக்குப் பயந்து தம்மிடம் தஞ்சம் அடைந்துவிடுவார்கள் என நினைத்தனர். ஆனால் கபிலர் மூவேந்தர்களிடமும் சென்று, பறம்பு மலையைக் கைப்பற்றுவது கடினமானது. இங்கு உள்ள மக்கள் எத்தனை ஆண்டுகள் சென்றாலும் உங்களுக்குப் பணியமாட்டார்கள். இம்மலையில் உழைக்காமலே பெறக்கூடிய, மூங்கில் நெல் விளையும், பலாப்பழங்கள் கிடைக்கும். வள்ளிக்கிழங்கு கிடைக்கும். தேனடை அழிந்து தேன் சொரியும். இவ்வாறு உள்ளே இருப்போர் உழைக்காமலே இயற்கையாகப் பெறக்கூடிய பொருள்கள் இங்கு கிடைப்பதால் தங்களின் முற்றுகை குறித்து அவர்கள் அஞ்ச மாட்டார்கள். மேலும் பாரியின் பறம்பு மலையானது வானம் வரை உயர்ந்து நிற்கும் தன்மை கொண்டது என்றும் கூறினார். இதனை,

''அளிதோ தானே பாரியது பறம்பே!

நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்

உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே

ஒன்றே சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே

இரண்டே தீம்சுளைப் பலவின் பழம் ஊழ்க் கும்மே

மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே

நான்கே அணிநிறஓரி பாய்தலின் மீதுஅழிந்து

திணிநெடுங் குன்றம் தேன்சொரி யும்மே

வான்கண் அற்று அவன் மலையே'' (புறம். 109:1–9)

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

மலையரண் வகைப்பாட்டில் மற்றொன்று மலைக்கோட்டை ஆகும். மலையின் மேல் கட்டப்பட்ட கோட்டை மதில் என்பர். இக்கோட்டைகள் கட்டப்பட்டுள்ள மலை மிக உயர்ந்ததாக இருக்கும். அம்மலையின் மேல் கட்டப்பட்டுள்ள கோட்டையைவிட உயர்ந்த இடம்வேறு இச்சுற்று வட்டாரத்திலேயே இல்லை என்று சொல்லுமளவிற்கு அக்கோட்டைகள் அமைக்கப்படும். ஒருவேளை இக்கோட்டையைவிட இன்னொரு இடம் உயர்ந்து காணப்பட்டால் அவ்விடம் தகர்க்கப்படும் அல்லது அங்கே ஒரு துணைக்கோட்டை கட்டப்படும். பொதுவாக மலைக்கோட்டைகள் பகைவர்கள் எளிதில் ஏறிவர முடியாத அமைப்பைக் கொண்டவை. எதிரியோடு மோதலோ முற்றுகையோ நேர்ந்தால்கோட்டை மக்கள் அனைவரும் பாதுகாப்பாக இருக்கும் பொருட்டு மலைக்கோட்டையின் மேல் பகுதி சமதளமாக இருக்குமாறு பார்த்துக்கொள்வர்.

### மதிலரண்

அரசர்கள் தம் கோட்டையைப் பாதுகாக்க மதிலரணை மிகுந்த பாதுகாப்புடன் வடிவமைத்திருந்தனர். கோட்டையின் சிறந்த அங்கம் மதிலரணாகும். அனுபவமும் தொழில் நுட்பத்திறனும் கொண்ட சான்றோர்களின் ஆலோசனைப்படி பல நிலைகளைக் கொண்டதாக அதனை வடிவமைத்திருந்தனர்.

மதிலரண் பகைவர்கள் ஏணிசாத்தி ஏறி உள்ளே வரமுடியாத உயரத்தையும் வெளியில் உள்ள பகைவர் அகல முடியாத அளவிலான அடி அகலமும், உள்ளிருந்து போர் புரிபவர் போர் செய்வதற்கு ஏற்றாற்போல் மேற்புறம் சுண்ணங்கலந்து கருங்கல் செங்கற்களால் கட்டப்பட்டுக் குத்திப் பெயர்க்க முடியாத திண்மையும், எந்திரம் பாவை முதலிய பொறிகள் தன்மீது இருக்க முதலையுடைய கிடங்கையும் கொண்டு பகைவர் நெருங்கா வண்ணமும் அமைந்திருத்தல் வேண்டும்.

கௌடில்யர் உணர்த்தும் மதிலரண் நுட்பமானதாகும்.

> **“மதிலரண் அகழியில் இருந்து நான்கு கோல் இடைவெளி உடையதாகவும் ஆறுகோல் உயரம் பன்னிரண்டு கோல் அகலமும் உடையதாகவும் தடைபடுத்தப்பட்டு இருக்க வேண்டும். மதிலரண் அடி அகன்று, நுனி**

**சுருங்கியதாகவோ அடியும் நுனியும் ஒத்த அகலமுடையதாகவோ, அடியும் நுனியும் சுருங்கி இடைப்பகுதி அகன்றதாகவோ அமைதல் வேண்டும். அகழியை உருவாக்குவதற்காகத் தோண்டிய மண்ணைக் கொண்டு மணல் சுவருக்கு ஆதாரமாகவும் எஞ்சிய மண்ணைக் கொண்டு அரண்மனை கட்டுவதற்கான இடத்தில் பள்ளங்களைச் சமப்படுத்தியும் மதிலரனை உருவாக்க வேண்டும் என்றும் அரண்மனையின் அளவினைவிட அகலத்தில் இருமடங்கு உயரமானதாகவும் பன்னிரண்டு முழத்துக்கு மேல் இருபத்து நான்கு முழம் வரை செங்கற்களாலும் கருங்கற்களாலும் மதில் சுவர் அமைந்திருக்க வேண்டும். அச்சுவரின் மீது ஏறுவதற்கும் இறங்குவதற்கும் ஏற்றவாறு படிக்கட்டுகளை உருவாக்கி இருக்கவேண்டும் என்றும் இதன் இடையே படைவீடு அமைக்கப் போதுமான அளவு இடம் உடையதாகவும் கொண்டு மதிலரணை உருவாக்க வேண்டும்''[22]**

என்று கௌடில்யர் மதிலரணின் நுட்ப அமைப்பு முறை குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

மதில் புறமதில், அகமதில் அல்லது இடைமதில் என்னும் இருபிரிவுகளையுடையதாய் அமையும். இவ்விரு மதில்களுக்கும் இடைப்பட்ட பகுதியினைப் 'பறந்தலை' என்று கூறுவர். இப்பகுதி பெரிதும் பரந்துபட்ட நிலப்பகுதியினை உடையதாய் அமைந்திருக்கும். போர்க்காலத்தில் அரணை முற்றுகையிட்ட பொழுது அகத்தோர் யாதொரு குறைவுமின்றி தமக்கு வேண்டுவன அமைத்துக் கொள்வதற்கும், புறமதிலைக் கடந்து அகமதிலைப் பற்றுங்கால் இருநாட்டுப் படைவீரும் அகன்றதாய் அமைத்தனர். இதனை,

**''நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கல்'' (பதிற்று. 16:2)**

என்னும் அடியினால் அறியமுடிகிறது. 'நாடுகண் டன்ன' என்பதனால் புறமதிலுக்கும் அகமதிலுக்குமிடையே வேண்டியாங்கு விளைநிலம் அமைந்திருந்தமையினை அறியமுடிகிறது. புறமதிலைக் கடந்து வருவோர்க்கு மலைபோல் நிற்றலின் இதனை 'விலங்கல்' என்று குறிப்பிடுகிறார்.

அகமதில் புறமதில் என இரு மதில்கள் மட்டுமின்றி, ஐந்து மதில்களையுடைய அரணும் ஏழு மதில்களையுடைய அரணும் இருந்தமையினை அறியலாம். புறமதிலைக் கடந்து ஐந்து

எயில்களையுடைய அரண் அழித்தவன் எனச் சேரமான் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை பாராட்டப்படுகிறார்.

கோவூர்க்கிழார் என்னும் புலவர் சோழன் நலங்கிள்ளியின் ஆற்றலைக் கூறும்போது நீ பாண்டியனின் ஏழு எயில்களின் கதவுகளை உடைத்தெறிந்து அதன்கண் நின் புலிப்பொறியைப் பொறித்தவன் என்று புகழ்ந்து கூறியுள்ளார். இதனை,

**''ஏழ்எயிற் கதவம் எறிந்து கைக்கொண்டு, நின்**

**பேழ்வாய் உழுவை பொறிக்கும் ஆற்றலை'' (புறம். 33:8–9)**

என்ற பாடலின் மூலம் அறியலாம். மதிலரண் மதில், எயில், இஞ்சி, சோ என நால் வகைப்படும்.

## மதில்

நால்வகை மதில் அரண்களில் மதில் என்பது கோட்டைச் சுவர் எனப் பொருள்படுகிறது. கோட்டை மதிற்சுவரின் ஓரங்களில் அரும்புகள் போன்று காணப்படும் பகுதியானது அரிய பாதுகாப்பு கருதியும், அதன் பின்புற அமைப்பானது காவல் வீரர்கள் மறைந்திருப்பதற்கு வசதியாகவும் அமைக்கப்பட்டுள்ளது. இம்மதிலின் மேலே எதிரிகளைத் தாக்குவதற்காகப் பலவகையான போர்க்கருவிகள் வைக்கப்பட்டிருந்தன. அத்தகைய மதிலானது வட்டமாக வளைந்தும், வானளாவ உயர்ந்தும் பல்வகையான பொறிகளைப் பெற்றும் விளங்கும் என்பதை,

**''வானுற வோங்கிய வளைந்து செய்புரிசை'' (பதிற்று. 53:9)**

**''வான்உட்கும் வடிநீள்மதில்'' (புறம். 18:11)**

**''விண்ணுற ஓங்கிய பல்புடைப் புரிசை'' (மதுரைக். 352)**

எனும் பாடலடிகளின் வாயிலாக உணரமுடிகின்றது.

பதிற்றுப்பத்து தூக்கிய மதில், நெடுமதில், வாண்மதில், குண்டுகண கழிய மதில் என்று கூறுகிறது. புறநானூறு ''நெடுமதில், நீள் மதில், காப்புடை மதில், இடை மதில், மதிலும் ஞாயிலும், மாறுகொண்டோர் மதில்'' என்று குறிப்பிடுகின்றது. ஐங்குறுநூறு ''நீண்மதில்''

என்றும் புறப்பொருள் வெண்பாமாலை ‘‘வாயிற் நெடுமதில்’’ என்றும், ‘‘சுடுமண் நெடுமதில்’’ என்றும் சுட்டிக்காட்டுகிறது. சிலப்பதிகாரம் ‘‘கடிமதில்’’ என்று கூறுகிறது.

ஒரு கோட்டை மதில் எப்படி அமைய வேண்டும் என்பதை,

**‘‘கட்டிடச் சீர்நிலை நெறிக்கலை யோர்ந்து**

**கட்டிடம் புறச்சுவர் மதில் ஆக்கம்**

**நீட்டல் குறக்கல் நிலைவளை வியற்றல்**

**மாடம் கூடம் விரிதரை சுற்றிடம்**

**வெற்றிடம் விட்டிடம் காவிடம் கலைவெளி**

**தெற்றுறும் சுற்றிடம் இருபுற விரிவிடம்**

**பின்னில் நிலைசெடி கொடிமலர் வளரிடம்**

**நீர்நிலை விரிதரை சூழிடம் ஆய்ந்து**

**வடகீழ் நிலையறி வகுத்தறிக் கணக்கியல்**

**குடபுலத் தியல்நெறி கூர்நெறிக் கணக்கும்**

**தென்றிசை வாயில் சீர்முகப் பாய்ந்தே**

**நன்றுறும் ஒன்பான் நெறிநிலை நன்னி**

**மூன்றில் விரிதரை சூழிடம் ஆய்ந்து**

**ஏர்நிலை இயலகம் எண்ணிலக் கணக்கியல்**

**மாடம் அமைப்புறும் மாண்நிலை கூடம்**

**கூடம் அமைப்புறும் மாண்நிலை கூடம்**

**கீழ்மேற் றிசையுற நீளம் கண்டே**

**வாழ்தென் வடதிசை அகலம் ஆர்த்தே**

**வாழ்மனை வளர்மனை நல்மனை தொல்மனை**

**ஆழ்கலை நிலைதெரி அருங்கலைக் கணக்கியல்**

கட்டிட நூல்தெரி யியல்நிலை அமைப்பாய்

கட்டிடக் கலைநிலை கணக்கியல் கூறுமே''[23]

என்ற ஐந்திரம் என்ற மூலம் அறியமுடிகின்றது.

## எயில்

நொச்சிப் போரில் மேல் நின்று மறைந்து அம்பு எய்தற்குரிய புகழுடையது எயில். காப்பு மிகுந்த எயிலையுடைய அரண் வேந்தர்க்குரிய உறுப்புகளுள் ஒன்றாகும். மலைகள் மரங்களுக்கு இடையினில் தூக்கணாங்குருவிக் கூடுகள் போன்று தொங்குமாறு அமைக்கப்பட்ட எயில்கள் தூங்கெயில்கள் எனப்படும்.

உயரத்தோடு அகலமும் உடையது எயில். தொல்காப்பியம் வருபகை பேணார் ஆரெயில் என்றும், மன்எயில் அழித்த மண்ணு மங்கலமும் என்றும் கூறுகிறது. திருமுருகாற்றுப்படை மூவெயில் என்று சுட்டுகிறது. சிறுபாணாற்றுப்படை 'ஓங்குஎயில்' என்றும், 'தூங்கெயில்' என்றும், 'மன்னர் மன்னனெயில்' என்றும் கூறுகிறது. மதுரைக்காஞ்சி 'நாடழிய எயில் வெளவி' என்றும் 'வாரெயில்', 'கல் எயில் உழந்த' என்றும் கூறுகிறது. பட்டினப்பாலை 'திருநிலைஇய பெருமான் எயில்' என்று பேசுகிறது. நற்றிணை 'ஒரெயில்' என்றும் 'மண்னெயில்' என்றும் 'மன்னர் எயில்' என்றும் குறிப்பிடுகிறது. பதிற்றுப்பத்து 'அம்புடையார் எயிலுள்ளழி' என்றும் 'உடன்றோர் மன்னெயில்' 'அமர் கோணேரி கற்தார் எயில்' என்றும் கூறுகிறது. பரிபாடல் 'மூவகை ஆரெயில்' எனக் குறிப்பிடுகிறது. அகநானூறு 'தண்ணடை தழீஇய கொடி நுடங்கு ஆரெயில்' என்றும் 'கோண்தணி எயிலின்' காப்புச் சிறந்தது என்றும், 'ஓர் எயில் மன்னன் போல துறந்தனள்கொள்' என்றும், 'ஒன்னாத தெவ்வர் மன்எயில்' போல என்றும் 'மன் எயில் இருக்கை' ஆகிய பாடல்களிலும் எயில் குறித்துப் பேசுகிறது. புறநானூறு 'எயிற்கதவு இடாஅ' என்றும் 'ஆர் எயில் அவ்எயில்' என்றும் 'நனந்தலை நல்லெயில் என்றும் 'பேரெயில்' என்றும் 'மூவெயில் என்றும் குறிப்பிடுகிறது. புறப்பொருள் வெண்பாமாலை 'ஏணி பலவும் எயில்' என்றும் 'வனக்கருஞ்சீர் ஆரெயில்' என்றும் குறிப்பிடுகிறது.

## இஞ்சி

உயரம் அகலம் இவற்றோடு திண்மையும் அருமையும் உடையது இஞ்சி. 'இஞ்சுதல்'

என்றால் ‘இறுகுதல்’ என்று பொருள். இறுகிய மதிலே ‘இஞ்சி’ ஆகும். மதிலைப் பகைவர்கள் எளிதில் தகர்த்துவிடாத வகையில் உறுதியான கட்டுமானப் பொருள்களைக் கொண்டு வடிவமைத்திருந்தனர். கட்டுமானத்தில் செங்கல், மண், சுதை, இரும்பு ஆகியவை பயன்படுத்தி மதிலைத்திண்மையாக அமைத்தனர். மண்ணை அரைத்துக் கட்டினர். இதனை,

**‘‘புனைமான் இஞ்சி பூவல் ஊட்டி மனைமணல் அடுத்து’’ (அகம். 195:3)**

**‘‘அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்’’ (புறம். 341: 5)**

என்ற பாடல்களின் மூலம் உணரமுடிகின்றது.

## செம்புப் புரிசை

பழந்தமிழர் செம்பை உருக்கி ஊற்றி கோட்டை எழுப்பும் தொழில்நுட்பத்தைப் பெற்றிருந்தனர். இந்நுட்பம் அரண்களின் உறுதிப்பாட்டை நிலைநிறுத்துவதாகவும், எதிரிபடைகளின் தாக்குலை எதிர்கொள்ளும் வன்மை பெறவும் கையாளப்பட்டதாகும். செம்பை உருக்குவதற்கும், கட்டுமானத் தொழிலில் அவற்றைப் பயன்படுத்துவதற்கும் பலவகையான நுட்பங்களையும் எந்திரங்களையும் பயன்படுத்தியிருத்தல் வேண்டும். இதனை,

**‘‘செம்பு புனைந் தியற்றிய சேணெடும் புரிசை**

**உவரா வீகைத் துவரை யாண்டு’’ (புறம். 201:9–10)**

**‘‘செம்புஉறழ் புரிசைப் பாழிநூறி’’ (அகம். 375:13)**

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

மதில்கள் மிகுந்த வலிமையுடன் விளங்குவதற்காகச் செப்புத் தகடுகளைச் செறித்துத் திண்மை செய்யும் முறையைக் கையாண்டனர் இதனை,

**‘‘கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சி**

**செம்புஉறழ் புரிசை செம்மல் மூதூர்’’ (புறம். 37:10–11)**

**‘‘செம்புஉறழ் புரிசை பாழி நூறி’’ (அகம். 375:13)**

“செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்” (நெடுநல். 112)

“செம்பு இயன்றன்ன செஞ்சுவர் புனைந்து” (மதுரைக். 485)

என்ற பாடல்களின் மூலம் அறியமுடிகின்றது.

இரும்புக்கம்பிகளை இடையில் அமைத்துப் பரந்தல் கலவையால் கட்டப்பட்ட தொழில்நுட்ப முறை இக்கால தொழில் நுட்ப முறையுடன் ஒப்பிடக்கூடியதாக உள்ளது. இதன்மூலம் உலோகத் தொழில் நுட்பத்தையும் கட்டடக்கலை நுட்பத்தையும் அக்கால மக்கள் அறிந்து இருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

## சோ

நான்கு வகை மதில்களுள் சோவரணே சிறந்தது. உயரம், அகலம், திண்மை இவற்றோடு பகைவர் நெருங்க அரியது சோ.

## மதில் உறுப்புகள்

மதிலின் பாதுகாவலை மேலும் பலப்படுத்தும் வகையில் மதிலில் ஆங்காங்கே பல பொறிகளை வடிவமைத்து வீரர்கள் பாதுகாத்து வந்தனர். அவ்வகையில் மதிலின் பொறிகளை முடக்கறை, ஞாயில், தோணி, இயந்திரம், மேவறை, விதப்பு, பதப்பாடு, கோசம் எனப் பல வகைப்படுத்தியுள்ளனர். இந்த பொறிகள் யாவும் மதிலின் மீதுள்ள வீரர்கள் பகைவர்கள் அறியாத வகையில் அவர்கள் மீது தாக்குதல் நடந்த உதவுகின்றன. இப்பொறிகளை மதிலின் பல இடங்களில் வடிவமைத்துள்ளனர். மதிலின் உச்சியில் இத்தகைய பொறிகளை வடிவமைப்பதும் உண்டு.

இரும்பினாலும் தோலாலும் உருவாக்கப்பட்ட பல படைக்கருவிகள் சங்ககாலத்தில் இருந்தன. இப்படைக் கருவிகளைப் பொறிகளாக அமைத்து மதிலைப் பாதுகாத்து வந்துள்ளனர். மல்லிகிழான் காரியாதிம் மதிலானது திங்களும் நுழையாததுமாகிய பொறிகளையுடைய சிறு வழியைக் கொண்டிருந்ததை,

“திங்களும் நுழையா எந்திரப் படுபுழை” (புறம். 177:5)

என்ற புறநானூற்றுப் பாடலின் மூலம் அறியலாம்.

சேர மன்னனின் வஞ்சி மாநகரத்துக் கோட்டை வாயில் எந்திரப் பொறிகள் அமைக்கப்பட்டிருந்ததுடன் சிலம்பும் தழையும் கட்டித்தொங்கவிடப்பட்டிருந்தது. இதனை,

**"தொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்**

**செம்பொறிச் சிலம்பொடு அணித்தழை தூங்கும்**

**எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்" (பதிற்று. 53:5–7)**

என்ற பதிற்றுப்பத்துப் பாடலடிகளின் மூலம் உணரமுடிகின்றது.

மதில்கள் பலவகையான பொறிகளைக் கொண்டு விளங்கியதை,

**"கற்பொறியும் பாம்பும் கனலும் கடிகுரங்கும்**

**விற்பொறியும் வேலும் விலக்கவும் – பொற்புடைய**

**பாணி நடைப்புரவிப் பல்களிற்றார் சாத்தினார்**

**ஏணி பலவும் எயில்"[24]**

என்ற புறப்பொருள் வெண்பாமாலையின் மூலம் அறியமுடிகின்றது.

கோட்டையைக் காவல் காக்கும் வீரர்கள் கொதிக்கும் நீர் அல்லது கொதிக்கும் எண்ணெயைக் கோட்டை மதிலின் கீழ் நிற்கும் எதிரிகள் மீது ஊற்றுவார்கள். வேல், அம்பு, ஈட்டி, எழு, சீப்பு, ஆணையம், குந்தம், கோல் முதலான கருவிகளை மதிலின்மேல் உள்ள துளைகள் வழியாகக் காவல் வீரர்கள் பொறிகளை இயக்கி வெளியிலுள்ள பகைவர்கள் மீது ஏறிவர். கண்போன்ற அச்சிறிய துளைகள் மறைந்திருந்து கணைகளை எய்திட உதவும் அரிய அமைப்புகள் ஆகும். அத்துளை 'குருஉக்கண்' எனப்பட்டன. அவற்றைப் 'பொய்க்கண்' என்றும் 'கல்துளை' என்றும் அழைத்தனர். இதனை,

**"கொடுமுடி காக்கும் குரூஉக்கண் நெடுமதில்" (அகம். 159:18)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது.

தங்கள் பகைவரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள பலம் நிறைந்த மதில் பொறிகளை ஏற்படுத்தி வைத்திருந்தார்கள். கோட்டைகளைப் பகைவர் நெருங்கினால் அவர்களைத்

தாக்கி விரட்டியடிப்பதற்கு தம் கால வசதிகளைக் கொண்டு மிகவும் உயரிய பாதுகாப்பு சாதனங்களைத் தம் அரண்களிலே பொருந்தி இருந்தனர். சிலப்பதிகாரம் காட்டும் மதுரைக் கோட்டையின் மதில் காவலனாது வியக்கும் வகையில் அமைந்திருந்தது. இம்மதிலில் ஏராளமான பொறிகள் அமைக்கப்பட்டிருந்ததனை,

**"மிளையும் கிடங்கும் வளைவில் பொறியும்**

**கருவிரல் ஊகமும் கல்உமிழ் கவணும்**

**பரிவுற வெம்நெயும் பாகு அடுகுழிசியும்**

**காய்பொன் உலையும் கல்இடு கூடையும்**

**தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்**

**கவையும் கழுவும் புதையும் புழையும்**

**ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்**

**சென்று ஏறி சிரலும் பன்றியும் பணையும்**

**எழுவும் சீப்பும் முழுவிறல் கணையமும்**

**கோலும் குந்தமும் வேலும் பிறவும்**

**ஞாயிலும் சிறந்து நாள்கொடி நுடங்கும்''[25]**

என்ற பாடலடியால் அறியமுடிகின்றது.

காவல் காடும் அகழியும் வளைந்து தானே எய்யும் விற்பொறிகள் கரிய விரல்களையுடைய சேர்ந்தாரைக் கடிக்கும் குரங்கு போன்ற பொறிகள், அரண் மீது ஏறுவோர் மீது கல்லைக்கொட்டிக் கொண்டிருக்கின்ற கவண் பொறி மதிலைப் பற்றுவார் மீது வீசுவதற்கான கொதிக்கின்ற நெய்யுமிழ் பொறி, செம்பை உருக்குமிடம், இரும்பினைக் காய்ச்சி எறிதற்குரிய உலைகள், கல்லை இட்டு வைக்கும் கூடையும், தூண்டில் வடிவமாக அமைந்த கருவிகள், கழுத்தில் பூட்டி முறுக்கும் சங்கிலியையுடைய தொடங்கும் கருவி, ஆண்டலை பறவை வடிவில் பறந்து மூளையைக் கொத்தி எடுக்கும் கருவி, மதிலைப் பற்றி ஏறும்போது தள்ளுகின்ற கொம்புகள், கழுக்கோல், அம்புக்கட்டுகள், மறைந்து கொண்டு வில்லை எய்யும் ஏவுறைகள், சிற்றம்புகள் வைத்து எய்யும் இயந்திரம், மதிலைப் பற்றுவார்

கையைத் தாக்கும் மீன் பெயர்க்கும் கைபெயர் ஊசி, பகைவர் மீது பாய்ந்து தாக்கும் மீன் கொத்திப் பறவை போன்ற பொறிகள், மதில்மேல் ஏறியோர் உடலை இரண்டாகக் கிழிக்கும் பன்றிப் பொறி, கோட்டைக் கதவிற்கு வலிமை தரும் வகையில் கதவின் குறுக்கே உட்புறத்தில் அமைக்கப்படும் கணையம் போன்ற பொறிகள், எழுவு, சீப்பு முழுவிறல் கணையம், விட்டேறு சிறுசவளம், வேல்கள் எனப் பலவகையான பொறிகளை மதிலில் அமைத்து அம்மதிலைப் பாதுகாத்து வந்தனர் என்ற செய்தியைச் சிலப்பதிகாரம் மூலம் அறியமுடிகின்றது.

## ஞாயில்

மதிலின் உறுப்புகளில் ஒன்று ஞாயில். அம்பு செலுத்துவதற்கு உள்ள இடம் மதிலரண். மதிலரண் உறுப்புகளில் மிகவும் சிறப்பு வாய்ந்தது ஞாயில் என்பர். ஞாயில் என்பது 'கோட்டையின் ஏவறை' என்று செந்தமிழ் அகராதி கூறுகிறது. பெரிய வாயில்களுடன் சிறிய வழிகளையும் அமைத்துச் சூட்டுதொறும் அம்புக் கட்டுகளைக் கட்டி வைத்தலுக்கு உரியது ஞாயில் என்பதாகிறது. மேலும் ஞாயில்தோறும் பகைவர் காட்சியினின்றும் கருவிகளின் தாக்குதலினின்றும் மறையவும், காக்கவும், தாக்கவும் அமைப்புகள் உண்டு என்பது விளங்குகிறது.

ஞாயிலை 'நிலைஞாயில்' என்றும் 'குறுந்தாள் ஞாயில்' என்றும் குறிப்பிடுவர். நெடுமதிலின்கண் வரிசையாக இருக்கும் சூட்டுகள் **'நிரைஞாயில்' (மதுரைக். 66)** **''நிரைநிலை ஞாயில்'' (அகம். 124:16)** எனவும் குறிக்கப்படுகின்றன. குறுகிய படிகளை உடையதனால் 'குறுந்தாள் ஞாயில்' என்றும் கூறுவர்.

மதிலின் அகத்தேயிருப்போர், புறத்தோர் அறியா வண்ணம் இருந்து கொண்டு அம்பு எய்வதற்கு ஏற்ற முக்கோண வடிவஅறை ஞாயில் ஆகும். இதனை 'ஏப்புழை ஞாயில்' எனவும் வழங்குவர். மதிலரணின் சிறந்த உறுப்பாக ஞாயில் விளங்குவதை,

> **''ஏப்புழை ஞாயில் ஏந்துநிலை அரணம்''**[27]

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இது பிற்காலத்தில் ஏவறை, குட்டு, குருவித்தலை என்னும் பெயர்களால் வழங்கப்பட்டுள்ளன.

திருமகள் நிலைபெற்றுத் தங்கும் பெருஞ்செல்வம் உடைய உறையூரின் மதிலில் பெரிய வாயில்களையும் சிறிய வாயில்களையும் அமைத்தனர். அம்மதிலின் உச்சியில், மறைந்து அம்பு

கட்டுகள் எய்யும் இடங்கள் தோறும் அம்புக் கட்டுகளைத் தொகுத்து வைத்தனர். இச்செய்தியினை,

**“கோயிலொடு குடிநிறீஇ**

**வாயிலொடு புழை அமைத்து**

**ஞாயில் தொறும் புதை நிறீஇ’’ (பட்டினப். 286–288)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. இங்கு மாடத்தின் உச்சியில் மதில்கொண்டு அம்பு எய்யும் இடங்கள் அமைக்கப்பட்டிருப்பது, அவர்களுடைய தொழில்நுட்ப அறிவை எடுத்துக்காட்டுகிறது.

ஞாயில்கள் அனைத்திலும் புதை நிறுவி, அப்புதைகளில் பொன்னும் பொருளுமாகப் பெருஞ்செல்வத்தைக் கலங்களில் வைப்பர். பகைவர் யாராயினும் அவர்க்குப் புறங்கொடாமல் அவரோடு போர்புரிய விருப்பம் கொண்டிருப்பதைப் பகைவர்க்கு அறிவிக்கும் பொருட்டும் பகைவரால் பற்றற்கரியது தம் அரண் எனத் தம் அரணின் பெருமையைப் பறைசாற்றுவதற்காகவே வேந்தர் பெருஞ்செல்வங்களை மதிற்குடுமியில் அமைக்கப் பெற்றிருந்த ஞாயில்களில் வைப்பது வழக்கமாகும். இதனைப் பகைவர் அரணுக்குரிய வேந்தன் தமக்குரைத்த சூள் ஆகக் கொண்டு படையெடுத்து வருவர். படையெடுத்து வந்த பகைவன் அவ்வரணுக்குரிய வேந்தனை வெற்றி கொண்டால் அரணைக் கைக்கொண்ட வெற்றிக் களிப்பில் மதிற்குடுமியில் வைக்கப்பெற்றிருந்த செல்வங்களைத் தம் நகர்க்குக் கொண்டு சென்று தம் நாட்டு மக்களுக்கு வாரி வழங்குவான். மதிற்குடுமி ஞாயில்களின் கலங்களில் இப்பொன்னையும் பொருளையும் வைத்திருந்தமையால் இதனை நன்கலம் என்று வழங்கினர்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தன்னோடு பொருதற்கு எதிர்ந்த பகைவருடைய நாட்டிற்குள் தன் கடல்போலும் பெரும் படை புகத்தானும் புகுந்து யானைகளை ஏவி அவர்களுடைய அரண்களைக் கைப்பற்றிய பின், அவ்வரண்களின் குடுமியில் நன்கலத்தில் வைக்கப் பெற்றிருந்த பொன், வைரம், வைடூரியம் முதலான பெருஞ்செல்வங்களைப் பரிசிலர்க்கு வழங்கியதை,

**“செய்வினைக்கு எதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்**

கடற்படை குளிப்ப மண்டி அடர்ப்புகர்ச்

சிறுகண் யானை செவ்விதின் ஏவிப்

பாசவல் படப்பை ஆர்எயில் பலதந்து

அவ்எயில் கொண்ட செய்வுறு நன்கலம்

பரிசில் மக்கட்கு பரிசையின் நல்கி'' (புறம். 6:11–16)

என்ற புறநானூற்றுப் பாடலின் மூலம் அறியமுடிகின்றது. தம் படைவலிமையால் நாட்டில் குடுமிபல கொண்டு அங்கிருந்த செல்வங்களைப் பரிசிலர்க்கு வாரி வழங்கியதாலும், ஒவ்வொரு போர் வெற்றிக்குப் பின்னும் வேள்விகள் பல நடத்தினமையாலும் எவராலும் தோற்கடிக்கப்படாத இப்பாண்டிய வேந்தன் பெருவழுதியைப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என வழங்குகின்றனர்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கடற்கடம்பரை வென்று அவர்தம் அரணின் குடுமிமேல் இருந்த நன்கலத்தைக் கவர்ந்து வந்துதன் நாட்டு மாந்தை நகர முற்றத்தில் குவித்ததை,

''நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்

பணிதிறை தந்த பாடுகால் நன்கலம்

பொன்செய் வயிரமொடு ஆம்பல்

ஒன்றுவாய் நிறையக் குவைஇ'' (அகம். 127:6–9)

என்ற அகநானூற்றுப் பாடலின் மூலம் அறியமுடிகின்றது. இச்சேர வேந்தன் பின் ஒருமுறை தன்னை இகழ்ந்து வன்சொல் பேசிய யவனரை வென்று பிணித்து இழுத்து வந்ததோடு, யவனர் நாட்டு நன்கலன்களை வயிரங்களுடன் கவர்ந்து கொண்டுவந்து தம் வெற்றித் திருநகரில் வைத்து எல்லோர்க்கும் உதவியதை,

''நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து

நெய்தலைப் பெய்து கைபின் கொளீஇ

அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு

பெருவிறல் மூதூர்த்தந்து பிறர்க் குதவி'' (பதிற்று. 2:8–10)

என்ற பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

## நாஞ்சில்

மதிலுறுப்புகளில் நாஞ்சில் என்பதும் ஒன்று. நாஞ்சில் என்பதற்குக் கலப்பை என்று பொருள். பல மன்னர்களும் தங்கள் கோட்டை மதிலின் முன்புற வாயிலில் கலப்பையை ஓர் உறுப்பாக அமைத்திருந்தனர்.

''பிடிவாயன்ன மடிவாய் நாஞ்சில்'' (புறம். 56:4) என்றும் பெரும்பாணாற்றுப் படையும், ''அடல்வெறி நாஞ்சிற் பனைக் கொடியோனும்'' (பரிபாடல். 1:5) என்றும், ''நின்னொன்றும் உயர் கொடி நாஞ்சில்'' (பரி. 1:39) என்றும் பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

## பதணம்

மதிலுறுப்புகளில் பதணமும் ஒன்றாகும். மதிலைக் காக்கும் பொருட்டுக் கோட்டையின் உறுப்புகளுடன் ஒன்றாக மறைந்திருந்து அம்பு ஏவும் இடத்தை அமைத்திருப்பர். அதனைப் பதணம் என்றும், நிரைப்பதணம் என்றும் கூறுவர்.

## கோட்டை வாயில்

கோட்டை வாயில் யானையில் அமர்ந்தபடி குடை பிடித்தவாறு செல்லும் அளவுக்கு உயரமானதாகவும் யானைகள் செல்லும் அளவுக்கு அகலமானதாகவும் இருந்துள்ளன.

## கோட்டை வாயில் கதவுகள்

கோட்டை வாயிலில் அமைக்கப்பட்டிருந்த கதவுகள் மிக உயரமானதாகவும், கடினமானதாகவும் இருந்தன. அவற்றில் இரும்பு பித்தளைக் குமிழிகள் பொருத்தப்பட்டிருந்தன. கதவுகளில் பல்வேறு ஓவியங்கள் செதுக்கப்பட்டு, கதவுகளில் மன்னனுக்குரிய இலச்சினைகள் பொறிக்கப்பட்டிருந்தன. கதவுகளின் உட்புறமும் வெளிப்புறமும் குறுக்கே தாழ்ப்பாள் போல தடைமரங்கள் பொருத்தப்பட்டிருந்தன. உட்புறமாகத் தாழிடப்பட்ட தடைமரம் 'சீப்பு' என்றும் வெளிப்புறமாகத் தாழிடப்பட்ட தடைமரம் 'எழு' என்றும் பெயர் பெற்றன. சில கோட்டைச் சுவரிலுள்ள கதவுகள் ஓரிருவர் திறக்க

முடியாத கனம் உடையதாகவும் வீரர்கள் பலர் தங்கள் பலத்தை ஒன்று திரட்டி முயன்று திறக்கக் கூடியவையாகவும் விளங்கின. யானைகள் கூடிமுட்டி மோதினாலும் உடையாத தகர்க்க முடியாத உறுதியுடையனவாக விளங்கின.

## சுருங்கை

கோட்டைக் கழிவுநீர் நகரத்திற்கு வெளியே போய் அகழியில் விழும்படி சுருங்கைகள் அமைக்கப்பட்டிருந்தன. வீடுகளிலிருந்து வெளிவரும் கழிவுநீர் சாக்கடை வழியாகத் தெருக்களில் அமைந்திருந்த சுருங்கைகளில் சென்று கலந்ததையும் பெரிய சுருங்கைகளிலிருந்து வரும் நகரத்துக் கழிவுநீர் விழும் இடம் யானையின் தும்பிக்கைப் போல அமைந்திருந்தை,

> **“நெடுமால் சுருங்கை நடுவில் போந்து**
>
> **கடுமா களிறிணத்துக் கைவிரு நீர்போலும்**
>
> **நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடல்**
>
> **கடிமதில் பெய்யும் பொழுது’’ (பரி. 20:104–107)**

என்னும் பாடலடிகள் வாயிலாக உணரமுடிகின்றது. சுருங்கைகள் வீதிகளின் ஓரங்களில் அமையாமல் நடுவில் அமைந்திருந்தது. சுருங்கை என்பது கோட்டைக்குள் செல்ல பயன்படுத்தப்படும் அகழிப்பாலம் என்றும், கோட்டைக்குள் இருக்கும் வீடுகளிலிருந்து அகழியில் வந்து சேரும் கழிவுநீர்ப்பாதை என்றும் இருவேறு பொருள் இருப்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.

## பார்வல் இருக்கை

பார்வல் இருக்கை என்பது வெளிக்கோட்டைக்கும் உட்கோட்டைக்கும் இடையேயுள்ள சமதளப்பகுதி ஆகும். இது வெளிக்கோட்டையிலிருந்து தாழ்வாக உள்கோட்டையின் உயரத்திற்கு அமைந்திருக்கும். கோட்டையின் மேற்பகுதியில் நின்று காவல் காக்கும் வீரர்களை இச்சமதளப் பகுதியிலிருந்து ஆயுதம் ஏந்திய வீரர்கள் அல்லது குதிரை வீரர்கள் கண்காணிப்பர். இது பார்வல் பாசறை என்றும் அழைக்கப்பட்டது.

## கோட்டைகள் கட்டும் முறை

கோட்டைகள் கட்டுவதற்கு சமவெளி, மலை, ஆறு முதலிய இயற்கை அமைப்பிற்கு உட்பட்ட இடங்களைத் தேர்வு செய்தனர். அந்த இடத்திற்குத் தேவையான பொருட்களைக் கொண்டுபோய்ச் சேரும்படியான பாதைகளும் அமைக்கப்பட்டிருந்தன. கோட்டையானது இயற்கைச்சீற்றம், வனவிலங்குகள் மற்றும் சக மனிதப் பகைமை காரணமாகத் துன்பங்களிலிருந்து விடுபட்டு பாதுகாப்பாக வாழ்வதற்காகவுமே கட்டப்பட்டுள்ளன.

ஒரு கோட்டையின் புறத்தோற்றம் காண்போர்க்கு அச்சம் தரும் விதத்தில் அமையவேண்டும். அதுமட்டுமல்லாமல் அக்கோட்டையில் மண்ணின் வீரமும் வெளிப்பட வேண்டும் என்பதை,

> **‘‘வீரக்குறிப்பும் விரமா நோக்கும்**
>
> **வீரத்தோற்றம் வீரத்தோற்றம்**
>
> **வீரக்கடைநிலை மெய்யியற் தோற்றம்**
>
> **வீரவாள்நிலை தோளெழில் தோற்றம்’’**[27]

என்ற பாடலின் வழி உணரமுடிகின்றது.

அரண்மனையைச் சுற்றிக் கோட்டை கட்டுவதற்கு முன்பு கோட்டை எவ்வாறு அமையவேண்டும் என்பதை மன்னனின் தலைமையிலான குழுவினர் முடிவு செய்வர். மன்னன் மனதில் இருக்கும் கோட்டை மதில்கள் எப்படி என்பதை வல்லுநர்கள் தோலில் அல்லது துணியில் கடுக்காய் சாற்றினால் தயாரித்த மையினால் வரைபடமாக வரைந்து காட்டுவர். வரைபடத்தை மன்னன் பார்த்து ஒப்புதல் அளித்த பின்னரே கோட்டைக் கட்டுவதற்கு ஆயத்தம் செய்வர்.

வரைபடம் தயாரான பின்னர் கல் அறுத்து எடுக்கும் மலையைத் தேர்வு செய்வர். இவ்வாறு மலையைத் தேர்வு செய்த பின்னர் கோட்டை அமைப்பதற்குரிய பணியாளர்களைப் பல்வேறு இடங்களிலிருந்தும் அழைப்பர். சிறைக்கைதிகளே இத்தகைய வேலைகளுக்குப் பயன்படுத்தப்பட்டனர். கோட்டை அமைவிடத்திற்கும் கல் அறுத்து எடுக்கும் மலைக்கும் இடையே பொருட்களைக் கொண்டுவர ஏற்றாற்போல் வழித்தடம் சீரமைக்கப்படும்.

அதன்பின்னா் கல் உடைக்கும் தொழிலாளா்கள், கல் தச்சா்கள், மரத்தச்சா்கள், சிற்பிகள் முதலியோா் தங்குவதற்கான குடில்களை அமைப்பா்.

குறிப்பிட்ட நாளில் சோதிடனை வரவழைத்து நாள்குறித்து மன்னனுக்கும் தொழிலாளா்களுக்கும் எவ்விதமான இடையூறும் ஏற்படாதவாறு பணி சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதற்காகப் பூமி பூஜை செய்வா். பூமாதேவி உன்னுடைய சொத்தில் மிகச்சிறிய ஒரு பகுதியை நாங்கள் எடுத்துக் கொள்கிறோம். பொறுத்துக்கொள் என்று வேண்டுவா். பிறகு மலைப்பூஜை செய்யப்படும். மலையிலுள்ள தேவகணங்களும், பூதகணங்களும் வேறு பலவும் மலையில் குடியிருக்கும் வெளவாலும், ஆந்தையும், பாம்பும், சிறுபிராணிகளும் எங்களுக்கு எந்த விதமான தீங்கும் தராதபடி இந்த இடத்தைவிட்டு அகன்று வேறு இடத்திற்குக் குடிபோய் தாங்களும் எங்களையும் வாழ்விக்க வேண்டும் என்கிற பூஜையே மலை பூஜை ஆகும். உளி, சுத்தி, அரணிக்கட்டைகள், கூடம், ஆணி, அரம் முதலியவற்றை வைத்து பூஜை செய்வா். பின்னா் பணியாட்களுக்கு சன்மானம் வழங்கப்படும்.

கோட்டை கட்டுவதற்குரிய கற்களை மலையிலிருந்து பிளந்து வெட்டி எடுப்பதற்குத் எத்தகையோா் தேவைப்பட்டனா் என்பதை,

> **“கல்தச்சா் முட்டாக்கள் தங்களையும்அழைத்து**
>
> **கற்பிளவு பிளவுமென்னக் கருங்கல்லு வெட்டுவாரும்**
>
> **மறப்பொலியும் திண்டியுத்தான் மலைக்கூடம் அடிப்பாரும்**
>
> **வண்டியில் கல்லேற்றுவாரும் மலைப்பிளவு பிளப்பாரும்**
>
> **கண்டிபோட்டுத் தடிபாச்சிக் கல்லுகளை யேற்றுவாரும்**
>
> **தெப்பத்தைத் தள்ளிப்போட்டு சோ்ந்த கல்லும் ஏற்றுவாரும்**
>
> **முட்டாக்கள் ஆயிரம்போ் முளைத்தச்சா் அதில்ரெட்டி’’[28]**

என்னும் ‘ஐவா் ராசாக்கள்’ கதைப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

பெரும் மனித உழைப்பு மூலமாகவே இத்தகைய கற்கள் வெட்டி எடுக்கப்பட்டதோடு கோட்டைகளும் எழுப்பப்பட்டன. பாறைகளைக் கொண்டு செல்வதற்கு யானைகள் பயன்படுத்தப்பட்டன. ஒரு யானை முன்னே இழுக்க மற்றொரு யானை அப்பாறைக்

கல்லைப்பின்னிருந்து தள்ளிக்கொண்டு செல்லும். சில பெரிய பாராங்கற்களைச் சக்கரங்களில் வைத்து அல்லது பெரிய மரங்களின் மேல் வைத்து தள்ளிக்கொண்டு போக சிறைக்கைதிகளான அடிமை வீரர்கள் இருந்தனர்.

எந்த மலையில் கோட்டை மதில் கட்டுவார்களோ அந்த மலையிலேயே அக்கற்கள் வெட்டி எடுக்கப்பட்டுக் கட்டப்படுவதால் மலையும் கோட்டையும் ஒரே நிறத்தில் காணப்படும்.

மலைப்பாறையின் மேற்பகுதியில் கோட்டைச் சுவரில் முதல் வரிசைக் கற்கள் உறுதியாகப் பிடிமானத்தோடு ஊன்றி நிற்பதோடு, மேற்கொண்டு தம்மீது அடுக்கப்படும் கற்களைச் சரியவிடாது தூக்கிக்கொண்டு நிற்தபற்காக மலைப்பரப்பில் கடக்கால் போல வெட்டி, அதில் முதல் வரிசைக் கற்களைச் சுண்ணாம்பு சாந்து (மணல், சுண்ணாம்பு, கடுக்காய்ப் பொடி, பதனீர் ஆகியவற்றாலான கலவை) கொண்டு ஒன்றோடொன்று பிடிப்பாக இருக்குமாறு இறுக்குவர். மலையோடு கோட்டையின் அடிப்பகுதி கல்வரிசையானது தரமான சுண்ணாம்புக் கலவையால் உறுதியாக இருக்கும்படி ஒட்டப்படும். ஆனால் மதிற்சுவர் மேலே எழும்ப எழும்ப கற்களை ஒன்றோடொன்று இணைக்க சுண்ணாம்புக் கலவையைப் பயன்படுத்துவதில்லை. கற்கள் ஒரே விதமான அளவில் வெட்டப்பட்டுக் கச்சிதமாக அடுக்கப்படும். அதனால் ஒன்றின் பளுவில் மற்றொன்றும் அதன் பளுவில் மற்றொன்றும் ஒன்றையொன்று தாங்கிப் பிடித்துக்கொள்ளும். இவ்வாறு அடுக்கி வைக்கப்படும் கற்களைத் தள்ளிவிடவோ, நகர்த்திவிடவோ முடியாது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னர் காற்றிலுள்ள தூசுகள் இரண்டு கற்களுக்கும் இடையிலுள்ள சந்தில் ஒட்டிக் கொள்ளும். மழை பெய்யும்போது கற்களின் இடையில் ஈரம் படியும். அப்போது அந்த தூசு இறுகும். இறுகிய தூசு வெயிலில் உருகும். அதனால் அது மேலும் கெட்டியாகும். கற்களின் மீது தூசு படிந்தும் நீர்பட்டும், வெயில்பட்டும் அதுவே புதுப்புதுக் கலவையாகி இறுகும். அதைப் பிரிப்பது கடினமாகும். ஆரம்ப காலகட்டத்தில் கோட்டைகள் அனைத்தும் மண் கோட்டைகளாகவே இருந்தன.

> **“அரண்மனை, மனைநூல் வல்லவரால் பாராட்டப்படும் நல்ல இடத்தில் மதில், அகழி, வாயில் ஆகியவற்றுடன் பல நிலைகளை உடையதாகவும் அரண்மனையின் நடுவில் மன்னன் வசிக்கும் இடமும் சுவருக்குள் மறைவான போக்குவரத்து வழிகளை உடைய மயங்கியல் இல்லத்தை அமைத்து, அதன் நடுவில் மன்னனுக்கு இருப்பிடம் அமைக்கலாம் எனவும் இந்த**

**அரண்மனையின் வாயிலில் தெய்வர் உருவம் வரையப்பட்ட கதவுகளை உடையதாகவும், பல பொறிகளை உடையதாகவும் அரண்மனையை உருவாக்க வேண்டும்''**[29]

என அர்த்தசாஸ்திர நூலில் குறிப்பிட்டுள்ளார். கௌடில்யர் குறிப்பிட்ட வழிமுறைகளின் படியே அக்காலத்தில் பெரும்பாலான அரண்மனைகள் வடிவமைக்கப்பட்டன.

## நாள் பார்த்தல்

நல்ல நாளைத் தேர்ந்தெடுத்துச் செயலைத் தொடங்கினால்தான் செயல் செவ்வனே நடைபெறும் என்பர். அரண்மனை கட்டுவதற்கு வானநூல் சிற்பநூல் ஆகியவற்றில் கூறியுள்ள முறைப்படி மன்னருக்குப் பொருத்தமான நாளைத் தேர்ந்தெடுத்தனர். நாள் கோள்களின் நிலை பார்த்து நல்ல வேளையிலே கட்டடம் கட்டத் தொடங்கியுள்ளனர். அனைத்துத் திசைகளிலும் கதிரவன் தன் கதிர்களைப் பரப்பி ஒளி வீசிக் கொண்டிருந்தது. அத்தகைய கதிரவனின் கதிர்களின் நிழல் வடக்கிலும் தெற்கிலும் சாயாமல் இருக்கின்ற சித்திரை மாதம் முதல் பத்து நாட்களும் தவிர நடுவில் உள்ள பத்து நாட்களில் ஏதாவது ஒரு நாளில் பகல் பொழுதில் பதினைந்தாம் நாளிகையில் வடக்கிலும் தெற்கிலுமாக இரண்டு இடங்களில் இரு கோல்கள் நடப்பட்டு அவற்றின் இடையே இடைப்பட்ட குச்சிகளின் கிழக்கும் மேற்குமாக ஞாயிற்றின் கதிர்பட்டு உண்டாகும் நிழல் ஒரு பக்கத்தைச் சாராமல் நேர் ஒழுங்காக செங்குத்தாக இருக்கும் அப்பொழுது அபிசித்து முகூர்த்தமென்று கூறுவர். அந்த முகூர்த்தமானது எல்லா குற்றங்களையும் போக்குமென்பது சோதிட நூலார் கொள்கையாதலாலும் அம்முகூர்த்தத்தில் அரசனுடைய பயன்பாட்டிற்குத் தக்கவாறு திட்டமிட்டு மிகப்பெரிய அளவில் மனை வகுத்தனர். இதனை,

**“…………………… மாதிரம்**

**விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்**

**இருகோல் குறிநிலை வழுக்காது குடக்குஏர்பு**

**ஒருதிறம் சாரா அரைநாள் அமயத்து**

**நூலறி புலவர் நுண்ணதின் கயிறுஇட்டு**

**தோம் கொண்டு தெய்வம் நோக்கி**

**பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து'' (நெடுநல். 72–78)**

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

## நூலறி புலவன்

ஒரு கட்டிடத்தைக் கட்டுவதற்கு முன் கட்டிடத்தின் அமைப்பை முடிவு செய்து அதற்கான வரைபடத்தைத் தயாரிக்க வேண்டும். பண்டைக் காலத்திலும் கட்டிடத்தைக் கட்டுபவர் இவ்வழக்கத்தைக் கொண்டிருந்தனர். இத்துறையில் சேர்ந்தவர் கணிதத்திலும் வல்லவராயிருத்தல் அவசியமாகிறது. எனவே, ''நூலறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு'' (நெடுநல். 76) கட்டிடம் கட்டியதாக நெடுநல்வாடை கூறுகிறது.

கயிறு என்பது ஒரு அளவு கோலாக இருந்திருக்க வேண்டும்.

> **''கயிறு என்னும் பெயரில் ஓர் அளவும் தமிழகத்துக் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. 16 சாண் கோல் போல எட்டு கோல் கொண்டது ஒரு கயிறு. மாளிகை கட்டுவதற்கான நிலத்தைத் தேர்ந்தெடுக்கும் போது இந்த அளவுகள் புழக்கத்தில் இருந்திருக்கும்''[30]**

என்பதால் கட்டிடம் கட்டுவதற்கு முன்பே அளவுகளை முடிவு செய்தமை புலனாகிறது.

மன்னனுக்குக் கட்டப்படும் மனையாகையால் மண்ணுக்கு ஏற்றாற் போன்று வாயில்கள் மண்டபங்கள் இவற்றை ஒரு சேர அவ்விடங்களையெல்லாம் மதிலுக்குள் உள்ளடக்கியதாக அமைத்தனர். இதனை,

> **''பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து**
>
> **ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பின்'' (நெடுநல். 78–79)**

என்னும் பாடலடியால் அறியலாம்.

## திருமுளைச்சாத்துச் செய்தல்

நல்ல நாளில் குறித்த நேரத்தில் கணிக்கப்பட்ட இடத்தில் தெய்வத்தை வணங்கி திருமுளைச் சார்த்துச் செய்வர். அரண்மனையை அமைப்பதற்குச் சிற்ப நூல் அறிந்த தச்சர்

கூறியதாக நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித்துக் கொண்டு திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் குறைவறப் பார்த்து அரசர் வாழ்வதற்கேற்ப மனையை வகுத்தனர் என்பதனை,

**“தேஎம் கொண்டு தெய்வம் நோக்கு” (நெடுநல். 77)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. மனைக்கு எல்லைகளைக் குறித்துக் கொண்டு எங்கெங்கு எதுஎது அமைய வேண்டுமோ அதற்கேற்றாற் போன்று குறித்து அத்திசைக்குரிய தெய்வங்களை வணங்கியமையைக் காணமுடிகிறது.

## கோபுர வாயில்

கட்டடங்கள் எல்லாவற்றையும் தம்முள் கொண்டதாக ஒரு சேர வளைத்து, உயர்ந்த நிலைகளைக் கொண்ட மதிலின் கோடிவாயில் உருவாக்கப்பட்டது. நெடிய வாயிலில் தொடரால் உள்ள தச்சனால் செய்யப்பட்ட இரட்டைக் கதவுகளை நிலையோடு சேர்த்துப் பொருத்துவதற்குப் பருத்த இரும்பு அணிகளையும் பட்டங்களையும் பயன்படுத்தினர். கதவுகள் இடைவெளி சிறிதும் இல்லாமல் மாமரங்களை நன்கு பொருந்துமாறு சேர்த்து அமைக்கப்பட்டது. சாதிலிங்க குழம்பினால் செவ்வண்ணம் பூசப் பெற்றது.

இருபத்தேழு விண்மீன்களின் உத்தரம் என்ற விண்மீனின் பெயரைக் கொண்ட கற்பலகை வாயிலின் இருகதவுகள் அமைந்துள்ள நிலைக்கு மேல் செருக்கப்பட்டிருக்கும். இப்பலகையில் குவளையின் புதிய மலர்களை உயர்த்தித் தங்கள் துதிக்கையால் உந்திய பிடிகளின் உருவங்களும் அவற்றின் நடுவில் திருமகள் உருவமும் பொறிக்கப்பட்டிருக்கும். அவ்வாயில் நிலையானது நெய் பூசப்பட்டு வெண் சிறுகடுகினால் தூவப்பெற்ற அழகு உடையதாகக் காணப்படும். கதவுகளை மூடுவதற்கும் திறப்பதற்கும் அழகிய கைப்பிடிகளை அமைத்தனர். அக்கைப்பிடிகளை மலர்ந்த குவளைமலர் போன்ற வடிவில் அமைத்தனர். இதனை,

**“பருஇரும்பு பிணித்து செல்வதற்கு உரீஇ**

**வணைமான் கதவம் பொருத்தி இணைமாண்டு**

**நாளொடு பெயரிய கோள்அமை விழுமரத்து**

**போது அவிழ் குவளைப் புதுப்பிடி கால் அமைத்து**

**தாழொடு குயின்ற போர் அமைபுணர்ப்பின்**

**கைவல் கம்மியன் முடுக்கலின் புரைதீர்ந்து**

**ஐயவி அப்பிய நெய்அணி நெடுநிலை**

**வென்றுஎழு கொடியொடு வேழும் சென்றுபுக**

**குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்'' (நெடுநல். 80–88)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. அரண்மனையின் வாயிற் கதவு கலை சார்ந்த அமைப்பிற்குச் சிறந்த சான்றாகும். அரசனின் வெற்றியைக் குறிக்கும் வண்ணம் யானைகள் அரண்மனைக்குள் நுழைவதற்கு ஏற்றவாறு கோபுர வாயில் அகலமாகவும் உயரமாகவும் அமைந்திருக்க இவ்வாயில் மலையின் நடுவில் வெளியிடம் உண்டாகுமாறு திறந்தது போன்ற தோற்றத்தையுடையதாகும்.

நல்லியக்கோடனுடைய அரண்மனையின் வாயில் கதவுகள் பொருநர்க்கும், அறிவுடையோர்க்கும் அரிய மறைகளைக் கற்றுணர்ந்த நாவினையுடைய அந்தணர்க்கும் அடையாது, திறந்தே இருக்கும். ஆனால் பகைவர்கள் உள்ளே புகுதற்கரியதாக அவனுடைய வாயில் அமைந்திருந்தது. அரண்மனை வாயில் கடவுள் வீற்றிருக்கும் மேருமலை கண்ணைத் திறந்து பார்த்ததைப் போன்று பெரிய வாயிலை உடையதாக இருந்தது. இதனை,

**''பொருநர்க்கு ஆயினும் புலவர்க்கு ஆயினும்**

**அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்**

**கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன**

**அடையா வாயில் அவள் அருங்கடைகுறுகி'' (சிறுபாண். 203–206)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

நிலைகள் கதவுகள் போன்றவற்றிற்கு வண்ணம் பூசுவது போன்று மரத்தாலாகிய பொருட்களுக்கு நிறமூட்டுவதற்காகச் செவ்வரக்கினைப் பூசியதை,

**''உள்அரக்கு எரிந்த வருக்குறு போர்வைக்**

**கருந்தொழில் விளைஞர் கைவினை முற்றி'' (சிறுபாண். 255:257)**

என்ற பாடல் அடியால் உணரமுடிகின்றது.

அரண்மனையின் கோபுர வாயிலானது களிற்றின் பிடரியில் வைத்து உயர்த்திய கொடியோடு உள்ளே செல்லத்தக்க உயரத்தை உடையதாக அமைத்தனர் என்பதனை,

**''வென்றுஎழு கொடியோடு வேழம் சென்றுபுகழ்**

**குன்றுகுயின் நன்ன ஓங்குநிலை வாயில்'' (நெடுநல். 87–88)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியலாம். வெற்றி பெற்ற அரசனது வாயில் கதவுகளில் தோல்வியுற்ற மன்னர்களின் பற்கள் பதிக்கப்பட்டிருந்ததை,

**''கல்லா எழினி பல்லெருந் தழுத்திய**

**வண்கட் கதவின் வெண்மணி வாயில்'' (அகம். 211:3–4)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

அரண்மனை வாயில் கதவிலுள்ள விளக்குகளுக்கு நெய்யூற்றி எரிப்பதால் திண்மையான கதவுகள் கருமையாகக் காணப்பெற்றன. மேகங்கள் தவழும்மலை போன்று உயர்ந்த மாடங்கள் இருபக்கத்தும் இருந்தன. அதன் இடையில் வையை ஆறு போன்று மக்கள் பலரும் போய்வந்து கொண்டிருக்கும் வாயில் இருந்ததனை,

**''தொல்வலி நினஇய அணங்குடை நெடுநிலை**

**நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்**

**மழையோடு மலையின் சிவந்த மாடமொடு**

**வையை அன்ன வழக்குடை வாயில்'' (மதுரைக். 353–355)**

என்ற பாடலின் மூலம் அறியலாம். நிலையின்கண் தெய்வம் இருக்கும் என்பதால் நிலைக்கு ஐயவியும் நெய்யும் அணியும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர்.

நன்னனின் அரண்மனைக்கூத்தர்கள் செல்லும் வழியில் படைத் தலைவர்களுடன், யானைத் திரள்களும் அரண்களாக உள்ளன. அவ்வரண்கள் தம்மிடம் போர்புரிய வரும் அரசர்களைக் கெடுக்கும் தன்மையுடையதாய் வழிச்செல்வோர் இடையூறின்றிச் செல்ல குறுக்கே படர்ந்துள்ள கொம்புகள் துளைத்துச் செல்லும் இயல்பு கொண்டது. தன்னுடன் மனம் பொருந்தாத பகைவரின் கரியதலை வெட்டுண்டு விழ அதை பருந்துகள் உண்ண அலையும் போர்க்களத்தில் வெற்றி பெறும் மறவரின் அரண்மனை வாயிலில் பகைவரை தவிர பிறர் அஞ்சாமல் உள்ளே போகலாம். அவ்வாறு சென்றால் அரண்மனை வாயிலில் அவன் நாட்டு மக்கள் கொண்டு வந்து குவிக்கும் பொருட்கள் பல இருக்கும். அவற்றை நீங்கள் வழிநடை வருத்தம் நீங்க வேடிக்கைப் பார்க்கலாம். அவற்றோடு விளையாடித் திளைக்கலாம் என்பதனை,

''எரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத்

தொழுதி போக வலிந்து அகப்பட்ட

மடநடை ஆமான், கயமுனிக் குழவி

ஊமை எண்கின் குடாஅடிக் குருளை,

மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்

வரைவாழ் வருடை வன்தலை மாத்தகர்

அரவுக்குறும்பு எறித்த சிறுகண் தீர்வை

அளைச்செறி உழுவை கோள்உற வெறுத்த

மடக்கண் மரையான் பெருஞ்செவிக் குழவி

அரக்குவிரித் தன்ன செந்நில மருங்கின்

பரற்றவழ் உடும்பின் கொடுந்தாள் ஏற்றை

வரைப்பொலிந்து இயலும் மடக்கண் மஞ்ஞை

கானக் கோழிக் கவர்குரல் சேவல்

கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்

இடிக்கலப் பன்ன நறுவடி மாவின்

வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம்

தூவற் கலித்த இவர்நனை வளர்கொடி

காஅய்க் கொண்ட நுகம்மருள் நூறை

பரூஉப் பளிங்கு உதிர்த்த பலஉறு திருமணி

குரூஉப்புலி பொருத புண்கூர் யானை

முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்

வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்

நாகம், திலகம், நறுங்காழ் ஆரம்

கருங்கொடி மிளகின் காய்த்துணர் பசுங்கறி

திருந்தமை விளைந்த தேக்கட் தேறல்

கான்நிலை எருமைக் கழைபெய் தீம்தயிர்

நீலநிற ஓரி பாய்ந்தென நெடுவரை

நேமியின் செல்லும் நெய்க்கண் இறாஅல்

உடம்புணர்பு தழீஇய ஆசினி அனைத்தும்

குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி

கடல்மண்டு அழுவத்துக் கயவாய் கடுப்ப

நோனாச் செருவின் நெடுங்கடை துவன்றி'' (மலைபடு. 498–529)

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

ஆமான், யானை, கரடி, வருடை, தகர், அரவு, கீரி, புலி, புரையான், உடும்பு, மஞ்ஞை, கோழி ஆகிய விலங்களும், பறவைகளும், பலா, மா, ஆசிணி, சந்தனம் ஆகிய மரங்களும், நறைக்கொடி, நூறை, கருப்பூரம் ஆகிய மணப்பொருள்களும், மாணிக்கம் தந்தம் ஆகிய மலைப்படு பொருள்களும் காந்தள், புன்னை, திலகம் ஆகிய மலர்களும், மிளகு,தேன், தயிர், கள்ளின் தெளிவு போன்ற பண்டங்களும், குடகு மலையில் பிறந்த குளிர்ந்த பெரிய காவிரி

ஆறு சென்று சேரும் புகார் முகத்தைப் போல நன்னனின் தலைவாசலில் ஒருங்கே திரண்டு உள்ளன என்பதைக் கூத்தராற்றுப்படை வழியாக அறியலாம்.

## அந்தப்புரம்

நாட்டினை ஆளுவதற்கு உரிய அடுத்த தலைமுறையின் பிறப்பிற்குக் காரணமாக விளங்கும் அரசமோதேவியின் அந்தப்புரமானது கருத்தங்கும் இல்லம் என்று போற்றப்படுவதாகும். அரண்மனைப் பகுதிகளில், இரவுப்பொழுதில் ஒளி வேண்டி, யவன நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட பாவை விளக்குகள் ஏற்றப்பெறும். அவற்றில் நெய் ஊற்றித் தூண்டிவிடும் பணியைக் குற்றேவல் மகளிர் புரிவர். அரசமாதேவி தங்கியிருக்கும். அந்தப் புரத்தில் அரசனைத் தவிர, பிற ஆடவர் யாவரும் புக இயலாது. அந்தப் புரப்பகுதிகள், மலைகளைக் காண்பது போன்ற உயர்ந்த தோற்றம் உடையவை. மலைகளைச் சார்ந்து வானவில் கிடப்பது போலப் பலநிறக் கொடிகள், அம்மாடங்களில் தொங்கி அசையும். அந்தப் புரத்தின் பல இடங்கள் வெள்ளியைப் போன்ற சாந்தினால் பூசப்பட்டவை. அங்கிருந்த தூண்கள் நீலமணியைக் காண்பது போன்ற கரிய, திரண்ட, வளமை வாய்ந்தவை. செம்பினால் உருவாக்கப்பட்டது போன்ற தொழில் திறம் விளங்கும்படி அமைக்கப்பட்ட நீண்ட சுவர்களையுடையவை. அவற்றில் பலநிறப் பூக்களோடு கூடிய வல்லிக்கொடி, அழகுபெறச் சுற்றிலும் ஓவியமாகத் தீட்டப்பட்டிருக்கும். அது காண்பதற்கு இனிமையாக விளங்கும். இதனை,

**“யவனர் இயற்றிய வினைமாண் பாவை**

**கைஏந்தும் ஐஅகல் நிறைய நெய்சொரிந்து,**

**பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிர்எரி**

**அறுஅறு காலைதோறு அமைவரப் பண்ணிப்**

**பல்வேறு பள்ளிதொறும் பாயிருள் நீங்கப்**

**பீடுகெழு சிறப்பின் பெருந்தகை அல்லது**

**ஆடவர் குறுகா அருங்கடி வரைப்பின்**

**வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு**

**வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்**

**வெள்ளி யன்ன விளங்கும் சுதைஉரீஇ,**

**மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்ச்**

**செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்**

**கருவொடு பெயரிய காண்புஇன் நல்இல்'' (நெடுநல். 101–114)**

என்ற பாடடிகளின் மூலம் அறியலாம்.

அரண்மனையில் மிகுதியான மாடங்கள் இருந்தன. பாதுகாப்பு பொறுப்பேற்ற வீரர்கள் கோட்டையில் மிக விழிப்பாக யாமந்தோறும் காவலிருந்து பிறகு துயில் கொள்ளும் மாடமும், பகைவர் பணிந்து திறை கொடுக்க அது கொட்டி கிடக்கும் மாடமும், மகளிர் தம் அணிகலங்களை இட்டு வைக்கும் மாடமும் என பல்வேறு மாடங்கள் இருந்ததை,

**''கவ்வையங் கருவி சூழ்ந்து கண்படுக்கும் மாடமும்**

**தெவ்வர் தந்த நீள்நிதி சேர்ந்த செம்பொன் மாடமும்**

**மவ்வலங் குழலினார் மணிக்கலம் பெண்மாடமும்''[31]**

என்ற பாடலின் மூலம் அறியலாம். மாடங்கள் மணிகளைவிட அதிக பளபளப்புத் தன்மை கொண்டதாக அமைக்கப்பட்டன. இதன்மூலம் பழந்தமிழர்கள் தேர்ந்தெடுத்த கற்களைப் பளபளப்பாக்கிக் கட்டுமானத்திற்குப் பயன்படுத்தும் தொழிலில் கைவரப் பெற்றிருந்தனர் என்பதை அறியலாம்.

## மாளிகையின் உள் அமைப்பு

மேகங்கள் படிகின்ற அளவு உயர்ந்த பெரிய மாளிகையானது நெருக்கமாக அமைக்கப்பட்ட பல கட்டுகளும் பெரு வாயில்களும் சிறுவாயில்களும் பெரிய இடைக்கழிகளும் உடையனவாக அமைக்கப்பட்டிருந்தன என்பதனை,

**''குறுந்தொடை நெடும்படிக்கால்**

**கொடுஞ்திண்ணைப் பல்தகைப்பின்**

**புழைவாயில் போகு இடைகழி**

**மழைதோயும் உயர்மாடத்துச்'' (பட்டினப். 142–145)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

## வேயா மாடம்

மாடங்களின் மேல் தளத்தினைத் திறந்த வெளியாகவிட்டனர். இதனை வேயா மாடம் அல்லது நிலா முற்றம் என்றழைத்தனர். வேயா மாடங்கள் இரவில் நிலவின் அழகினைத் துய்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதாகும். இதனை,

**''நிரைநிலை மாடத்து அரமியம் தோறும்'' (மதுரைக். 451)**

**''நிலவுப் பயன் கொள்ளும் நெடுநிலா முற்றம்'' (நெடுநல். 95)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

விண்ணைத் தீண்டும்படி இருந்த வேயாமாடம் பற்றிய செய்தியினை,

**''விண்பொர நிவந்த வேயா மாடத்து'' (பெரும். 348)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

## நீர்ப்பந்தல்

மலைக்காலங்களில் கட்டிடங்களின் மேல் விழுகின்ற நீர்த் தங்காமல் கீழே விழுவதற்கு ஏற்றவாறு குழாய் வடிவில் ஒரு அமைப்பு செய்யப்படும். இதற்கு பந்தல் என்று பெயர். கட்டிடங்களின் மேல் நீர்த் தங்கினால் அதன் உறுதித் தன்மையை இழந்துவிடும். எனவே, இப்பந்தல்களை அரண்மனையில் அமைத்திருந்தனர். இதனை,

**''நிலவுப்பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்துக்**

**கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறையக்**

**கவிழ்ந்துவீழ் அருவிப் பாடுவிறந்து அயல'' (நெடுநல். 95–97)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. நீர்ப்பந்தலானது கலைநயத்துடன் மகரவாய் போன்று பகுக்கப்பட்ட வாயையுடையதாய் அமைக்கப்பட்டிருந்தது.

கிம்புரிப் பகுவாய் அம்பணம் என்பது அளவு கருவியுமாகலின் மழைநீரை அளத்தற் பொருட்டு வைத்த கருவி என்று கூறுவர் பொ.வே.மோமசுந்தரனார். இதனால் பெய்யும் மழையின் அளவைக் காணும் கருவி இருந்ததை அறியமுடிகிறது.

## வேனிற்பள்ளி

சங்கத் தமிழர்கள் பருவ நிலைகளுக்கு ஏற்றவாறு மாடங்களைக் கட்டினர். மாடத்தின் மேல் பகுதியில் காற்று தாராளமாக வருவதற்கேற்ற வகையில் வடிவமைத்தனர். அம்மாடத்தில் வேனிற்காலங்களில் வசித்தனர்.

வேனிற்காலத்தில் தென்திசையிலிருந்து தென்றல் காற்று வீசும். எனவே காற்று நுழைவதற்கு ஏதுவாக நேர்வாய்க் கட்டளையாக நேருக்கு நேராகச் சாளரங்களை அமைத்துக் கொண்டனர். இதனை,

**‘‘வானுற நிவந்த மேனிலை மருங்கில்**

**வேனிற் பள்ளி தென்வளி தரூஉம்**

**நேர்வாய்க் கட்டளை திரியாது திண்ணிலை’’ (நெடுநல். 60–62)**

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

## கூதிர்ப் பள்ளி

கூதிர் காலத்தில் மாடங்களின்மேல் கடுமையான குளிர்காற்று வீசும். எனவே, மேனிலையில் இருக்கும் வேனிற்பள்ளியை விடுத்து, கூதிர்க் காலத்திற்கு ஏற்ற கூதிர்ப்பள்ளியில் வாழ்ந்தனர். கூதிர்பள்ளியில் நேர்வாய் குளிர்காற்று நுழையாமல் இருக்க கூதிர்ப்பள்ளியில் குறுங்கண்களையுடைய சாளரங்களைக் கட்டினர். குளிரின் மிகுதியால் குறுகண் வழியாய் வீசும் கடுங்காற்றுக்கு ஆற்றாமல் சாளரங்களையும் அடைத்துக்கொண்டு மக்கள் முடங்கிக் கிடந்தமையை,

**‘‘வேனிற் பள்ளி மேவாது கழிந்து**

**கூதிர்ப் பள்ளி குறுங்கண் அடைத்து’’[32]**

என்ற பாடலின்மூலம் அறியமுடிகின்றது.

### மதலைப்பள்ளி

பெரிய கட்டிடங்களில் தெருவோரத்து நெடுஞ்சுவரில் தனியாக மாடம் நீட்டிக் கொண்டிருக்கும். தூண்களில் தலைப்பில் அமைந்த பொதிகைக்கு மேலே, அதற்கு மேல் வரும் உத்திரங்களைத் தாங்குவதற்காக ஒரு பகுதியை நீட்டித்துக் கட்டினர் என்பதனை,

> **‘‘மனையுறை புறவின் செங்கால் சேவல்**
>
> **இன்புறு பெடையொடு மன்னுதேர்ந்து உண்ணாது**
>
> **இரவும் பகலும் மயங்கிக் கையற்று**
>
> **மதலைப் பள்ளி மாறுவன இருப்ப’’ (நெடுநல். 45–49)**

என்ற அடிகளால் மதலைப் பள்ளி அமைத்துக் கட்டும் முறை இருந்ததையும் அது மனையுறை புறவுகள் தங்குவதற்குப் பயன்பட்டதையும் அறியலாம்.

### நாளவை

பழந்தமிழ் மன்னர்கள் அலங்கரித்த அவைகள் ஓலக்கம், நாளோலக்கம், பெருநாளவை எனப்பல பெயர்களால் வழங்கப் பெறுகின்றன.

இவ்வவையில் அரசர்கள், அமைச்சர்கள், ஐம்பெருங்குழு, எண்பேராயத்தில் சுட்டப் பெற்றுள்ள உறுப்பினர்கள் பிற நாட்டுத் தூதுவர்கள், நாட்டின் முக்கிய பிரதிநிதிகள் எனப் பலர் சூழப்பட்டிருந்தனர். இங்கே மன்னன் தன் குடிமக்களின் குறைகளைக் கேட்டறிந்து முறை செய்தும், தம்மை நாடிய புலவர்க்கும், கலைஞர்க்கும் இரவலர்க்கும் பரிசினை நல்கியும் சிறப்பித்துள்ளான். சங்க இலக்கியங்கள் இவ்வவையினை ‘நான்மகிழ் இருக்கை’, ‘நாளவை’, ‘பொற்பு விளங்கு புகழவை’ எனச் சுட்டுகின்றன. இவ்வவைகளில் பரிசில் இனம் மட்டும் ஆணையின்றி நுழைந்ததை,

> **‘‘நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்’’ (பொரு. 66)**

என்றும்,

> **‘‘பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை’’ (பதிற்றுப். 38:9)**

என்றும்,

"செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்

எம்அன வாழ்க்கை இரவலர்க்கு எளிதே'' (புறம். 54:4–3)

என்றும் வருகின்ற பாடல் அடிகளின் வழி அறியலாம். மன்னர்கள் புலவர்களின் கவிதைகள் மற்றும் நாட்டின் நிகழ்வுகளைப் பெரிய அவையின்கண் வீற்றிருந்து கேட்டனர் என்பதனை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

- தனிமனிதனாக வாழ்ந்தவன் குழுவாக வாழத் தலைப்பட்டபோது தலைமைப் பண்பு தோன்றியது. அப்போது அரசு என்னும் விதை விதைக்கப்பட்டது. அரசர்கள் தங்களின் அரசாட்சி முறை, நடுநிலைமை, புகழ், கொடை, புலவர்கள் போற்றும் முறைமை, விருந்தோம்பல், நட்பு, போர்த்திறம் ஆகியவற்றால் மக்கள் மனத்தால் நீங்கா இடம் பெற்று வாழ்ந்தனர் என்பதை எடுத்தியம்புகிறது.
- அரண் என்பது பகைவர்கள் எளிதில் கைப்பற்ற முடியாத வகையில் உயரமானதாகவும், அகலமானதாகவும் பல வீரர்களால் காவல் செய்யப்பட்டதாகவும், பல பொறிகளை உடையதாகவும் முற்றுகையின் போது சமாளிக்கும் வகையில் அனைத்துப் பொருள்களையும் பெற்றதாகவும் இருத்தல் வேண்டும் என்பதை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.
- இலக்கியங்கள் காட்டரண், நீரரண், நிலவரண், மதிலரண், மலையரண் என்ற ஐந்து வகையான அரண்களைப் பதிவு செய்துள்ளன. இவ்வரண்களைக் கடந்த பின்பே கோட்டைக்குள் நுழைய வேண்டுமென்பதால் மிகுந்த பாதுகாப்புடன் இவ்வரண்களை வடிவமைத்திருந்தனர்.
- சங்க காலத்தில் கட்டிடக்கலை பற்றிய நூல்கள் இருந்திருக்கின்றன. அந்நூலைப் படித்த சிறந்த கட்டிடக் கலை வல்லுநர்கள் நுட்பமாக நூல் பிடித்துப் பார்த்து திசைகளைத் தெரிந்து திசைக்குரிய தெய்வங்களையும் கருத்தில் கொண்டு மன்னனுக்குரிய மனை வகுத்தனர் என்ற செய்தியின் வழி மனை வகுப்பதற்குரிய நெறிமுறைகளை உருவாக்கி உயர்ந்த நிலையில் இருந்ததனைக் காணமுடிகிறது.
- அரண்மனையின் கதவுகள் பருத்த இரும்பால் இணைக்கப்பட்டதையும் இடைவெளி இன்றி நிலையொடு பொருத்தப்பட்டதையும் அறியும்பொழுது அக்கால தச்சனின் தொழில் வல்லமையை உணரமுடிகின்றது.

- அந்தப்புரத்துச் சுவரில் வெள்ளி போன்ற வண்ணம் பூசப்பட்டிருந்ததையும், பல வகைப்பூக்களும் ஒரு கொடியைச் சுற்றி இருப்பது போன்ற காட்சி தீட்டப்பட்டிருந்ததையும் அறியமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்


1. சு. வித்யானந்தன், தமிழ் சால்பு, ப. 17
2. சி. மௌனகுரு, பண்டைத் தமிழர் வரலாறும் இலக்கியமும், ப. 6
3. இராசமாணிக்கனார், தமிழக ஆட்சி, ப. 17
4. கே. முத்தையா, தமிழ் இலக்கியம் ஒரு புதிய பார்வை, ப. 86
5. அரங்க. இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப. 18
6. தொல். பொருள். 63:4–5
7. மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், பழந்தமிழாட்சி, ப. 22
8. க.ப. அறவாணன், அற்றை நாட்காலும் வீரமும், உ. 375
9. கு. பாண்டுரங்கன், பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும், ப. 1
10. தொல். பொருள். 1011
11. குறள். 740
12. சிங்காரவேலு (ப.ஆ.), அபிதான சிந்தாமணி, ப. 81
13. கலைக்களஞ்சியம் தொகுதி–1, ப. 178
14. கி. வீரமணி, அசல் மனுதர்ம சாஸ்திரம், ப. 159
15. குறள். 743
16. மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், பழந்தமிழாட்சி, ப. 63
17. மேலது
18. குறள். 737
19. ஆனந்த நாச்சியாரம்மா (உரை), அர்த்த சாஸ்திரம், பக். 118–119
20. அ. மாணிக்கம், அர்த்த சாஸ்திரம் பொருள் நூல், ப. 778
21. மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், பழந்தமிழாட்சி, ப. 64
22. அ. மாணிக்கம், அர்த்த சாஸ்திரம் பொருள் நூல், ப. 109
23. மயன், பழந்தமிழ்ச்சிற்பி, ஐந்திரம், 728:1–2
24. புறப்பொருள் வெண்பாமாலை, பா. 1222
25. சிலம்பு, அடைக்கலக்காதை, 207–217
26. புறப்பொருள் வெண்பாமாலை, 86:2

27. மயன், பழந்தமிழ்ச்சிற்பி, ஐந்திரம், 728:33–36

28. நா. வானமாமலை, ஐவர் ராசாக்கள் கதை, 2535–2541

29. அ. மாணிக்கம், அர்த்த சாஸ்திரம் பொருள் நூல், ப. 99

30. சி. பார்வதி, நெடுநல்வாடையும் கட்டிடக்கலையும், சங்க இலக்கியம் பன்முகப்பார்வை, ப. 33

31. சீவக சிந்தாமணி, நாமகள் இலம்பகம், 153–154

32. சிலம்பு, அந்திமாலைச் சிறப்புச் செய்காதை, 60–61

# இயல் – 5

# சங்ககாலக் கோயில்கள்

## முன்னுரை

பண்டைய மக்கள் இயற்கையின் சீற்றத்தைக் கண்டு அஞ்சி தங்களைக் காத்துக் கொள்ள முதலில் இயற்கையை வழிபட்டனர். காலப்போக்கில் தெய்வ நம்பிக்கை காரணமாக நிலங்களின் அடிப்படையில் தெய்வங்களை வணங்கினர். இறைவனின் மீது கொண்டிருந்த பயம் தாங்கள் எடுத்துக் கொண்ட காரியம் முடிய வேண்டும் என்ற எண்ணம் ஆகியன பக்திக்குக் காரணிகளாக அமைந்தன. பழந்தமிழர்கள் அச்சம் தரும் இயற்கைப் பொருட்களை வணங்கியதையும், ஐவகை நிலத்திற்கேற்பத் தெய்வங்களை வணங்கியதையும் நடுகல் வழிபாட்டு முறை பற்றியும், இவ்வழிபாடே பின்னர் சமய வளர்ச்சிக்கும் கோயில் உருவாகவும் துணை நின்றது என்பதனையும் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## இயற்கை வழிபாடு

ஆதிமனிதன் இயற்கையைச் சார்ந்து வாழ்ந்தான். காடுகளில் அலைந்து திரிந்த சூழலில் இடி, மின்னல், காற்று, மழை போன்ற இயற்கைச் சீற்றங்கள் அவனுக்கு ஒரு புதிராக அமைந்ததோடு அச்சத்தையும் ஏற்படுத்தின. இவ்வச்சம் இயற்கை உயிர்ப்புத்தன்மை உடையது. ஆற்றல் வாய்ந்தது எனக் கருதத் தூண்டிற்று. இயற்கையை வணங்குவதன் வழி அதன் சீற்றத்தைக் கட்டுப்படுத்துவதோடு அச்சத்தைப் போக்குவதற்கும் வழி வகுக்கும் என்று ஆதிமனிதன் கருதினான். இக்கருத்துருவமே இயற்கையை வணங்குவதற்குக் காரணமாக அமைந்தது.

மனிதன் தோன்றிய காலம் முதல் இயற்கை அவனது வாழ்வியலோடு இயைந்துள்ளமையாலும், கடவுளின் அடையாளக் குறியீடுகளாய் விளங்குகின்றமையாலும் மனித சமூகத்தில் இயற்கையை வணங்குதல் முதன்மை பெறுகிறது. இதை,

"மனித இனத்தவரிடையே சமயம் பற்றிய நம்பிக்கை முதன்முதலில் ஏற்பட்டிருக்குமாயின் அது இயற்கை பொருட்களின் ஆற்றல் நம்பிக்கை கொண்டு அப்பொருள்களை வழிப்பட்டதன் மூலம் ஏற்பட்டிருக்கும்"[1]

என்கிறார் மாக்ஸ்முல்லர். இயற்கையின் இன்றியமையாத கூறுகளான சூரியன், சந்திரன், நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ, மலை போன்றவற்றை வணங்குதல் இயற்கை வழிபாடாகும். தொல்காப்பியர் ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய இயற்கைக் கூறுகளைப் பழந்தமிழர் வழிப்பட்டமையினை,

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற

வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்

கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"[2]

எனப் பாடாண் திணையில் சுட்டுகிறார்.

## சூரியன்

மனிதன் இரவுப்பொழுதில் இருளினைக் கண்டு அச்சமடைந்தான். அவ்வச்சத்தைப் போக்குவதற்கு வழியின்றித் தவித்த சூழலில் விடியற்பொழுதில் இருளைப் போக்கும் சூரியனைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்தான். இம்மகிழ்ச்சியின் வெளிப்பாடாகச் சூரியனை வணங்கத் தொடங்கினான். இருள்போக்கும் தன்மையே சூரியனை வணங்குதலின் முதல்நிலையாக அமைந்தது. இதனை,

"பழங்காலத்தில் நெருப்பு கண்டுபிடிக்கப்படாமையால் மனிதன் இரவு நேரங்களில் கண்தெரியாது குகைக்குள் கிடந்து நச்சு உயிர்கட்கும் விலங்குகட்கும் அஞ்சி வாழ்ந்து இரவெல்லாம் துன்புற்று காலையில் ஞாயிற்றின் ஒளிகண்டு வாழ்த்தினான். சில தண்ணளி நல்கும் சந்திரனையும் பரவசமுற்று மகிழ்ச்சியடைந்தான். இதன் பொருட்டு ஞாயிறும் திங்களும் வணக்கப் பொருள்களாயின"[3]

என இரா.சீனிவாசன் குறிப்பிடுகின்றார். இந்த உலகம் முழுவதிலும் பரவியுள்ள இருளையகற்றி உலக உயிர்கள் செழிக்க ஒளியைக் கொடுக்கும் தன்மையை,

''விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு'' (அகம். 91)

''அகல்இரு விசும்பில் பாயிருள் பருகிப்

பகல் சான்று எழுதரு பல்கதிர் படுதி'' (பெரும். 1–2)

''––––––––––– நள்ளிருள் அலரி

விரிந்த விடியல் வைகினிர் கழிமின்'' (மலைபடு. 195–196)

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது.

இருளையகற்றும் சூரியன் மக்களின் வாழ்க்கை வளர்ச்சிக்கு அடிப்படையானது. சூரியன் தாவர வளர்ச்சிக்கும் அடிப்படையாக அமைவது ஆகையால் இருளை அகற்றும் சூரியன் வழிபாட்டுப் பொருளாயிற்று. உலகிற்கு வெளிச்சம் தரும் சூரியனை தெய்வமாகக் கருதி வழிபட்டனர். ஒவ்வொரு நாளும் கீழ்த்திசையில் கீழ்க்கடலில் தோன்றி வான்வெளியில் இயக்கம் பெற்று மண்ணில் தோன்றிய உயிர்களுக்கெல்லாம் வாழ்க்கையை அளித்து மேற்கடலில் மறையும் தன்மையைப் பெற்றவனே சூரியன். இவன் உருளைத் தேரில் வலம் வரும் தன்மையை,

''சேய்விசும்பு கவர்ந்த செழுங்கதிர் மண்புலம்

மால்வரை மறையாத துறையுள் பின்றே'' (நற். 67)

''பலகதிர் மண்புலம் பகல் செய்து ஆற்றிச்

சேயுயர் பெருவரைச் சென்றவன் மறையா'' (நற். 69:1–2)

''குணக்கடல் கவர்ந்து குருகூக் கதிர் பரப்பிய

பகல்கெழு செல்வன் குடமலை மறையப்

புலம்புவந் திறந்த புன்கண் மாலை'' (நற். 215)

என்னும் அடிகளின் சூரியனின் தோற்றமும் மறைவும் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

## உச்சிக்கிழான் கோட்டம்

ஆதிமனிதன் இயற்கையைக் கண்டு வணங்கத் தொடங்கினான். பின்பு பாறைக்

கற்களில் ஓவியங்கள் வரைந்து வழிபட்ட அவன் அதன் வளர்ச்சியாக இயற்கைப் பொருட்களுக்கென்று தனிக்கோயில் எழுப்பி வழிபட்டான். அவ்வகையில் சூரியனுக்கெனத் தனிக்கோயில்கள் எழுப்பி வழிபடும் வழக்கம் பழங்கால மக்களிடையே நிலவியுள்ளது.

பஞ்சாபிலுள்ள சூரியக் கோயிலைப் பற்றி,

> **‘‘பஞ்சாப்பிலுள்ள மல்ரன் (Malran) என்னும் நகரில் சூரியனுக்கு பழைய கோயில் இருந்தது என அறிகிறோம். ஔரங்கசீப் என்னும் முகமதிய மன்னனின் கட்டளையால் அவ்வாலயத்திலிருந்த தங்கச்சிலை உருக்கிக் கருவூலத்தில் சேர்க்கப்பட்டது’’[4]**

என்று ந.சி.கந்தையா பிள்ளை குறிப்பிடுகிறார். கோனாக்கில் சூரியனுக்கென்று புகழ்பெற்ற தனிக்கோயில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தில் சூரியனுக்குக் கோயில் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை. தற்போது கும்பகோணத்திற்கு அருகில் உள்ள சூரியனார் கோயில் புகழ்பெற்றுத் திகழ்கிறது. முதன்முதலாகச் சிலப்பதிகாரம் சூரியனுக்கென எழுப்பப்பட்ட கோயிலை ‘உச்சிக்கிழான் கோட்டம்’ என்று குறிப்பிடுகிறது. இதனை,

> **‘‘உச்சிக் கிழான்கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்’’[5]**

‘உச்சிக்கிழான்’ என்பதற்கு அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் ‘சூரியன்’ என்றே பொருள் கொள்கின்றனர். உரையாசிரியர்களின் கூற்றின் வாயிலாக ‘உச்சிக்கிழான் கோட்டம்’ என்பது சூரியனுக்குரிய கோயில் என்பது தெளிவாகிறது.

உச்சிக்கிழான் கோட்டம் தமிழகத்தில் வந்ததற்கான பின்னணியை ஆய்வாளர் குறிப்பிடுகையில்,

> **‘‘பாபிலோனிய, எகிப்து ஆகிய நாடுகளோடு கி.பி. 1200 ஆண்டுக்கால அளவிலிருந்தே வணிகம் செய்து வந்த பொனிசிய வணிகர்கள் தமிழ்நாட்டுத் துறைமுகப் பட்டினங்களில் திரளாகத் தங்கியிருந்த காலங்களில் பாபிலோனியர் எகிப்து நாட்டு வழிபாட்டு முறைகளையும்**

**இங்குப் பரப்பினர். அதன் விளைவாகச் சூரியன், நிலவு போன்றவற்றிற்குக் கோயில் கட்டும் வழக்கம் தமிழகத் துறைமுகப் பட்டினங்களில் உருவாயிற்று. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த சூரியன் கோயிலாகிய உச்சிக்கிழான் கோட்டம், நிலாக்கோட்டம் ஆகியவை இத்தகைய பின்னணியில் உருவானதே''[6]**

என்பர் இரா.மதிவாணன். இக்கூற்றின்படி பொனிசியர்கள் வணிக வரவின் பயனாக எழுந்ததே உச்சிக்கிழான் கோட்டம் என்பது குறிப்பிடத்தக்கது.

சோழ நாட்டைக் குறிப்பிடும் சங்க இலக்கியங்களில் 'உச்சிக்கிழான் கோட்டம்' பற்றிய குறிப்புகள் இல்லை. சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்ட உச்சிக்கிழான் கோட்டம் பற்றிப் பிற்கால இலக்கியங்களும் கல்வெட்டுகளும் குறிப்பிடாமையால் சிலப்பதிகார காலத்திற்குப் பின் அது கடல் கோள்களால் அழிந்துபட்டிருக்கும் என முடிவு செய்யலாம்.

## சூரியகுண்டம்

சூரியனுக்குரிய குளம் இருத்ததைப் பற்றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. இக்குளத்தில் மூழ்கி சூரியனை வாழ்த்துபவர்கள் கணவனைப் பிரியாது இன்புற்று வாழ்வார்கள் என்பதான நம்பிக்கை மக்களிடையே நிலவி வந்துள்ளது. இதனை,

**''சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக்**

**காமவேள் கோட்டந் தொழுதாற் கணவரோடு**

**தாமின் புறுவ ருலகத்துத் தையலார்''[7]**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சூரிய குண்டம் பற்றி உ.வே.சா. சிலப்பதிகார அடிக்குறிப்புரையில்,

**''இங்கே கூறிய சோமகுண்டமும் சூரிய குண்டமும் முறையே திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமென்று சில பெரியோர் கூறுகின்றனர்''[8]**

என்று குறிப்பிடுகிறார். சூரியகுண்டம் பற்றியும் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை.

## திங்கள்

தீயினைக் கண்டுபிடிக்காத சூழலில் இருளினைக் கண்டு அஞ்சத் தொடங்கிய மனிதன் வெளிச்சமும் குளிர்மைத் தன்மையுடையதுமான திங்களைக் கண்டவுடன் மகிழ்வுற்றான். இம்மகிழ்வின் காரணமாகத் திங்களை வணங்கத் தொடங்கினான். வேதங்களில் சந்திரனை வழிபடும் வழக்கம் இருந்தது. வேதங்களில் சந்திரனை ஸோமன் என்றும் சந்திரமா என்றும் குறிக்கிறார்கள்.

உலக மக்கள் அனைவரும் திங்களை வாழ்த்தி வழிபட்டுள்ளனர் என்பதனை,

**''உலகு தொழத்தோன்றிய மல்கதிர் மதியம்''[9] (சிலம்பு. 28:89)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

உலக மக்கள் திங்களை வழிபட்டதோடு பல்வேறு பெயர்களிட்டும் வணங்கியுள்ளனர் என்பதனை,

> **''சந்திரனை இந்தியாவில் மட்டும் வழிபடாது உரோமனியர் 'தயான' (Diana) என்ற பெயரிலும் கிரேக்கர்கள் 'சிலினி' (Silene) என்ற பெயரிலும் பாபிலோனியர் 'சின்' (Sin) என்ற பெயரிலும் சுமேரியர்கள் 'நன்னா' (Nana) என்ற பெயரிலும் பெயரிட்டுள்ளனர்''[10]**

என்று வாழ்வியற்களஞ்சியம் குறிப்பிடுகிறது. சந்திரனானது திங்கள், மதி, இந்து, வெண்ணிலவு என்று பல்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டதை,

> **''ஞாயிறு திங்கள் சொல்லென உரூஉம்''[11]**
>
> **''ஞாயிறு திங்கள் அறிவே நான்''[12]**
>
> **''நிலா வெண்கிளவி அத்தொடு சிவணும்''[13]**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

சிந்துவெளி நாகரிகத்திலும் திங்களை மக்கள் வாழ்த்தியுள்ளனர். திங்களைத் தெய்வமாக வழிபட்டதற்கான கோயில்கள் மொஹஞ்சதரோ அகழ்வாய்வுகளின் மூலம்

கிடைக்கப் பெறுவதை மா. இராசமாணிக்கனார்,

> **"இந்த (உர்) நகரம் சுமேரிய நகரங்களுள் மிகச் சிறந்ததாகும். இந்நகரத்தில் இடம்பெற்ற ஆராய்ச்சியின் பயனாக அரிய குறிப்புகள் பல வெளிப்பட்டன. இந்நகரில் திங்கட்கடவுள் தம் மனைவியோடு எழுந்தருளியுள்ள கோயில் ஒன்றும் நிலமகள் கோயிலும் கதிரவன் கோயிலும் காணப்பட்டன''**[14]

என்று குறிப்பிடுகிறார். இச்சான்றின் வழி திங்களுக்குக் கோயில் இருந்தது என்பது புலனாகின்றது.

## நிலாக்கோட்டம்

திங்களுக்கென்று தனிக்கோயில் எழுப்பியதாகச் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால் சிலப்பதிகாரத்தில் முதன்முதலாக நிலாக்கோட்டம் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இதனை,

> **"நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கெங்கும்''**[15]

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## சோம குண்டம்

திங்களுக்கென்று தனியே குளம் இருந்ததைச் சிலப்பதிகாரம் 'சோமகுண்டம்' என்று அழைக்கிறது. இக்குளத்தில் மூழ்கி எழுபவர்கள் தம் கணவரைப் பிரியாது இன்புற்று வாழ்பவர்கள் என்பதான நம்பிக்கை குறித்த வழக்கு மக்களிடையே நிலவிற்று என்பதைத் தேவந்தியின் கூற்று வாயிலாக அறிய இயலுகிறது. இதனை,

> **"சோமகுண்டஞ் சூரிய குண்டத் துறைமூழ்கி''**[16]

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சோமகுண்டம் பற்றி உ.வே.சா. சிலப்பதிகார அடிக்குறிப்புரையில் திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமே சோமகுண்டம் என்று குறிப்பிடுகிறார்.

## பிறையைத் தொழுதல்

தக்கன் யாகத்தில் தண்டனை பெற்று, இந்நிலவு பதினைந்து நாட்கள் தேய்ந்தும்,

பதினைந்து நாட்கள் வளர்ந்தும் வருவதை,

**''தேய்தல் உண்மையும் பெருகுதல் உண்மையும்**

**மாய்தல் உண்மையும் பறத்தல் உண்மையும்**

**அறியா தோரையும் அறியக் காட்டித்**

**திங்கள் புத்தேள் திரிதரு உலகத்து'' (புறம். 27:11–14)**

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன.

திருமணமாகாத பெண்கள் பிறையைத் தொழுவதை மரபாகக் கொண்டுள்ளனர். பெண்கள் பிறையை வணங்குவதால் நல்ல கணவன் கிடைக்க பெறுவான் என்பதான நம்பிக்கை மக்களிடையே நிலவியதை சங்க இலக்கியம் பதிவு செய்துள்ளது. இதனை,

**''ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம்**

**புல்லென் மாலை''[15] (அகம். 289:9–10)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

வானத்திலே உலாவும் சந்திரன் விண்மீன் கூட்டங்களில் இடையிலே மின்னும் தன்மையுடையது. அவற்றுள் திங்கட்கு அணித்தாக விளங்குவது உரோகிணி. இந்த நாளைத் திருமணத்திற்குரிய நன்னாளாகப் பண்டைய மக்கள் கருதினர் என்பதனை,

**''நாள்மின் வாய் சூழ்ந்த மதிபோல்'' (முல்லைக்கலி. 4:27)**

**''பல்மீன் நாப்பன் திங்கள் போலவும்**

**சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப'' (புறம். 13:6–7)**

என்ற பாடலடியால் அறியமுடிகின்றது.

## மழை வழிபாடு

மனித வாழ்வின் அடிப்படை ஆதாரங்களில் ஒன்று நீராகும். நீரின் இன்றியமையாதத் தேவையை,

"நீர்இன்று அமையாது உலகெனின்"[17]

என்ற குறளின் மூலம் அறியலாம். நீரினைத் தருகின்ற மழையைக் கண்டு மகிழ்ந்து அதன் தேவையை உணர்ந்து அதனை வணங்கத் தொடங்கினர். மழை வேண்டி பயன் கருதியும், மழை அதிகமாய்ப் பெய்யும்போது உண்டாகும் வெள்ளப் பெருக்கின் சீற்றத்தைக் கண்ட அச்சத்தின் வெளிப்பாடாகவும் என இரு நிலைகளில் இடம்பெறுகின்றன.

மழைப்பொழிவினால் நாடு வெம்மை நீங்கி குளிர்ச்சியடையும். வளம் சுரக்கும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாய் மழையை வணங்கினர். தலைவி உடன் போக்குச் சென்ற பாலை வழி மழை பெய்து குளிர்ச்சியடைய வேண்டும் என வேண்டி வணங்கும் மரபும் காணப்படுகிறது. இதனை,

"ஞாயிறு காயாது மரநிழற் படிஇய

மலைமுதல் சிறுநெறி மணன்மிகத் தாஅய்த்

தண்மழை தலையின் றாக நந்நீத்து" (குறுந். 378:1–3)

என்று மழையை வாழ்த்துகின்றபோது 'தண்மழை' என்ற சொல்லாட்சி இடம்பெறுகிறது. நாட்டில் குளிர்ச்சியுண்டாக்க வேண்டும் என்று வணங்குபவரின் எண்ணத்தை வெளிப்படுத்தும் விதமாகத் தண்மழை என்ற சொல்லாட்சி அடையாக இடம்பெறுகிறது.

மழையின் தோற்றத்திற்குக் கடல் நீரானது சூரியக்கதிரின் வெம்மைத் தன்மையால் ஆவியாகிப் பின்பு குளிர்ச்சியடைந்து மழையைப் பொழிவதால் மழை தண்மையும் வெம்மையும் உடையதாகக் கூறப்படுகிறது.

மழையை வரவழைக்கச் சடங்கினை மேற்கொண்டனர். இதனை,

"மலைவான் கொள்கென வுயிர்பலி தூஉய்" (புறம். 148)

என்ற பாடலடியின் வாயிலாக மழை பொழிய வேண்டும் என்பதற்காக உயிர்ப்பலியிடும் சடங்கு முறையினை செய்வதில் பழந்தமிழர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை அறியலாம்.

## அணங்கு

பழந்தமிழர் இலக்கியங்களில் அணங்கு என்ற சொல் வருத்தம், தெய்வம் என்னும் பெயரிலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. அணங்கினைப் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

**‘‘அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்**

**பிணங்கள் சாலா அச்சம் நான்கே’’[18] (தொல்.பொருள். 252)**

என எண்வகை மெய்ப்பாடுகளுள் அச்சம் என்ற மெய்ப்பாட்டிற்குரிய வாயிலாக அணங்கை சுட்டிக் காட்டியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் உருவமில்லாத தெய்வமாகவும் ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாகவும் அணங்கு விளங்குகிறது. அணங்கு வருத்தத்தைத் தரக்கூடியது என்றும் புனிதமானது என்றும் பண்டைத் தமிழ் மக்களிடையே நம்பிக்கை நிலவியிருக்கிறது. இந்த அணங்கு மரம், மலை, நீர் நிலைகள், காடு, காவன்மரம், ஊர், போர்க்களம் ஆகியன அணங்கு உறையும் இடங்களாகும்.

அணங்கு அச்சத்தைத் தரக்கூடிய கடற்பரப்பிலும் உறைவதை,

**‘‘அணங்குடை முந்நீர் பரந்த செநறன்’’ (அகம். 207)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது. பரதவர் இரவில் கடலுள் மீன் பிடிக்க சென்ற பின்னர் அவர்களைப் பத்திரமாகக் கரை சேர்க்குமாறு அவர்களுடைய பெண்கள் அணங்கு உறையும் கடல் துறையைத் தொழுதார்கள் என்பதனை,

**‘‘பல்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய**

**எந்தையும் செல்லுமார் இரவே அந்தில்**

**அணங்குடைப் பனித்துறை கைத்தொழுது ஏத்தி’’ (அகம். 240:6–8)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது. மலை உச்சியில் அணங்கு உறைந்திருப்பதை,

**‘‘அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்**

**கணங்கொள் அரவிக் கான்கெழு நாடன்'' (அகம். 22)**

என்ற அடிகள் மூலம் அறியலாம். அணங்கு தாக்கும் இயல்பினையுடையது. எனவே, அது 'தாக்கணங்கு' எனவும் அழைக்கப்படுகிறது. தாக்கணக்கு என்பதற்குத் தீண்டி வருத்தும் தெய்வம் எனப் பொருள். அணங்கு தாக்கி வருத்தும் தன்மையுடையதால் தலைவியின் தாய் தலைவியிடம் சுழன்று திரியும் உன் தோழியருடன் எவ்விடத்திற்கும் செல்லாதே பழமை வாய்ந்த இந்தப் பதியின் இடங்கள் தாக்கி வருத்தும் தெய்வங்களை உடையவை. அதனால் நீ நம் வீட்டின் வாயிலில் கூட செல்லக் கூடாது என கடிந்து எச்சரிப்பதை,

**''அலமரல் ஆயமோடு யாங்கனும் படாஅல்**

**மூப்புடை முதுபதி தாக்குஅணங்கு உடைய;**

**காப்பும் பூண்டிசின்; கடையும் போகலை;**

**பேதை அல்லை – மேதைஅம் குறுமகள்'' (அகம். 7:2–5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

கற்புடைய பெண்களிடத்திலும், பருவமடைந்த பெண்கள், கைம்பெண்கள் போன்றவர்களிடமும் அணங்கு உறையும் என்று கூறப்பட்டுள்ளது. அணங்கு உறையப்பட்டவர்கள் புனிதத்தோடு விளங்கவேண்டும். அவ்வாறு புனிதமாயிருந்தால்தான் நல்வழியில் செல்வதற்கும், அதிசயச் செயல்களைச் செய்வதற்கும் முழு ஆற்றலை தரும். அவ்வாறன்றி புனிதம் கெட்டால், அணங்கு அவர்களைவிட்டு வெளியேறும் என்று சங்ககால மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இதனை,

**''அணங்குடை வனமுலை தாஅய நின்'' (அகம். 177:19)**

**''அணங்கு அன்னாள்'' (அகம். 366:15)**

**''அணங்குசால் அரிவை'' (அகம். 114:15)**

**''அணங்குறு கற்பொடு மடம்கொளச் சாஅய்'' (அகம். 73:5)**

எனும் பாடலடிகள் பெண்களிடம் படிந்து கிடக்கும் ஆற்றலும், தெய்வத்தன்மையும்

பெண்களின் கற்புத்திறம் ஓங்கி இருக்கும் வரை இருக்கும் என்பதை கூறுவதாக அமைகின்றன.

> **“தலைவியின் ஆற்றல் குடும்ப நன்மைக்கும் இனக்குழு நன்மைக்கும் அடிப்படையானதாக அணங்கு வணக்கம் உறுதி செய்கிறது. அணங்கு ஆற்றல் இருக்கும் வரை நன்மையும், நீங்கும்போது தீமையும் விளையும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடையே வெளிப்பட்டது’’[19]**

என்பர் சிலம்பு. நா.செல்வராசு.

## கடவுள்

சங்க இலக்கியத்துள் கடவுளைக் குறிக்கும் சொற்களாக இறைவன், கடவுள், படைத்தோன் என்ற சொற்களில் ஆளப் பெறுகின்றன. இக்கடவுளர்கள் அருந்தெறள் கடவுள், இரும்புகழ்த் தெய்வம், நிலையர் கடவுள் என அடையாளம் கொடுத்துச் சிறப்பிக்கப் பெறுகின்றன.

## கடவுள் உறையும் இடம்

பழங்காலத்தில் கடப்ப மரம், வேங்கை மரம், கிள்ளி மரம், மாமரம், முதுமரம், ஆல மரம், ஆறு, ஆற்றிடைக் குறை, காடு, குளம், சந்தி, வீடு போன்ற இடங்கள் கடவுள் உறையும் இடங்களாகக் கருதப்பெற்றிருந்தன.

> **“நீத்துடை நெடுங்கயம் தீப்பட மலர்ந்த**
>
> **கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி’’ (பெரும். 289–290)**

> **“கல் எறிந்து, எழுதிய நல்அரை மராஅத்த**
>
> **கடவுள் ஓங்கிய காடு ஏசுகவலை’’ (மலைபடு. 395–396)**

> **“கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன**
>
> **அடையா வாயில் அவன்அருங் கடைகுறுகி’’ (சிறுபாண். 205–206)**

> **“கடவுட் கயத்து அமன்ற சுடர்இதழ்த் தாமரை’’ (மதுரைக். 710)**

என்னும் பாடலடிகளின் மூலம் கடவுள் உறையும் இடங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

## ஐந்நிலக் கடவுள் வழிபாடுகள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களைக் கொண்டிருந்த குமரிக் கண்டத்தில் குறிஞ்சியில் தோன்றிய சமயமே முதல் சமயமாக உருப்பெற்றது. பின்னர் அடுத்தடுத்து நிலங்களில் மக்கள் இடம் பெயர்ந்து வாழ்ந்தபோது அந்நிலங்களுக்கேற்பவும் சூழ்நிலைக்கேற்பவும் மக்களின் உணர்ச்சிகள் அமைவது இயல்பாகும். குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும், மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும், பாலைக்கு கொற்றவையும் தெய்வங்களாக அமைகின்றன.

## முருகன்

குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுள் முருகன், முருகனைத் தமிழரின் தனிப்பெருங் கடவுள் என்று கூறுவர். முருகன் வீரமிக்கவன், சீற்றமுடையவன், வலிமையுடையவன் என்றே சங்க நூல்கள் கூறுகின்றன. இதனை,

> **‘‘முருகு உறழ் முன்பொடு கடுஞ்சினஞ் செருக்கிப்**
>
> **பொருத யானை வெண்கோடு கடுப்ப’’ (நற். 225:1–2)**
>
> **‘‘முருகன் சீற்றத்து உருகெழு குரிசில்’’ (புறம். 16)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

முருக வழிபாடு பற்றி கடிகாசலம் அவர்கள் கூறுகையில்,

> **‘‘குறிஞ்சி மக்கள் மலைமீது நின்று கதிரவன் கடலினின்றும் எழும் இயற்கை எழிற்காட்சியைக் காலையிற் கண்டு களித்தனர். அவர்களுக்கு அக்காட்சி நீலமயில் மீது செவ்வேள் இருப்பது போல் தோன்றியது. அவ்வியற்கை வழிபாடே முருக வழிபாடாக மலர்ந்தது’’[20]**

என்கிறார்.

குறிஞ்சி நில மக்கள் தொடக்கத்தில் கதிரவனையே வழிபட்டிருக்க வேண்டும். இக்கதிரவனின் வழிபாடே பின்னாளில் முருக வழிபாடாக மாறியிருக்க வேண்டும்.

கதிரவனால் பெறப்பட்ட தீயும், தீயால் வெளிப்பட்ட செம்மையும், ஒளி செம்மையில் உருவான சேயும், பரிணாம வளர்ச்சி பெற்று குறிஞ்சிநில மக்கள் முருகனை வழிபடுவதற்கு ஆதாரமாயின. முருகன் வழிபாட்டிற்கு மூலவன் கதிரவனாவான். இதனை,

> **''மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்**
>
> **ஞாயிற்று ஏர்நிறந்தகை நளினத்துப் பிறவியை'' (பரி. 5:11–12)**

என்ற பரிபாடல் அடியின் மூலம் அறியமுடிகின்றது. கதிரவன் தோன்றும்போது செந்நிற அழகுடன் தோன்றும் முருகனே எனக் குறிப்பிடுவதால் கதிரவன் வழிபாடே பின்னாளில் முருக வழிபாடாக தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

> **''மலை நிலக் கடவுளாம் முருகனும் சேயோன் எனப்படுகிறான். அதற்குக் காரணமாகச் செவ்வேள் என்ற வழக்குண்மையும் காணமுடிகிறது. சேய் என்பதற்கு மலைச்சிகரம் என்ற பொருளுமுண்டு. ஆயினும் பிற்காலத்தில் சிவனின் செல்வன் முருகன் என்று கூறலாயினர். காலை வேளையில் நீலக்கடலை மேல் தோன்றி அழகுக் காட்சி வழங்கும் இளங்கதிரையே முருகன் எனப் போற்றியதாகவும் கடல் மயிலாகவும் அதன்மேல் தோன்றும் செங்கதிரே செவ் வேளாகவும் கற்பிக்கப்பட்டன என்றும், இளங்கதிர் முற்றி மேலும் சிவந்த நண்பகலில் தோன்றியபோது அதனைச் சிவன் என்றதாகவும் இளங்கதிரைச் சிவனின் இளஞ்சேயாகக் கருதியதாகவும்''[21]**

என கா.சு.பிள்ளை குறிப்பிடுகிறார்.

முருகனுக்குச் செவ்வேள், சேய், வேள், நெடுவேள், நெடியோன், குமரன், மாஅல் மருகன், காஅய்க்கடவுள், வெறிகொண்டான் என பல பெயர்கள் உள்ளதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம். இதனை,

> **''முருகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலான்''[22]**

என்னும் பெயர்களில் குறிப்பிட்டுள்ளனர் என்பர் மு.சண்முகம் பிள்ளை. முருகப் பெருமானை உள்ளன்புடன் வழிபடும் அடியார்க்கு நல்வழி காட்டி வேண்டியோர் வேண்டியாங்கு அருள்பவன் என்பதனை,

**''வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட**

**ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே'' (திருமுருகு. 248–249)**

என்னும் திருமுருகாற்றுப்படை அடிகள் தெளிவுப் படுத்துகின்றன.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோறாடல், பழமுதிர்சோலை போன்றவை முருகனின் அறுபடை வீடுகள் என்று திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

முருகன் மலைகளிலும் குன்றுகளிலும் வாழ்பவன் என்பதை,

**''அறம் புணை ஆகத்தேற்றி, பிறங்கு மலை**

**மீமிசைக் கடவுள் வாழ்த்தி கைதொழுது**

**ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி'' (குறிஞ்சி. 208–210)**

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிகள் மூலம் அறியமுடிகிறது. முருகன் விரும்பி உறையும் இடமாக,

**''காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**

**யாறும் குளனும் வேறுபல் வைப்பும்**

**சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்**

**மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்'' (திருமுருகு. 223–226)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

காடு, கவின்பெற்று துருத்தி, ஆறு, குளம், சதுக்கம், முச்சந்தி, பூங்கடம்பு, மன்றம், பொதி, கந்து ஆகிய இயற்கைச் சூழலில் உறைவதாகக் கூறுவதோடு அதனை வழிபட்டதனையும் அறியமுடிகிறது.

## முருகனின் கோயில்கள்

முருகனுக்குச் சங்க காலத்திலேயே கோயில் இருந்ததை,

**''கொடி நுடங்கு மறுகில் கூடல்குடாஅது**

பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய

ஒடியா விழவின், நெடியோன் குன்றத்து'' (அகம். 149:14–16)

என்றும்,

''சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்

சினமிகு முருகன் தன்பாங் குன்றத்து

அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை'' (அகம். 59:10–13)

என்றும்,

''அணங்குடை முருகன் கோட்டத்துக்

கலம்தொடா மகளிரின் இகந்துநின் றவ்வே'' (புறம். 299: 6–7)

என்றும்,

''அணங்குடை வரைப்பகப் பொலியவந் திறக்கும்

திருமணி விளக்கின் அலைவாய்ச்

செருமிகு சேஎயொடு உற்ற சூளே'' (அகம். 266:19–21

என்றும் வரும் பாடலடிகளில் சூரனையும் அவன் சுற்றத்தையும், நீண்ட வேலால் அழித்த முருகன் உறையும் இடமாகத் திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாயில் திகழ்ந்துள்ளது. திருப்பரங்குன்றத்தில் திருவிழாக்கள் நடந்த வண்ணமாக இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

## திருமால்

பண்டைய காலங்களில் முல்லை நில ஆயர்களின் சிறப்பு மிக்க கடவுள் மாயோன் என்பர். சங்க இலக்கியங்களில் மால், திருமறுமார்பன், நேமியோன், திகிரியான், முதல்வன், நெடியோன், முந்நீர் வண்ணன், வெய்யோன், மாய வண்ணன், அறிதுயிலோன் என்னும் பல பெயர்கள் காணப்படுகின்றன. மாயோன் வண்ணத்தைக் கடல், வானம், காயாம் பூ, கடல், இருள், நீலமணி முதலான நிறத்தோடு ஒப்பிட்டனர். நீலமணி போன்ற அழகும் அலை

கிளர்ந்து ஏவித்தல் இல்லாத அமைதியாக இருக்கின்ற கடலும் நீர் சுமந்த கார் மேகமும் திருமாலின் மேனிக்கு ஒப்புமையாகக் குறிப்பிடப்படுகிறது. இதனை,

**''திருமணி திரைபாடு அவிந்த முந்நீர்**

**வருமழை இருஞ்சூல் மூன்றும் புரையும் மாமெய்'' (பரி. திருமால். 46:7)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

திருமால் வேத முதல்வன் என்று அழைக்கப்படுகிறான். நற்றிணையின் கடவுள் வாழ்த்து திருமாலை வேத முதல்வன் என்று குறிப்பிடுகிறது. இதனை,

**''மாநிலஞ் சேவடியாகத் தூநீர்**

**வளைநரல் பௌவம் உடுக்கையாக**

**வேத முதல்வன் என்ப**

**தீதற விளங்கிய திகிரியோனே''**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது.

திருமால் தன் மார்பில் திருமகளைக் கொண்டிருக்கிறான் என்பதனை,

**''பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்**

**திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரியும்'' (பெரும். 9–10)**

என்னும் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

உலகின் தோற்றத்திற்கு முதற்காரணமாக விளங்குபவன் திருமால். மக்கள் பிறவிப்பிணியில் இருந்து விடுபட்டு உய்வதற்கு உதவும் பெருமானை மாயோன் என்று கூறுவதனை,

**''மாஅயோயே மாஅயோயே**

**மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி**

**மணிதிகழ் உருபின் மாஅயோயே'' (பரி. 3:1–3)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

## இந்திரன்

தேவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பதால் வேந்தன் என அழைக்கப்படுகிறான். **"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்''**[26] என மருத நிலத்துக்கு உரிய கடவுளாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

இந்திரன், திருக்கிளர் செல்வன் எனக் குறிக்கப் பெறுகிறான். இவன் ஆயிரம் யானைகள் உடையவன் நூறு வேள்விகளை நடத்தியவன். யானையின் பிடரி மேல் ஏறி வருபவன் என்று புகழப்படுகிறான். இதனை,

> **"நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல**
>
> **வேள்வி முற்றிய வென்றடு கொள்ளத்து**
>
> **ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்**
>
> **தாழ்பெரும் தடக்கை உயர்ந்த யானை**
>
> **எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வன்'' (திருமுருகு. 155–159)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது. இந்திரனுக்கு எனத் தனியாகக் கோயில் இருந்தகை,

> **"அண்டிரன் வரூஉம் என்ன ஒண்டொடி**
>
> **வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலும்'' (புறம். 41:2–3)**

என்னும் பாடலடியின் மூலம்அறியமுடிகிறது.

**"இடியேற்றை உடையவன்'' (பரி. 8), "இந்திர விழவு'' (ஐங். 62), "வச்சிரத்தான்'' (பரி. 98), "ஆயிரங்கண்ணோான்'' (கலி. 105), "இந்திரவிழவிற் பூவினன்'' (ஐங். 62), "யானையை ஊர்தியாக உடையவள்'' (திருமுருக. 459), "ஐயிருநூற்று மெய் நயனத்தவன்''(பரி. 9), "வானவில்லை வில்லாகக் கொண்டவன்''(பரி. 241), "ஏறு அதிர்க்கும் இந்திரம் இரும் உருமென''(பரி. 8)** என்ற பாடலடிகளில் இந்திரன் பற்றிய குறிப்பும் இந்திரவிழாவிற்கான குறிப்புகளும் காணப்படுகின்றன.

## வருணன்

பரந்த கடலில் தொழில் செய்தவர்கள் பரதவர்கள் என்று அழைக்கப்பட்டனர். கடலை நம்பி வாழ்ந்திருந்த நெய்தல் நிலத்தில் பரதவர் நீரையே தங்கள் தெய்வமாகக் கொண்டிருந்தனர். நீரினின்று தங்களைக் காக்க வேண்டி பரதவர்கள் வழிபாடு செய்தனர். கடல் கடவுளுக்கு வாரளன் என்ற பெயர் இருந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. அணன் என்ற சொல்லுக்கு உயர்ந்தவன் என்பது பொருளாகும். வார் என்பது கடலைக் குறித்தது என்பர். ''வருணன் மேய பெருமணல் உலகம்''[36] (தொல்.அகத். 5:4) என்கிறது தொல்காப்பியம். நெய்தல் நிலத் தெய்வமாகிய வருணனைப் பரதவர்கள் வணங்கினர். நெய்தல் நில மக்கள் முழுநிலா நாளில் கடலுக்குள் மீன்பிடிக்கச் சென்று கடல் தெய்வத்தை வழிபட்டனர் என்ற செய்தியை,

**''பழையர் மகளிர் பனித்துறைப் பரவப்**

**பகலோன் மறைந்த அந்தி ஆர்இடை'' (அகம். 201:7–8)**

**''அந்தில்**

**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி'' (அகம். 246:7–8)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

பரதவர்கள் முழுநிலவு நாளில் அலையின் சீற்றம் கடலில் அதிகமாக இருக்கும் என்பதால் மீன்பிடிக்கச் செல்லாது தழையாடை உடுத்த தம் மகளிரொடு சேர்ந்து வருணனை வழிபடுவர். சினையான சுறாமீனின் கொம்பை நட்டு அதில் தெய்வத்தை வருவித்து, அத்தெய்வத்திற்குத் தாழை மலரையும், பனை மரத்தில் வடித்த கள்ளையும் படைத்து வழிபட்டு பின்னர் தாழை மலரைச் சூடிக் கொண்டும், கள்ளைப் பருகியும் தாம் விரும்பிய உணவினை உண்டும் ஆடிப்பாடி மகிழ்வர் இதனை,

**''சினைச்சுறவின் கோடுநட்டு**

**மனைச் சேர்த்திய வல்அணங்கினான்**

**மடல் தாழை மலர் மலைந்தும்**

**பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்**

**புன்தலை இரும் பரதவர்**

**பைந்தழை மா மகளிரொடும்**

**பாய்இரும் பனிக்கடல் வேட்டம்செல்லாது**

**உலவு படிந்து உண்டாடியும்'' (பரி. 86:93)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சுறாவின் கொம்பு கடல் தெய்வமாக மதிக்கப்பட்டது.

## கொற்றவை

பாலை நிலத்தவரின் சிறப்பு மிக்க கடவுள் கொற்றவை என்பர். தமிழர்களின் வெற்றிக்குரிய தெய்வமாக விளங்குவது கொற்றவை. போருக்குச் செல்லும் முன் கொற்றவையை வழிபடுவதும் போரில் வெற்றி பெற்றதும் கொற்றவையைப் புகழ்ந்து ஏத்துவதும் வீரர்களின் வாழ்வில் நடைபெறும் செயல்களாக விளங்கியுள்ளது. இதனை,

> **''தமிழ் வீரர் வணங்கிய தெய்வம் கொற்றவை ஆகும். வெற்றி தரும் தாயே கொற்றவை என்று பெயர் பெற்றார்''[23]**

என்பர் ரா.பி.சேதுப்பிள்ளை.

தொல்காப்பியம் கொற்றவை வழிபாட்டினைத் துறை ஒன்றின் வழி வலியுறுத்துகிறது.

**''மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த**

**கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே''[24]**

என்ற நூற்பாவின் மூலம்அறியமுடிகிறது. கானகத்தில் உறையும் மறவர்களின் தெய்வமாகப் போற்றப்படுகிறாள்.

மரபுநிலை வழுவாது அயிரை மலையில் உறைகின்ற கொற்றவைத் தெய்வத்தைச் சேர மன்னர் வணங்கி வந்தனர் என்பதனை,

**''உருகெழு மரபின் அயிரை பரவியும்'' (பதிற். 90:19)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

> ''தமிழிலக்கியத்தில் கொற்றவை என்பதற்கு ஆரலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள், வெற்றி தருபவள் என்ற பொருள் இருப்பதைக் காணலாம். பழங்கால வேட்டை தெய்வமே பின்னர் இப்படி தேவதையான டையானாவும் வேட்டைத் தெய்வமே. இவளே ஆற்றுத்துறைகளில் காவல் செய்பவள், காட்டு விலங்குகளையும் வேட்டுவர்களையும் காப்பவளாகக் கருதப்பட்டாள். வில்லும், அம்பும் கையில் வைத்திருப்பாள். தலையில் பிறைநிலா அணிந்திருப்பாள். தமிழிலக்கியத்தில் வரும் கொற்றவையும் டயானாவும் சிலவற்றில் ஒற்றுமையுடன் திகழ்வதை உணரமுடியும். இனக்குழு மக்களின் வேட்டைக்குக் கொற்றம் தருபவளான கொற்றவையே பின்னர் வேந்தருக்குக் கொற்றம் தருபவளாகக் கொண்டாடப்பட்டாள்''[25]

என கொற்றவை தோற்றம் பற்றி பி.எல்.சாமி குறிப்பிடுகிறார்.

> ''அஞ்சு வரும் மரபில் கடவுள் அயிரையின் நிலைஇ'' (பதிற். 79:17)

எனும் பாடலில் அச்சம் தருகின்ற முறைமையினை உடைய கொற்றவை உறைகின்ற அயிரைமலை எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது. பிளவுகள், குகைகள் இவற்றையிடையே மலைச்சாரலில் எழுத்தருளியுள்ள வெற்றி நிரம்பிய திரிசூலத்தைக் கையிலே கொண்ட கொற்றவைக்குப் பலிக்கடனை நிறைவேற்றுதலை,

> ''விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
>
> கடனும் பூணாம்'' (குறுந். 218:1–2)

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

## சிவன்

தோற்றமும் முடிவும் அற்ற இறைவனாக அறியப்படும் கடவுள் சிவன். சிவன் சங்க இலக்கியங்களில் மழுவாள் முருக்கிய முரண்மிகு செல்வன், ஆலமர் செல்வன், ஆல்கெழு கடவுள், நீலமணிமிடற்றன், உமையொருபாகன், முக்கண் செல்வன், நாட்டத் திறையோன், காரி உண்டிக் கடவுள், மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன், ஐந்து தலைகளை உடைய முக்கண் செல்வன், பிறவாயாக்கைப் பெரியோன், கறை மிடற்று அண்ணல், ஆல்அமர் கடவுள் என்னும் பல பெயர்கள் காணப்படுகின்றன.

அந்தி வானத்தைப் போன்று செந்நிறம் படைத்தவன் என்று சிவபெருமானின் தோற்றச் சிறப்பினை,

**“வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**

**உருஉடன் இயைந்த தோற்றம் போல**

**அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ’’ (அகம். 360:6–8)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்தில் தேவர்களைக் காக்கும் பொருட்டு இறைவன் முதலில் வந்த விடத்தை அருந்தித் தேவர்களைக் காத்த தன்மையினை,

**“பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி**

**நீல மணிமிடற்று ஒருவன்’’ (புறம். 91:5–6)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது. சிவன் தன் தலையில் கங்கை ஆற்றைக் கொண்டிருக்கும் தன்மையினை,

**“ஆறுஅளி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து**

**தேறுநீர் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி**

**மாறாப்போர் மணிமிடற்று எண்கையாய்’’ (கலி. 1:1–4)**

**“பிறங்குநீர் சடைக்கரந்தான்’’ (கலி. 150:9)**

என்னும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. தன் தலையில் அழகிய பிறைச் சந்திரனைச் சூடியுள்ளான். இதனை,

**“கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்**

**பிறைநுதல் விளங்கும் ஒருவன் போல’’ (புறம். 55:4–6)**

எனும் பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

நான்மறைகளை உணர்ந்து மூன்று கண்களையுடைய சிவபெருமான் ஆலமுற்றம் என்னும் இடத்தில் வீற்றிருப்பவர் என்பதை,

**''நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்**

**ஆலமுற்றம் கவின்பெறத் தைஇய'' (அகம். 181:16–17)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## கோயில்

திருமாலின் கொப்பூழ் மலர்ந்த தாமரை போல் மதுரை விளங்கும். தாமரைப்பூவின் இதழ்கள் போல மதுரைத் தெருக்கள் விளங்கும். தாமரைப் பொகுட்டுப் போல நகர் நடுவண் சிவபெருமான் கோயில் விளங்கும். தாமரையின் தாதுக்கள் போல சிவபெருமானை வணங்கும் மதுரை மக்கள் விளங்குவர். தாமரைத் தேன் உண்ண வரும் தும்பிகளைப் போலப் பாண்டியனிடம் பரிசில் பெற வரும் பரிசிலர் விளங்குவர். கோயில் வேத ஒலி கேட்டு மதுரை மக்கள் துயில் எழுவர். வஞ்சி நகரைப் போன்றும் உறையூரைப் போன்றும் கோழி கூவி எழுவதில்லை. இதனை,

**''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை**

**பூவொடு புரையும், சீர்ஊர் பூவின்**

**இதழகத்து அனைய தெருவம் இதழகத்து**

**அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்**

**தாதின் அனையர் தண்தமிழ்க் குடிகள்**

**தாதுஉண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்**

**பூவினுள் பிறந்தோன் நாவினுள் பிறந்த**

**நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப**

**ஏம இன்துயில் எழுதல் அல்லதை**

**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**

**கோழியின் எழாது எம்பேர் ஊர் துயிலே'' (பரி. மதுரை. 8)**

என்ற பாடலின் மூலம் அறியலாம். மாயவன் கொப்பூழ் மலர்ந்த தாமரையில் வீற்றிருப்போன் பிரம்மன். அவன் வாயிலிருந்து பிறந்தது வேதம். அந்த வேத ஒலி எழ மதுரை மக்கள் துயில் எழுவர்.

## கோயிலோடு குடியமர்த்தினான்

திருமாவளவன் காடுகளை அழித்து நாடாக்கிக் கோயில் எடுப்பித்து, கோயிலைச் சுற்றிலும் குடியமர்த்தினான் என்னும் செய்தியினை,

**“காடுகொன்று நாடாக்கிக்**

**குளம் தொட்டு வளம் பெருக்காப்**

**பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்**

**கோயிலொடு குடிநிறீஇ’’ (பட்டினப். 283–286)**

எனும் பாடல் வழி அறியமுடிகிறது. கோயில்களில் பூசைகளும் சிறப்புத் திருவிழாக்களும் எவ்விதத்தடையும் குறைவுமின்றி நடைபெற போதுமான திட்டங்களை வரையறை செய்திருந்தனர் என்பதையும், சங்க காலத்தில் அரசர்கள் குறுநில மன்னர்கள் திருக்கோயில்களுக்கு வேண்டிய நிவந்தங்களையும் பொன் பொருட்களை வழங்கியதையும் அறியமுடிகிறது.

## செங்கற்களால் கட்டப்பட்ட கோயில்

சங்க காலத்தில் சோழ மன்னர்களது இறுதி அரசனாகக் கருதப்படும் செங்கண்ணான் என்பவன் சுமார் எழுதத்தெட்டு மாடக் கோயில்களைக் காவிரியாற்றின் கரையோரத்தில் எடுப்பித்தான் என்று கருதப்படுகிறது. ஆனால் அவற்றுள் ஒன்றுகூட நமக்குக் கிடைக்கவில்லை. அவை செங்கல் சுதையால் கட்டப்பட்டிருந்ததால் அழிந்தன போலும். செங்கற்களால் கட்டப்பட்ட இறைவன் உறையும் கட்டடம் வீழ்ந்த செய்தியைக்கூட சங்க இலக்கியப் பாடல் ஒன்று படம்பிடித்துக் காட்டுகிறது. இதனை,

**“இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**

**மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து**

**எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று**

**ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை'' (அகம். 167:13–16)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## நடுகல் வழிபாடு

சங்க காலத்தில் தமிழகத்தில் இறந்தோரை வழிபடும் வழக்கம் இருந்துள்ளதனையும் வீரதீர மரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டதனையும்அறியலாம்.

தமிழகத்தில் நடுகல் வழிபாடு சங்க காலத்திற்கு முன்பிருந்தே வந்துள்ளதை அறியமுடிகிறது. பெருங்கற்காலம் தொடங்கிய காலத்திலிருந்தே தமிழகத்தில் நீத்தார்க்கு நினைவுக் கற்கல் எடுப்பதும் அவர்களை வழிபடும் வழக்கமும் இருந்து வருகிறது. இவ்வாறு இறந்து பட்டவர்களுக்கு எடுக்கப்படும் நடுகல் சிறப்பாகக் கருதப்பட்டு வந்துள்ளது. நடுகல்லானது நினைவுக்கல் என்றும் வீரக்கல் என்றும் அழைக்கப்படுகிறது.

போரில் இறந்த வீரனின் நினைவாக அவனுடைய பெயரும் பெருமையும் எழுதி நடப்பட்டது. நடுகல் வழிபாடு மிகவும் பழமையான வழிபாடாகும். நடுகல் வழிபாடே உருவ வழிபாட்டிற்கு வழியமைத்துக் கொடுத்தது எனலாம்.

## தொல்காப்பியத்தில் நடுகல்

காலத்தால் முந்திய முதன்முதலில் கிடைத்த இலக்கண நூல் தொல்காப்பியமாகும். முதற்கண் நடுகல் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. குறிஞ்சி நிலத்தில் ஏற்படும் போருக்கு வெட்சிப்போர் என்று பெயர். இது ஆநிரை கவர்தலும் ஆநிரை கவர்ந்து சென்ற பசுக்களை மீட்கும் போதும் எடுப்பது வழக்கம். இதனைத் தொல்காப்பியர் ஆறுநிலைகளாகக் குறிப்பிடுவர். இதனை,

**''காட்சிக் கால்கோள் நீர்ப்படை நடுதல்**

**சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தவென்று**

**இருமூன்று வகையிற் கல்லொடு புணர''[26]**

எனும் இவ்வடிகளில் காட்சி, கால்கோள், நீர்ப்படை நடுதல், பெரும்படை, வாழ்த்தல் என நடுகல் எடுத்து வழிபடும் சடங்கு முறைகளைக் குறிப்பிட்டுள்ளார். இதில் காட்சி என்பது நடுகல்லுக்குரிய சிறந்த கல்லை எத்தகைய புனிதமான இடத்திலிருந்து கொண்டு வருவது

என்பதை முடிவு செய்து அங்கிருந்து எடுத்து வருவதனைக் குறிக்கும். சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்குக் கோட்டம் எடுக்கச் சேரன் செங்குட்டுவன், இமயத்திலிருந்து கல்லெடுத்து வந்த செய்தி இடம் பெற்றிருக்கிறது. மேலும் தொல்காப்பியர் சொன்ன ஆறுவிதச் செய்திகளும் இளங்கோவடிகள் பெயர் சூட்டியிருப்பதும் இங்கு நினைக்கத்தக்கதாகும்.

காட்சி என்பது கல்லின் அளவு. அதன் தன்மைகளை ஆராய்ந்து கல்லைத் தேர்ந்தெடுத்தல். இவ்வாறு தேர்ந்தடுக்கப்பட்ட கல்லிலே ஓர் உருவம் செதுக்கப்படும். இவ்வுருவம் சில விதிகளுக்குட்பட்டு அமைக்க வேண்டும். கால்கோள் என்பது அந்தக் கல்லை நடுவதற்குரிய நல்ல நிமித்தத்தைப் பார்த்தல், நீர்ப்படை என்பது அக்கல்லை நீராட்டுதல், 'நடுதல்' என்பது மறவன் இறந்த இடத்திலோ வேறு ஏற்ற இடத்திலோ கல்லை வீரனாகப் பாவித்து அவன் நினைவாக நடுதல் ஆகும்.

பெரும்படை என்பது நடுகல்லுக்கு முன் பெருஞ்சோறு வைத்து வழிபடுவதாகும். இன்றும் இறந்தவர்களுக்குத் திதி கொடுக்கின்ற பொழுது அவர்கள் விரும்பிச் சாப்பிடும் உணவைப் படைப்பது என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். வாழ்த்தல் என்பது இறந்துபட்ட வீரனின் புகழைப் பாடுதலாகும். இறைநிலையை அடைந்துவிட்ட வீரனைத் தங்களைக் காக்குமாறு வேண்டுவதாகவும் கொள்ளலாம்.

## இலக்கியத்தில் நடுகல் வழிபாடு

போரில் மாய்ந்த மறவர்களைப் பெரிதும் மதித்து அவர்களின் பெயரையும், வீரச் செயல்களையும் கல்லிற் பொறித்து, கல்நட்டு, மாலை சூட்டிப் படையலிட்டு மக்கள் வழிபாடு செய்தனர். நடுகல் வழிபாட்டை இறந்தவர்களின் உறவினர் மட்டுமின்றி பிறரும் செய்தனர். வேங்கைப் பூவைப் பனந்தோட்டிற் புனைந்து தொடுத்து இலைமாவைச் சூட்டிக் கோவலர் வழிபாடு செய்ததை,

**''ஊர்நனி இறந்த பார்முதிர் பறந்தலை**

**ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்**

**போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்**

**பல்லான் கோவலன் படலை சூட்ட'' (புறம். 265:1–4)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

அதியமான் நெடுமானஞ்சி போரில் மாண்டபின் அவனுக்கு நடுகல் நாட்டிக் கல் வைத்து வழிபட்டபோது, நாடு கொடுப்பினும் ஏலாதவன் இக்கல்லை ஏற்பனோ? என்று ஔவையார் கேட்டச் செய்தியை,

**“நடுகற் பீலி சூட்டி நாரரி**

**சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ?**

**கோடுயர் பிறங்குமலை கெழீஇய**

**நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே’’ (புறம். 232:3–6)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

பகைவரை எதிர்த்துப் போராடிக் களிறுகளை வீழ்த்தித் தாமும் மாய்ந்த மறவர்களின் நடுகல்லை வழிபடுதலின்றி, நெல்லைச் சொரிந்து வழிபடும் கடவுள் வேறில்லை என்பதை,

**“ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி**

**ஒளிறேந்து மருப்பின் களிறெறிந்து வீழ்த்தெனக்**

**கல்லே பரவின் அல்லது**

**நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே’’ (புறம். 335:9–12)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. போர் முனையில் போரிட்டு யானைகளைக் கொன்று இறந்தவனுக்கு வைக்கப்பட்டுள்ள நடுகல்லைத் தெய்வமாக வணங்குவதைவிடவும் வேறு தெய்வம் இவ்வூரில் இல்லை என்று கூறப்படுகிறது. தெய்வத்தின் செயல்களை அடிப்படையாகக் கொண்டு இவ்வெண்ணம் முகிழ்த்தது எனலாம். தெய்வம் என்றால் மக்களைக் காத்து நிற்கும் என்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டு. அதேபோல்தான் பகைவர்களிடமிருந்து மக்களைக் காப்பாற்ற போரில் வீரமரணமடைந்த வீரனைத் தெய்வமாக்கி வணங்குவதை விடவும் சிறந்த தெய்வம் இல்லை என்ற பொருளில் புலவர் கூறியுள்ளார்.

வீரமறவருக்குப் பெருமைச் சேர்க்கும் பொருட்டு நடுகல் நாட்டி, அதை நீராட்டி, மஞ்சள் பூசி ஆத்தி நாரால் கரந்தைப் பூவைத் தொடுத்து மாலையாக்கி வழிபட்டனர். இதனை,

“தொடிதோள் இவர்க! எவ்வமும் தீர்க!

நெறிஇருங் கதுப்பின் கோதையும் புனைக!

ஏறுஇடை இனநிரை பெயர, பெயராது

செறிசுரை வெள்வேல் மழவர்த்தாங்கிய

தறுக ணாளர் நல்இசை நிறுமார்

பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்

நட்ட போலும் நடாஅ நெடுங்கல்

அகல்இடம் குயின்ற பல்பெயர் மண்ணி

நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய

அம்பு கொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்

செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி

வரிவண்டு ஆர்ப்பச்சூட்டி, கழற்கால்

இளையர் பதிப்பெயரும்’’ (அகம். 269:1–13)

என்னும் பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

நடுகற்களான தம் முன்னோர்களைத் தம்குலதெய்வமாகக் கருதி வணங்கும் மரபும் இருந்துள்ளது. படையலிடுதலோடு வேண்டுதலும் செய்தனர். நடுகற்களான தம் முன்னோரின் முன்பு நின்று போருக்குச் சென்றுள்ள வீரனின் மனைவி வேண்டுதல் செய்ததை,

“நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது

விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்

ஒ…………… வேந்தனொடு

நாடுதரு விழுப்பகை எய்துக எனவே’’ (புறம். 306:4–6)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. போரில் நீத்தார் வழிபாடாகிய நடுகல் வழிபாட்டைத் தெய்வங்களைக் காட்டிலும் சிறந்ததாகப் பழந்தமிழர் வழிபட்டனர் என்பது புலனாகிறது. இன்றும் தமிழர் மரபில் தம் குடியில் இறந்துபோன முன்னோர்களைத் தெய்வமாக வழிபடுவதும் அவர்களுக்கு நினைவிடங்கள் எழுப்பி, அவர்கள் இறந்த நாளில் அன்னதானமிட்டு நினைவுநாளைக் கொண்டாடுவதும் நடைமுறையில் இருப்பதை அறியலாம். அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செம்மையுறச் செய்தவர் மன்னராலும் மற்றவர்களாலும் போற்றப்பட்டனர் என்பதைப் புறநானூறு விளக்குகின்றது.

> **“இறந்து போனவர்களின் நினைவாக நடப்படும் நடுகற்கள் முன்னோர் வழிபாட்டுடன் தொடர்புடைய நடுகற்கள் மறவர்களின் வீரச் செயலைப் புகழும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளதாக சங்கப் பாடல்கள் தெரிவித்துள்ளன. சங்கப்பண்பாட்டிற்கு முந்தைய சமூகமான பெருங்கற்படைக்கால பண்பாட்டிலேயே இவ்வாக்கம் பெருகி இருந்துள்ளது’’[27]**

என்று சிலம்பு நா.செல்வராசு குறிப்பிடுகின்றார்.

பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி போருக்குச் செல்லும்போது பசு, பெண்டிர், மூத்தோர் போன்றவர்களோடு இறந்துபோன முன்னோர்க்கு ஆற்றவேண்டிய கடன்களைச் செய்வாரையும் பாதுகாப்பாக இருத்திவிட்டுப் போர் செய்வான் என்பதனை,

> **“தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
>
> **பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்’’ (புறம். 9:3–4)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. இறந்தோர்க்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்வோர் ‘பொன்போற் புதல்வர்’ என்று போற்றப்பட்டனர்.

## பீடும் பெயரும் எழுதும் மரபு

வீரர்களின் உருவத்தினை நடுகல்லில் பொறித்து அவர்தம் பேரையும் ஊரையும் அதில் எழுதி வைத்தனர். அவன் வீரத்தைக் காட்டும் வகையில் அவனுடைய படைக் கருவிகளையும் அருகில் ஊன்றச் செய்துள்ளனர். இதனை,

‘‘நடைமெலிந்து ஒழிந்த சேண்படர் கன்றின்

கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்

பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்

பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்

வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்

வெருவரு தகுந கானம்’’ (அகம். 131:8–13)

என்றும்,

‘‘மருங்கல் நுணுகிய பேஎம்முதிர் நடுகல்,

பெயர்பயம் படரத் தோன்று குயில்எழுத்து’’ (அகம். 297:5–8)

என்றும்,

‘‘விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்

எழுத்துடை நடுகல்’’ (ஐங்குறு. 352:1–2)

என்றும்,

‘‘அரம்போழ் நுதிய வாளி அம்பின்

நிரம்பா நோக்கின் நிரையம் கொண்மார்,

நெல்லி நீளிடை எல்லி மண்டி,

நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்

பெயரும் பீடும்எழுதி, அதர்தொறும்

பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்

வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்’’ (அகம். 67:5–11)

என்றும் வருகின்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகிறது.

## பெருஞ்சோற்று விழா

தெய்வமாக ஆக்கப்பட்டு வணங்கப்பட்ட மனிதர்களுக்கும் சங்ககால மக்கள் விழா

எடுத்துள்ளனர். வீரவணக்க விழாவாக இவ்விழா அரசர்களால் கொண்டாடப்பட்டுள்ளது. இல்லங்களிலும் பெருஞ்சோறு அளிக்கப்பட்டது. இது பெருவிருந்து என்று வழங்கப்பட்டுள்ளது. போர்க்காலங்களில் போர்க்களத்தில் இறந்த வீரர்களின் வீரத்தைப் போற்றும் வண்ணம் இருக்கின்ற வீரர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. இது 'பெருஞ்சோறு' 'பிண்டச்சோறு' என்று வழங்கப்பட்டது. அரசனின் அரண்மனையிலும் 'பெருஞ்சோற்று விழா' நடைபெற்றுள்ளது. அதியமான் சிறுசோற்று விழா, பெருஞ்சோற்று விழா இரண்டையுமே நிகழ்த்தியுள்ளான். இதனை,

**''சிறுசோற்றானும் நனிபல கலத்தன; மன்னே**

**பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன; மன்னே!'' (புறம். 235:4–5)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

அரசனுடைய வளமான அரண்மனையில் பெருஞ்சோற்று விழா நடைபெற்றுள்ளது. அரசன் இறந்தபின் அவன் பெருஞ்சோறு வழங்கிய முற்றம் பாழ்பட்டதை,

**''வரையாப் பெருஞ்சோறற்று முரிவாய் முற்றம்**

**வெற்று யாற்று அம்பின்எற்று? அற்றுஆகக்**

**கண்டனென் மன்ற; சோர்க என்கண்ணே'' (புறம். 261:3–5)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

நீடூருக்கு அரசனாகிய கூர்மையான வாளினையுடைய எவ்வி என்பவன் தன்னுடைய படைத்தலைவனுக்கு விடியற்காலையில் உறந்தூர் என்னுமிடத்தில் கள்ளினை உண்டு பெருஞ்சோற்று விழாவினை நடத்தினான் என்பதனை,

**''யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன்**

**வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்**

**நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்**

**அரிமண வாயில் உறந்தூர் ஆங்கண்**

**கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்இமிழ் அன்ன'' (அகம். 266:10–14)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

> **“நடுகல் வழிபாடு தோன்றியதைப் போன்று கோயிற் கட்டிடக்கலையும் இழவு வினைகளை ஒட்டியே வளர்ந்திருக்கலாம் என அறிஞர் கருதுவர். வட்டமான நிலப்படமுள்ள கோயில்களைக் கவனிக்கும்பொழுது இவற்றின் தொடக்கம் பெருங்கல் வடிவுப் புதை குழிகளிலே அமைந்துள்ளது எனலாம்’’[28]**

என்பர் கைலாசபதி.

பின்னாளில் பெருங்கோயிற் கட்டிடக்கலை உருவாவதற்கு இந்த நடுகல் வழிபாடு மூலமாய் அமைந்தது என்று அறிஞர்கள் கருதுகின்றனர். மேலும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு தலத்திற்கும் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டு, இருந்த இடத்தில் எழுந்துள்ளதை நாம் அறியமுடியும். பண்டைத்தமிழரின் போரிலே வீரமரணம் அடைந்தவரை வணங்கும் வழக்கம் காலமாற்றத்தில் சிறு தெய்வ வணக்கமாக மாறியது என்பதும், இது சமுதாய மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதும் பகுத்தறிந்து கொள்ளமுடியும்.

சங்க காலத்திலிருந்த வீரவழிபாடாகிய நடுகல் வழிபாட்டின் பரிணாம வளர்ச்சியே பிற்காலத்தில் எழுந்த கோயில் வழிபாட்டிற்கும் உருவ வழிபாட்டிற்கும் வழிவகுத்தது என்பர்.

> **“பழந்தமிழர் வாழ்வில் நடுகல் வழிபாடு மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. நடுகல்லின் அமைப்பே பின்னர் தோன்றிய ‘கோயில்’ என்ற கட்டிட அமைப்பிற்கு முன்னோடியாக முன்மாதிரியாக அமைந்துள்ளது. நடுகற்கள் பெரும்பாலும் மரங்களின் அருகிலேயோ நீர்நிலைகளின் அருகிலேயோ, சந்திகளிலேயோ, ஊர் எல்லைகளிலேயோதான் அமைந்துள்ளன. மேலும் நடுகற்கள் மேல் வெயில்படாதிருக்க துணிப்பந்தல் அமைப்பர். விலங்கு முதலியவற்றால் ஊறு ஏற்படாமலிக்க சுற்றிலும் வில், வேல், வாள், கேடயத்தை ஊன்றுவர். நடுகல்லில் தங்கியுள்ள பல்லியிடம் சகுனம் கேட்பர்’’[29]**

என்பர் இராசு.பவுன்துரை.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முறையில் அமைக்கப்படுகின்ற கோயில்களுக்கு வித்தாக அமைத்தது நடுகல் வழிபாடே எனலாம். கோவில்களில் தல விருட்சங்கள் சிறப்பாக வழிபடப்படுவதும் கோவில்களில் தெய்வங்களுக்குப் பீடம் அமைத்து தெய்வங்களின் உருவங்களைச் செதுக்கி வைத்து வழிபாடு செய்வதும் நடுகல்லில் வீரனின் பீடும் பெயரும் எழுதி வணங்கியது போல தெய்வங்களின் பெருமைகள், செயல்கள், தெய்வங்களைக் குறித்த கதைகள் போன்றவற்றைக் கோயில்களில் ஓவியங்களாகவும் சிற்பங்களாகவும் வரைந்து செதுக்கப்படுவதும் நடுகல் வழிபாட்டின் வளர்ச்சியே என்பர்.

## தொகுப்புரை

- காடுகளிலும் குன்றுகளிலும் வாழ்ந்த மனிதன் இடி, மின்னல், மழை, காற்று, கொடிய விலங்குகள், நச்சு உயிர்கள் போன்றவற்றைக் கண்டு அச்சமுற்றான். அவ்வச்சத்தின் காரணமாக இயற்கையைக் கட்டுப்படுத்தும் நோக்கில் இயற்கையை வணங்க ஆரம்பித்தான்.
- இருளைப் போக்கும் தன்மையில் சூரியனை வணங்கினர். சூரியனுக்குத் தனியாகக் கோயில் எழுப்பி வணங்கியதற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. சிலப்பதிகாரம் முதன்முதலில் 'உச்சிக்கிழான் கோட்டம்' என்று குறிப்பிடுகிறது. அதன்பின் தோன்றிய இலக்கியங்களும் உச்சிக்கிழான் கோட்டம் பற்றிக் குறிப்பிடாமையால் கடல் கோள்களால் அழியப்பட்டிருக்கும் என்று அறியமுடிகிறது.
- தீயினைக் கண்டுபிடிக்காத சூழலில் இருளினைக் கண்டு அஞ்சத் தொடங்கிய மனிதன் வெளிச்சமும் குளிர்மைத் தன்மையுடையதுமான திங்களைக் கண்டவுடன் மகிழ்ச்சியடைந்தான். இம்மகிழ்ச்சியின் காரணமாக திங்களை வணங்கத் தொடங்கினான் என்பதனைக் காணமுடிகின்றது.
- மழைவேண்டி வணங்குதல், வெள்ளப் பெருக்கினால் ஏற்பட்ட அச்சத்தின் வழி மழை நிற்க வேண்டும் என்பதற்காக வணங்குதல் என்ற இருவேறு நிலைகளில் வழிபட்டனர் என்பதனைக் காணமுடிகின்றது.
- அணங்கு வழிபாடு உருவமில்லாத தெய்வமாகவும், ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாக விளங்குவதை அறியமுடிகிறது.
- ஐவகை நிலங்களுக்கேற்ப மக்களுடைய வழிபாட்டு முறைகளும், வழிபாட்டுத் தெய்வங்களும் அமைகின்றன. குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும்,

மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும், பாலைக்குக் கொற்றவையும் தெய்வங்களாக அமைகின்றன.

- நடுகல். பிற்காலத்தில் கோயில் என்ற நிறுவனம் அமைய அடித்தளமாக அமைந்தது.
- நடுகல் வழிபாடு நடைபெறும் முறை மற்றும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டிருப்பதைக் கொண்டு பெருங்கோயில் கட்டிடக் கலை வளர்ச்சிக்கு நடுகல் வழிபாடு அடிப்படையாக இருந்திருக்கிறது என்பதை அறியலாம்.

# சான்றெண் விளக்கம்

1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 504
2. தொல். பொருள். 85
3. இரா. சீனிவாசன், சக்தி வழிபாடு, ப. 136
4. ந.சி. கந்தையா, தமிழர் சரித்திரம், ப. 124
5. சிலம்பு. கனாத்திறம் உரைத்த காதை. 11
6. இரா. மதிவாணன், சிலம்பின் காலக்கணிப்பு, ப. 120
7. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 59–61
8. உ.வே.சா. (ப.ஆ.), சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், ப. 250
9. சிலம்பு. நடுகல் காதை. 89
10. வாழ்வியற்களஞ்சியம் தொகுதி–8, ப. 416
11. தொல். சொல். 57
12. தொல். பொருள். 513
13. தொல். எழுத்து. 228
14. மா. இராசமாணிக்கனார், மொஹஞ்சதரோ அல்லது சிந்துவெளி நாகரிகம், ப. 14
15. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 18
16. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 59
17. குறள். 20
18. தொல். பொருள். 252
19. சிலம்பு நா. செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப. 38
20. கடிகாசலம் (ப.ஆ.), சங்க இலக்கிய கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு, ப. 192
21. கா.சு. பிள்ளை, தமிழர் சமயம், ப. 46
22. மு. சண்முகம் பிள்ளை, முதற்குறித்த நூல், பக். 70–71
23. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழர் வீரம்த, ப. 7
24. தொல். பொருள். 1005
25. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப. 64
26. தொல்.பொருள். 5
27. சிலம்பு நா.செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப. 45

28. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 38

29. செ. இராசு, 2007, ப. 60

# முடிவுரை

மனிதனின் உணவு, உடை ஆகியவற்றின் தேடலோடு உறையுள் பற்றிய தேடலும் அவசியமானதாக இருந்தது. இயற்கை சீற்றம், கொடிய விலங்குகள் முதலானவற்றிலிருந்து தற்காத்துக்கொள்ள உறையுள் அவசியமாயிற்று. கற்குகை, மரப்பொந்து ஆகிய இயற்கையிடங்கள் தொடக்ககால மனிதனின் வசிப்பிடமாக இருந்த போதிலும் அவை முழுமையான பாதுகாப்பிற்குத் தேவையானதாக அமையாததால் உறையுளை கட்டமைக்கும் சிந்தனையும் மனிதனிடம் தொடங்கியது. இவ்வாறு மானுட வாழ்விற்குத் தேவையான மிக முக்கிய கருவிகளாம் உணவு, உடை, உறையுள் ஆகியனவற்றில் மேம்பட்ட சமுதாயமே நாகரிகச் சமுதாயமாகக் கருதப்படுகின்றது.

பண்டைத் தமிழர் கலையோடியைந்த வாழ்க்கை வாழ்ந்தனர். கலை மனிதனின் உள்ளக் கிளர்ச்சியோடு அறிவுத்தூண்டலுக்கும் அதன் பிற துலங்கலுக்கும் காரணமாக அமைந்தன. கலை மனிதனின் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்களையும் உண்மைகளையும் அழகியல் உணர்வோடு வெளிப்படுத்துகிறது.

குறிஞ்சி நிலம் மலையும் மலை சார்ந்த பகுதியாகும். குறிஞ்சி மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரேமுறை பூக்கும் மலராகலானும் அதன் சிறப்புக்கருதி அந்நிலத்திற்குக் குறிஞ்சியெனப் பெயர் பெற்றது. குறிஞ்சி நில மக்கள் குன்றநாடன், குன்றுவர், ஆடவர், கொடிச்சி, குறத்தி, குளத்தியர், வேட்டுவித்தியர், குன்றுவித்தர் எனப் பெயர் பெற்றனர். இவற்றுள் குறவன், கானவன் என்ற இரண்டு இனங்கள் மட்டும் பெரும்பான்மையில் பேசப்படுகின்றன. குறிஞ்சி நிலம் மலைப்பகுதி ஆதலின் அங்கு வேட்டையாடுதல், தேனெடுத்தல், தினை பயிரிடுதல், தினைப்புனம் காத்தல், கிழங்கு அகழ்தல் போன்ற தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன என்பதை அறியமுடிகிறது. குறவர் காட்டிலிருந்து வெட்டிக்கொணர்ந்த மரத்தினுடைய கம்புகளை நட்டுக் கட்டிய குச்சி வீடுகளில் வாழ்வர். இக்குடியிருப்பை நடுகாற்குரம்பை என்பர். குறுகிய அமைப்பையுடைய சிறிய வீடு குறியிறைக் குரம்பை என்றும், காட்டுப்புல்லால் வேயப்பட்ட குடிசை புல்வேய் குரம்பை என்றும்

கூறப்படுகின்றது. வரகின் வைக்கோலைக் கொண்டு குடிசை வேய்ந்தனர். செல்வ வளமிக்க வீடானது நல்இல் என்று அழைக்கப்பட்டுள்ளது என்பதையும் உணரமுடிகின்றது.

குறிஞ்சி நில மக்கள் தங்களது தினைப்புனங்களைக் கவர வரும் பறவைகள் மற்றும் விலங்குகளிடமிருந்து தினைப் பயிறுகளைக் காக்க பரண் வீடுகளை அமைத்தனர்.

முல்லை நிலம் காடும்காடு சார்ந்த இடமாகும். இந்நிலத்தில் முல்லை மலர் சிறந்திருந்தமையால் முல்லை எனப் பெயர் பெற்றது. முல்லை ஒழுக்கத்திற்கு உகந்த இடமாக முல்லை நிலம் சிறப்பிக்கப்பட்டது. முல்லை நில மக்கள் அண்ணல், தோன்றல், குறும்பொறைநாடன், ஆயர், கோவலர், இடையர், பொதுவர், ஆய்ச்சியர், கோவிச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர் எனப் பெயர் பெற்றனர். ஆடுமாடுகளை மேய்த்தல், தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், நெய்யுருக்குதல், பால் கறத்தல் போன்ற பல தொழில்களில் ஈடுபட்டனர். உழவுத்தொழில் செய்யும் ஆயர்களும் இருந்தனர். முல்லை நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களின் குடில்கள் குறுகிய கால்களையுடைய தன்னுவதற்குரிய தழைகளைக் கட்டி வைத்திருப்பர். அக்குடிசை வீடுகளின் முற்றங்கள் மாடுகளைக் கட்டி வைப்பதற்குரிய தாம்புகள் கட்டப்பெற்ற சிறிய முளைகளைக் கொண்டிருந்தன. வெள்ளாடும் செம்மறியாடும் அடைவதற்குரியனவாக வேலி சூழ்ந்த கிடைகளும் அங்கு இருந்தன என்பதை உணரமுடிகிறது.

மருதநிலம் வயலும் வயல் சார்ந்த இடமுமாகும். இந்நிலத்தில் மருத மரங்கள் மிகுதியாக இருந்ததால் மருதம் எனப்பெயர் பெற்றன. முல்லை நில மக்கள், மகிழ்நன், ஊரன், உழவன், கனமன், கடையர், மனைவி, உழத்தியர், கடைச்சியர் எனப்பட்டனர். இந்நில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர்ப் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடாவிடுதல் போன்ற தொழில்களை மேற்கொண்டனர். மருதநிலத்தில் வளமுடைய உழவர்களின் வீடுகளும், வளமற்ற உழவர்களின் குடிசைகளும் என இருவேறுபட்ட வாழிடங்கள் இருந்துள்ளன. புதிய வைக்கோலால் வேயப்பட்டு வரப்பிடத்தே உள்ள குடிசையின் முற்றத்தில் அவல் இடிக்கும் ஓசைக்குக் களிகள் அஞ்சுகின்ற இடையறாத புதுவருவாய் உடைய கழனி என்று குடிசையில் வாழும் ஏழ்மையானவருடைய இல்லம், நீண்ட ஏணிக்கும் எட்டாத உயரத்தையும் பழையனவாகிய நெல்லினையும் உடைய நெற்கூடு உடைய நல்ல இல்லம் என்று இருவேறு இல்லங்கள் இருந்துள்ளன.

நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமுமாகும். நெய்தல் நில மக்கள் சேர்ப்பன், புலம்பன், கொண்கன், துறைவன், பரதவர், வலையர், அணவர், நுளையர், பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனப் பெயர் பெற்றனர். மீன் பிடித்தல், மீன் விற்றல், உப்பு விளைவித்தல், உப்பு விற்றல், முத்தெடுத்தல், வாணிகத்தொழில் முதலிய தொழில்களில் பரதவ மக்கள் ஈடுபட்டனர். கடற்கரை நிலத்துக் கிடைக்கும் மூங்கில், கருப்பந்தட்டை, வெள்ளிய மரக்கொம்பு, நாணற் புல், தாழை என்பவற்றைக் கொண்டு குரம்பை அமைத்திருந்தனர். புன்னை மரக் கொம்புகளால் குரம்பையின் முன்னால் பந்தல் அமைத்தனர். பந்தலின் மேல் பசுங்காய் தரும் அரை கால், புடோல் போன்ற கொடிகளை படரவிட்டனர் என்ற செய்தியினை அறிந்துகொள்ள முடிகிறது.

பாலை என்பது குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த நிலமாகும். பாலை நிலத்தில் வாழும் மக்கள் விடலை, காளை, மீளி, எயிற்றி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் எனப் பெயர் பெற்றனர். பாலை நிலத்தில் வாழும் மக்கள் ஈந்தின் இலையால் வேயப்பட்ட குடிசையில் வாழ்ந்தனர். ஈந்தின் இலை சொரசொரப்பான முதுகுப் புறத்தையும், கொழுவிய மடலையும், வேல் போலும் நுனியையும் பொருந்தியது. முள் போன்ற அதன் இலை கொண்டு குரம்பை வேயப்பட்டு இருந்ததால், கூரையில் அணிலும் கருப்பையும் ஓடாமல் காக்கப்பட்டது. எளிய பொருள்களைக் கொண்டு அரிய நுட்பத்துடன் எயினர்கள் குரம்பை அமைந்து வாழ்ந்த நிலையினை அறியமுடிகிறது.

பண்டைத் தமிழர்கள் அவரவர் வசதிக்கேற்ப இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். நாகரிக வளர்ச்சி பெற்ற தமிழர்கள் தனது தொடர் முயற்சியின் விளைவாகவும், அழகு மற்றும் கற்பனை உணர்வுகளின் அடிப்படையிலும் கட்டுமானத் தொழில் நுட்பத்தினை வளர்ந்தெடுத்துள்ளனர். நகரில் கட்டடங்கள் மிக உயரமானதாகவும், மாட வீடுகள் நிறைந்ததாகவும் காணப்பட்டன. வீடுகள் மட்டுமன்றி செயற்கை முறையில் உருவாக்கப்பட்ட கிணறு, குளம்போன்ற நீர் நிலைகளையும், சமயப்பணி செய்யும் பள்ளிகளையும், துறைமுகங்கள், கலங்கரை விளக்குகள் போன்றவற்றையும் அமைத்து சிறப்பாக வாழ்ந்துள்ளனர். காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி, முசிறி, தொண்டி, எயிற்பட்டினம் போன்ற நகரங்களின் அமைப்பைப் பற்றியும் அறியமுடிகிறது.

மன்னர்கள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தம் நாட்டு மக்களையும் பகைவரிடமிருந்து காத்துக் கொள்வதற்காகத் தங்கள் இருப்பிடத்தைச் சுற்றித் தங்கள் நாட்டின் எல்லையில் அரண் அமைப்பர். பண்டைக் காலத்திலிருந்து மனிதன் தனக்கு

சாதகமாகவும் எதிரிக்குப் பாதகமாகவும் ஓரளவுக்கு அமைத்திருந்த இயற்கை அமைப்பைபுடைய இடங்களைத் தேர்ந்தெடுத்துச் செயற்கை முறைகளில் அரண் அமைத்து பாதுகாப்பான இடங்களில் வாழ்ந்தான். செடி, கொடிகளாலும் மரங்களாலும் அடர்ந்த காடு காணப்படுமாயின் அந்நாட்டுக்கு அக்காடு அரண் ஆகும். இதுவே காட்டரண் எனப்படும். நீரால் சூழப்படும் அரண் நீரரண் ஆகும்.நீரரண் இயற்கையான கடலும் ஆறும் பாதுகாப்பு அரணாக அமைவதாகும். அகழி அல்லது கிடங்கு என்னும் செயற்கை நீர்நிலைகளையும் அரணாக அமைப்பதுண்டு. புறமதிலைப் பற்றாமை பொருட்டு அதன் புறத்தேயுள்ள நிலமும், பகைவர் முற்றுகை நீடித்திருக்கும்போது அகத்தோர்க்கு வேண்டும் உணவுப் பொருட்களைப் பயிர் செய்யும் வகையில் மதிலின் உட்புறமாக விடப்படும் தண்டை நிலமும் நிலவரண்கள் ஆகும்.

ஒரு நாட்டிற்குக் காவலாக மலை அல்லது மலைத்தொடர் அரணாக அமைவது மலையரண் ஆகும். ஒரு நாட்டிற்கு மதில்கள்தான் சிறந்த அரண்களாக விளங்கின. கோட்டை மதில்கள் உயரம், அகலம், திண்மை, பாதுகாப்பு என்னும் நான்கு சிறப்பு அம்சங்களைக் கொண்டிருந்தன. தமிழர்கள் தங்கள் கோட்டை மதிலில் பல கருவிகளைப் பொருத்தியும் பல ரகசிய அம்பு ஏவும் அறைகளையும், கண்காணிப்பு அறைகளையும் பகைவர்கள் அறியமுடியாதபடி அவர்களைத் தாக்கும் வகையில் அமைத்து அரண்களை உண்டாக்கியிருந்தனர்.

பகைவர் எளிதில் தாக்கா வண்ணம் அரண்மனைகளை வலிமை வாய்ந்ததாக அமைத்தனர். அரசியின் அந்தப்புரம் மிகுந்த கலை நயத்துடன் அழகுற அமைக்கப்பட்டிருந்தது. காற்றும் வெளிச்சமும் புகும் வகையில் சாளரங்களும், பருவத்திற்கேற்ற வகையில் வேனிற்பள்ளி கூதிர்ப்பள்ளியும் மலைக்காலங்களில் கட்பிடல்களின் மேல் விழுகின்ற நீர்த் தாங்காமல் கீழே விழுவதற்கு நீர்ப்பந்தலும் வேயாமாடம் போன்றவைகளையும் வடிவமைத்திருந்தனர்.

ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது பகை கொண்டு படையெடுத்து வருவதலைத் தடுக்கவும் அவற்றிடமிருந்து நாட்டைப் பாதுகாக்கவும் தகுதியாக நாட்டு எல்லையின் நான்கு பகுதிகளில் அமைக்கப்படுவது அரண். அதனால் பண்டைய அரசர்கள் அரண் அமைப்பதில் அக்கறை காட்டினர். காட்டரண், நீரரண், நிலவரண், மதிலரண், மலையரண் என்ற ஐந்து வகையான அரண்களையும் அமைத்திருந்தன இவ்வாய்வின் வழி அறியமுடிகிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்


1. கதிர் முருகு.,(உ.ஆ.,)
திருமுருகாற்றுப்படை,
சாரதா பதிப்பகம்,
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை – 600 014,
முதற்பதிப்பு – மே 2009.

2. கதிர் முருகு., (உ.ஆ.,)
பெரும்பணாற்றுப்படை,
சாரதா பதிப்பகம்,
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை – 600 014,
முதற்பதிப்பு – மே 2009.

3. கதிர் முருகு., (உ.ஆ.,)
மலைபடுகடாம்,
சாரதா பதிப்பகம்,
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,

சென்னை – 600 014,

முதற்பதிப்பு – மே 2009.

4. கதிர் முருகு., (உ.ஆ.,) மதுரைக்காஞ்சி,

சாரதா பதிப்பகம்,

ஜி–4, சாந்தி அடுக்ககம்,

3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,

ராயப்பேட்டை,

சென்னை – 600 014,

முதற்பதிப்பு – மே 2009.

5. கதிர் முருகு., (உ.ஆ.,) நெடுநல்வாடை,

சாரதா பதிப்பகம்,

ஜி–4, சாந்தி அடுக்ககம்,

3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,

ராயப்பேட்டை,

சென்னை – 600 014,

முதற்பதிப்பு – மே 2009.

6. சாமிநாதைர். உ.வே., (உ.ஆ.,) பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும்,

தபீர் அச்சுக்கூடம்,

சென்னை,

ஐந்தாம் பதிப்பு – 1956.

7. சாமிநாதையர். உ.வே., (உ.ஆ.,) குறுந்தொகை மூலமும் உரையும்,

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்

நிலையம்,

கடற்கரைச்சாலை, பெசன்ட் நகர்,

சென்னை – 600 090,

ஐந்தாம் பதிப்பு – 2000.

8. சுப்பிரமணியன். ச.வே., (உ.ஆ.,) பத்துப்பாட்டு மூலமும் தெளிவுரையும்,

மணிவாசகர் பதிப்பகம்,

31, சிங்கர் தெரு, பாரிமுனை,

சென்னை – 600 108,

முதற்பதிப்பு – ஜீன் 2010.

9. சுப்பிரமணியன். ச.வே., (உ.ஆ.,) சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 1,

மணிவாசகர் பதிப்பகம்,

31, சிங்கர் தெரு, பாரிமுனை,

சென்னை – 600 108,

முதற்பதிப்பு – ஜீன் 2010.

10. சுப்பிரமணியன். ச.வே., (உ.ஆ.,) சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 2,

மணிவாசகர் பதிப்பகம்,

31, சிங்கர் தெரு, பாரிமுனை,

சென்னை – 600 108,

முதற்பதிப்பு – ஜீன் 2010.

11. சுப்பிரமணியன். ச.வே., (உ.ஆ.,) சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 3,

மணிவாசகர் பதிப்பகம்,

31, சிங்கர் தெரு,

பாரிமுனை,

சென்னை – 600 108,

முதற்பதிப்பு – ஜீன் 2010.

12. சோமசுந்தரனார். பொ.வே., (உ.ஆ,) ஐங்குறுநூறு,

கழக வெளியீடு,

சென்னை,

பதிப்பு – 1966.

13. சோமசுந்தரனார். பொ.வே., (உ.ஆ,) கலித்தொகை,

கழக வெளியீடு,

சென்னை,

பதிப்பு – 1969.

14. சோமசுந்தரனார். பொ. வே., (உ.ஆ.,) குறுந்தொகை,

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்,

522, டி.டி.கே. சாலை,

ஆழ்வார் பேட்டை,

சென்னை,

மறுபதிப்பு – 2008.

15. சோமசுந்தரனார். பொ.வே., (உ.ஆ,) பத்துப்பாட்டு தொகுதி 1,2,

கழக வெளியீடு,

சென்னை,

பதிப்பு – 2009.

16. துரைசாமி பிள்ளை. ஔவை.சு., (ப.ஆ.,) பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1/140 பிராட்வே,
சென்னை – 1,
முதற்பதிப்பு – 1968.

17. துரைசாமி பிள்ளை. ஔவை.சு., (ப.ஆ.,) புறநானூறு மூலமும் பழையவுரையும்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1/140 பிராட்வே,
சென்னை – 1,
முதற்பதிப்பு – 1968.

18. நாராயணசாமி ஐயர். பின்னத்தூர்., (உ.ஆ.,) நற்றிணை,
திருநெல்வேலி தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18,
பதிப்பு – 2007.

19. நாகராசன். வி., (உ.ஆ.,) குறுந்தொகை மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 600 098.

20. மாணிக்கவாசகன். மா., (உ.,ஆ) அகநானூறு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை,

இரண்டாம் பதிப்பு – 1981.

21. மாணிக்கவாசகன். மா., (உ.ஆ.,) பரிபாடல்,

கழக வெளியீடு,

சைவ சித்தாந்த நூற்பதிபுக் கழகம் லிட்,

சென்னை 18,

நான்காம் பதிப்பு – 1975.

22. மாணிக்கவாசகன். மா., (உ.ஆ.,) ஐங்குறுநூறு,

கழக வெளியீடு,

சைவ சித்தாந்த நூற்பதிபுக் கழகம் லிட்,

சென்னை – 18,

நான்காம் பதிப்பு – 2009.

23. வேங்கடசாமி நாட்டார். ந.மு., (உ.ஆ.,) அகநானூறு,

கழக வெளியீடு,

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,

சென்னை,

முதற்பதிப்பு – 1944.

## துணைமைச் சான்றுகள்

1. அப்பாத்துரை.கா., ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்,

சைவ சித்தாந்த நூற்பதிப்பகம்,

திருநெல்வேலி.

2. அப்பாத்துரை. க., தென்னாடு,

மலர் நிலையம்,
சென்னை,
பதிப்பு – 1954.

3. அரங்க இராமலிங்கம்., சங்க இலக்கியத்தில் வேந்தர்,
பாரதி புத்தகாலயம்,
சென்னை,
பதிப்பு – 2003.

4. அறவாணன்.க.பா., அற்றைநாட் காதலும் வீரமும்,
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்,
முதற்பதிப்பு டிசம்பர் 2002.

5. ஆளவந்தார். ஆர்., இலக்கியதில் ஊர்ப்பெயர்கள்,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
பதிப்பு – 1984.

6. ஆறுமுகம்.அ., சங்க இலக்கியத்தில் குடும்பம் ஊடைமை அரசு,
பாவேந்தர் பதிப்பகம்,
திருச்சி,
முதற்பதிப்பு – நவம்பர் 1994.

7. இராகவன். அ., நம் நாட்டுக் கப்பற்கலை,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை – 5,
முதற்பதிப்பு – 1968.

8. இராச மாணிக்கனார். மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
அவ்வை அச்சகம்,

சென்னை,

பதிப்பு – 1970.

9. இராச மாணிக்கனார். மா., தமிழக ஆட்சி,

பாரி நிலையம்,

சென்னை,

இரண்டாம் பதிப்பு – 1972.

10. இராச மாணிக்கனார். மா., தமிழகக் கலைகள்,

பாரி நிலையம்,

சென்னை,

இரண்டாம் பதிப்பு – 1972.

11. இராச மாணிக்கனார். மா., மொஹெஞ்சொதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்,

திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

சென்னை.

12. இராமநாதன். லெ.ப.கரு., சங்ககாலத் தமிழர் வாழ்வு,

வெள்ளையன் பதிப்பகம்,

சென்னை,

பதிப்பு – 1958.

13. இராமநாதன். லெ.ப.கரு., பத்துப்பாட்டு வளம்,

பாரி நிலையம்,

சென்னை,

பதிப்பு – 1968.

14. இராமலிங்கம் பிள்ளை.வி., நாமக்கல் கவிஞர்., தமிழன் இதயம் கவிதைத்தொகுதி,

தமிழ்ப் பண்ணை,

தியாகராயநகர்,

சென்னை,

மூன்றாம் பதிப்பு – 1942.

15. இளங்குமரன். இரா., தென்னாட்டு வணிகம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1960.

16. இளம்பூரணர்., (உ.ஆ.,) தொல்காப்பியம் பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
சென்னை – 111,
மறுபதிப்பு – ஜுலை 1956.

17. இளம்பூரணர்., (உ.ஆ.,) தொல்காப்பியம் சொல்லதிகாரம்,
கழக வெளியீடு,
சென்னை,
1963.

18. கந்தயா பிள்ளை. ந.சி., தமிழர் சரித்திரம்,
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
நான்காம் பதிப்பு – 1964.

19. கடிகாசலம்., (ப.ஆ.,) சங்க இலக்கிய கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு,
மெய்யப்பன் பதிப்பு,
53, புதுத்தெரு,
சிதம்பரம் – 608 001,
முதற்பதிப்பு – டிசம்பர் 2004.

20. குருசாமி.ம.ரா.பே., பழந்தமிழகம்,
மெய்யப்பன் பதிப்பகம்,

சிதம்பரம்,
முதற்பதிப்பு – டிசம்பர் 2009.

21. கைலாசபதி.க., பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,
காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்,
669, கே.பி. சாலை,
நாகர் கோவில் – 629 001,
முதற்பதிப்பு – டிசம்பர் 1966.

22. சண்முகம் பிள்ளை. மு., சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டிடிடி ஐ அஞ்சல், தரமணி,
சென்னை – 113,
முதற்பதிப்பு – 1996.

23. சாம்பசிவன். ச., மாநகர் மதுரை,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
பதிப்பு – 1960.

24. சாமி. பி.எல்., சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்,
கழக வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு – 1967.

25. சாமி. பி.எல்., தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 2,
பதிப்பு – 1972.

26. சாமிநாதையர். உ.வே., (ப.ஆ.,) சீவக சிந்தாமணி மூலமும்

நச்சினார்க்கினியர் உரையும்,

உத்தமதானபுரம்,

உ.வே.சா. உரிமைப்பதிப்பு,

திராவிட நாகர அச்சுக்கூடம்,

சென்னை,

பதிப்பு – 1887.

27. சாமிநாதையர்.உ.வே., (ப.ஆ.,) மணிமேகலை,
டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம் வெளியீடு,

சென்னை,

1981.

28. சாமிநாதையர். உ.வே., (ப.ஆ.) புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும்,

ச. கல்யாணசுந்தரம் டையர்,

சென்னை,

பதிப்பு – 1993.

29. சாமிநாதையர்.உ.வே., (ப.ஆ.,) சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்,

டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம் வெளியீடு,

பெசன்ட் நகர்,

சென்னை – 90,

பதினொன்றாம் பதிப்பு – 2008.

30. சாமியப்பன். ப., வாழ்க்கையை வளமாக்கும் கலைகள்,

நாம் தமிழர் பதிப்பகம்,

17/1 தாச்சி அருணாச்சலம் தெரு,

மயிலாப்பூர்,

சென்னை,

முதற்பதிப்பு – 2009.

31. சுவாமிநாதன். ஏ., தமிழ்நாட்டு சமுதாய பண்பாட்டு வரலாறு,
தீபா பதிப்பகம்,
சாந்தோம்,
ன்னை – 28,
முதற்பதிப்பு – நவம்பர் 1985.

32. சீனிவாசன். இரா., சக்தி வழிபாடு,
ஜெயக்குமாரி ஸ்டார்ஸ்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு – 1975.

33. செல்வராசு. ந., தொல் தமிழர் சமயம்,
காவியா பதிப்பகம்,
முதற்பதிப்பு – 2001.

34. சேதுப்பிள்ளை. ரா.பி., ஊரும் பேரும்,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை,
பதிப்பு – 1997.

35. சேதுரகுநாதன். ந., (ப.ஆ.,) முத்தொள்ளாயிரம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
பதிப்பு – 1975.

36. சேதுராமன். கு., தமிழகச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை,
பதிப்பு – 2017.

37. சேதுராமன். ஜி., தமிழ்நாட்டுச் சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு,
ஜே. ஜே. பப்ளிகேசன்,
மதுரை,
பதிப்பு – 1997.

38. சோமசுந்தரனார்., புறப்பொருள் வெண்பாமாலை,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை – 1,
மறுபதிப்பு – 1959.

39. ஞானசம்பந்தன். அ.ச., இலக்கியக்கலை,
கழக வெளியீடு,
சென்னை,
பதிப்பு – 1994.

40. தட்சிணாமூர்த்தி. அ., தமிழர் நாகரிகமும் பண்பாடும்,
பூக்கார அம்பலக்கார 3வது தெரு,
தஞ்சாவூர்,
பதிப்பு – 1973.

41. தமிழ்நாடன்., கலைகள் உறவும் உருமாற்றமும்,
செட்டியார் பதிப்பகம்,
சேலம்,
பதிப்பு – 2001.

41. திருஞானசம்பந்தர்., தேவாரம்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 2007.

42. திருத்தக்கதேவர்., சீவக சிந்தாமணி,

கழக வெளியீடு,

சென்னை,

பதிப்பு 1976.

43. திருநாவுக்கரசு. க.த., தமிழரின் கலைக்கொள்கை,
தமிழகக் கலைச் செல்வங்கள்,

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,

சென்னை,

பதிப்பு – 1990.

44. துளசி இராமசாமி., தமிழ்ப்பண்பாட்டு மரபுக்கலைகள்,

விழிகள் வெளியீடு,

சென்னை,

பதிப்பு – 2000.

45. துரை அரங்கசாமி.மொ., சங்ககால சிறப்புப் பெயர்கள்,

பாரி நிலையம்,

சென்னை,

பதிப்பு – 2000.

46. தெய்வநாயகம்., தமிழர் கட்டிடக்கலை,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

தரமணி,

சென்னை – 13,

முதற்பதிப்பு – 2000.

47. தேவநேயப் பாவாணர். ஞா., பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும்,

தமிழ்மண் பதிப்பகம்,

அகமது வணிக வளாகம்,

இராயப்பேட்டை,

சென்னை – 14,

பதிப்பு – 1952.

48. தேவநேயப் பாவாணர். ஞா., பழந்தமிழாராட்சி,
தமிழ் மண்பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 2000.

49. பக்தவத்சல பாரதி., பண்பாட்டு மானிடவியல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் – 608 001,
பதிப்பு – 1990.

50. பரிமேலழகர்., (உ.ஆ.,) திருக்குறள்,
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை – 18,
மூன்றாம் பதிப்பு – 2001.

51. பவுன்துரை. இராசு., தமிழகக் கோயில் கட்டடக்கலை மரபில் தூண்கள்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் – 1,
பதிப்பு – 2007.

52. பாக்கியமேரி.கே., ஆயகலைகள்,
பாவை பப்ளிகேஷன்,
சென்னை,
பதிப்பு – 2007.

53. பாண்டுரங்கன்.கி., பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும்,
வெற்றிவேல் வெளியீடு,
சென்னை,

1986.

54. பாலசுப்பிரமணியன். கு.வெ., சங்க இலக்கியத்தில் கலையும் கலைக் கோட்பாடும்,

உமா வெளியீட்டகம்,

மருத்துக்கல்லூரிச் சாலை,

தஞ்சாவூர் – 613 004.

55. பாலசுப்பிரமணியம். சு.ஆர்., சோழர் கலைப்பாணி,

கழக வெளியீடு,

சென்னை,

முதற்பதிப்பு – 1966.

56. பாலசுந்தரனார். தி.மு., சங்க நூற்கட்டுரைகள்,

கழக வெளியீடு,

சென்னை,

பதிப்பு – 1966.

57. பாலுச்சாமி. எ., மருதத்தில் மக்கள் வாழ்வியல்,

உலகத் தமிழாரய்ச்சி நிறுவனம்,

தரமணி,

சென்னை – 113,

முதற்பதிப்பு – 2011.

58. பிள்ளை. கே.கே., தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

தரமணி,

சென்னை – 113,

முதற்பதிப்பு – 2000.

58. புலியூர்க்கேசிகன்., (உ.ஆ.,) மணிமேகலை,

பாரி நிலையம்,

184, பிராட்வே,

சென்னை – 108,

முதற்பதிப்பு – 1961.

59. மதிவாணன்., சிலம்பின் காலக் கணிப்பு,

சேகர் பதிப்பகம்,

66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,

சென்னை – 78,

முதற்பதிப்பு – 2005.

60. மயன் பழந்தமிழ்ச்சிற்பி., ஐந்திறம்,

தொழில் நுட்பக் கல்வி இயக்கம்,

அச்சுத் தொழில் நுட்பப் பயிலகம்,

தரமணி,

சென்னை – 600 013,

முதற்பதிப்பு 1986.

61. மாணிக்கம். அ., அர்த்தசாஸ்திரம் பொருள் நூல்,

வர்த்தமானன் பதிப்பகம்,

சென்னை – 17.

62. மாணிக்கம்., (உ_ஆ.,) திருக்குறள் (தெளிவுரை),

தென்றல் நிலையம்,

சிதம்பரம்,

பதிப்பு – 1999.

63. முத்து கண்ணப்பன். தி., சங்க இலகியத்தில் நெய்தல் நிலம்,

அதிபக்தர் பதிப்பகம்,

சென்னை,

பதிப்பு – 1978.

64. முத்துசாமி. அ., சங்க இலக்கியத்தில் ஆயர்,

இராணி பதிப்பகம்,
சென்னை – 600 014,
முதற்பதிப்பு – 1993.

65. முத்துவீரியர்., முத்துவீரியம் மூலநூல் உரை,
கழக வெளியீடு,
சென்னை,
பதிப்பு – 1972.

66. மௌனகுரு. சி., பண்டைத்தமிழர் வரலாறும் இலக்கியமும்,
அலைகள் வெளியீட்டகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு – 2009.

67. ராஜப்பன் அஷோக்குமார்., நெய்தல்,
ஸ்ரீ துர்க்கை பிரிண்டிஸ் பிரஸ்,
21, மதுரை வீரன் கோயில் தெரு,
தி. நகர்,
சென்னை – 600 017,
முதற்பதிப்பு – ஜூலை 1997.

68. ரேவதி. வீ., கால வளர்ச்சியில் கலை நிலை,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை,
பதிப்பு – 2011.

69. வரதராசன். மு., முல்லைத்திணை,
பாரி நிலையம்,
சென்னை,
பதிப்பு – 1955.

70. வானமாமலை. நா., ஐவர் ராசக்கள் கதை,
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை – 2,
முதற்பதிப்பு – ஜனவரி 1974.

71. வித்யானந்தன். சு, தமிழர் சால்பு,
பாரி நிலையம்,
சென்னை – 108,
முதற்பதிப்பு – 1957.

71. வீரமணி. கி., முல்லைத்திணை,
பாரி நிலையம்,
சென்னை,
பதிப்பு – 1955.

72. வேங்கடசாமி. மயிலை சீனி., தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
சென்னை,
பதிப்பு – ஜூலை 2004.

73. வேங்கடசாமி. மயிலை சீனி., களப்பிரர் ஆட்சியில் தமிழகம்,
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை – 600 005,
பதிப்பு – 2006.

74. வேங்கடசாமி. மயிலை சீனி., பழங்காலத் தமிழர் வாணிகம்,
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம் – 608 001,

முதற்பதிப்பு – நவம்பர் 2012.

75. வேங்கடசாமி. மயிலை சீனி., தேவராசன். கோ., (ப.ஆ.,) — தமிழுக்கு வழங்கிய கொடை, எம். வெற்றியரசி, மனை எண் – 9, கதவு எண் – 26, ஜோசப் காலனி, ஆதம்பாக்கம், சென்னை – 600 088 முதற்பதிப்பு – 2001.

76. வேங்கடசாமி. மயிலை சீனி., தேவராசன். கோ., (ப.ஆ.,) — கொங்கு நாடும் துளு நாடும், சாரதா மாணிக்கம் பதிப்பகம், பழைய எண் – 13, புதிய எண் – 10, ஆதம்பாக்கம், சென்னை – 600 088, முதற்பதிப்பு – 2016.

77. ஜெகநாதன். கி.வா., (உ.ஆ.,) — ஐம்பெருங்காப்பியங்கள், அமுதம் நிலையம், சென்னை, பதிப்பு 1955.

78. ஜெயக்குமார். பா., — தமிழகத் துறைமுகங்கள், அன்பு வெளியீட்டகம், தஞ்சாவூர், பதிப்பு – 2001.

79. ஸ்டிபன். ஞா., — இலக்கிய இனவரைவியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41–பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,

சென்னை – 6.

## ஆங்கில நூல்கள்

1. Jas Burgess LL.D., F.R.G.S., M.R.A.S., Indian Antiquary Vol XII,
Swati Publications,
Delhi,
Publication Year - 1964/

2. Soundar Rajan., Early Pandya Muttaraya and Irukkuvel,
Architecture Studies in Indian Temple Architecture,
Varanasi,
Publication Year - 1967.

3. Srinivasa Iyengar. P.T., History of Tamils,
C. Coomaraswamy Naidu & Sons,
Madras,
Publication Year - 1929.

## அகராதிகள், கலைக்களஞ்சியங்கள்

1. கோபால கிருஷ்ணன்., மதுரைத் தமிழ்ப் பேரகராதி,
மதுரை காமராசர் பல்கலைக்கழக
வெளியீடு,
இரண்டாம் பதிப்பு – 1956.

2. சிங்காரவேலு முதலியார். ஆ., (ப.ஆ.,) அபிதான சிந்தாமணி,
ஏசியன் எஜீகேஷனல் சர்விஸஸ்,
புதுதில்லி,
பதிப்பு – 1984.

3. தூரன். பெ., (ப.ஆ.,) கலைக்களஞ்சியம் தொகுதி – 1,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,

சென்னை,
முதற்பதிப்பு – 1954.

4. தூரன். பெ., (ப.ஆ.,) கலைக்களஞ்சியம் தொகுதி – 8,
தமிழ் வளர்ச்சிக்கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1961.

5. பாலுச்சாமி. ந., (ப.ஆ.,) வாழ்வியற்களஞ்சியம் தொகுதி 4,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு – 1984.

6. தமிழ் லெக்சிகன் தொகுதி – 2
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
மறுபதிப்பு – 1982.

7. தமிழ் லெக்சிகன் தொகுதி – 5,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
மறுப்பு – 1982.

# பின்னிணைப்புகள்

## 1. ஆயகலைகள்

1. கட்டிடக்கலை
2. சிற்பக்கலை
3. ஓவியக்கலை
4. ஆடற்கலை
5. இசைக்கலை
6. பருகும் பொருள் செயல் கலை
7. நீராடற்கலை
8. நீர் விளையாடற்கலை
9. உடலியற்கலை
10. படுக்கை தயாரிக்கும் கலை
11. நறுமணப்பொருள் அறியும் கலை
12. களிம்பு செய்கலை
13. காதணிக்கலை
14. சங்குவளை சய்கலை
15. அணிவகை இயற்றும் கலை
16. ஆடை அணிகலனைத் தேர்ந்தெடுக்கும் கலை
17. பொம்மைக்கலை
18. கூந்தல் ஒப்பனைக்கலை
19. தொழில் நுட்பக்கலை
20. நிலத்தடி பொருள் இயல் அறிகலை
21. உலோகப் பொருள் செய்கலை
22. அறிவுக்கலை
23. ஒரே முறயில் கட்டவை கூறும் கலை
24. நினைவாற்றல் லை
25. பேச்சற்றால் கலை
26. படைப்பாற்றல் கலை
27. சமூகத்ல் பழகும் கலை
28. விடுதலைக்கலை
29. விசித்திரக் கணக்கீடு கலை
30. சொல் விளையாட்டுக்கலை
31. பன்மொழிக்கலை
32. விகடகவிக்கலை

33. ஒழுக்கக்கலை

34. உடற்பயிற்சிக்கலை

35. பின்னற்கலை

36. பறைவ – விலங்கு இவைகளி பேச்சுணர் கலை

37. வாய்ப்பாட்டுக்கல, சமையல்கலை

38. முகஎழில்னைகலை

39. மந்திரக்கலை

40. சமையற்கலை

41. காவியம் இயற்றும் கலை

42. கதை கூறும் கலை

43. மந்திர உண கலை

44. குளிகை காட்டும் கலை

45. தோட்டக்கலை

46. நிமித்தம் உணர் கலை (சகுன சாத்திரம்

47. குறியீடு உணர்கலை

48. இலக்கண அறிவுக் கலை

49. திறனாய்வுக்கலை (விமர்சனம்)

50. நெசவுகலை

51. தாவர இயல் அறிகலை

52. சோதிடக்கலை

53. யோக நூலறிகலை

54. இன்சொல் கலை

55. பிரித்தாளும் கலை

56. பிறரை ஈர்க்கும் கலை

57. வஞ்சனை செய்கலை

58. இயந்திரத்திறன் கலை

59. வண்ணம் தீட்டும் கலை

60. சங்கிராம இலக்கிணம் அறிகலை

61. கூடுவிட்டுக் கூடுபாயும் கலை

62. நாடகக்கலை

63. மாறுவேடம் புனைகலை

64. பச்சைக்குத்தும் கலை

65. பிறர்போல் பேசி நடிக்கும் கலை

66. நீரில் இசையொலி எழுப்பும் கலை

67. தரையில் கல்பதிக்கும் கலை

68. மாலை புனையும் கலை

69. மாயவித்தைக்கலை

70. போட்டிபனுவல் செய்கலை

71. கிளி, மைனா இவற்றைப் பேசப் பற்றும் கலை

72. உறுப்பழகு கொண்டு குண அழகு அறிகலை

73. குதிரையேறக் கலை

74. தெய்வச் சிலைலங்காரம்

75. வில்வாள் அம்பு தேர்ச்சிகலை

76. பறந்து வரும் பொருள்கை விரைந்து பற்றும் கலை

77. பறவை விலங்குகள் போர்க்கலை

78. ன்றை வேறொன்றாகத் தோன்றச் செய்யும் கலை

79. நடந்த நிகழ்விற்குக் காரண காரியம் கண்டறியும் கலை

80. து வகை உற்பத்திக் கலை

81. வேதபுராண இதிகாசக்கலை

82. உலோக மாற்றுக்கலை

83. தேர் நூலுணர்கலை

84. யானை நூலுணர்கலை

85. குதிரை நூலுணர்கலை

86. மல்யுத்தம்

87. காம இயல் அறிகலைவ

88. மயங்கச் செய்கலை

89. உபதேசம் செய்கலை

90. கருடன் இயல் அறிகலை

91. பிர் பார்வையில் புலனாகாகலை

92. கண்கட்டுவித்தை

93. நெருப்பைக் கட்டுப்படுத்தும் கலை

94. நீரைக் கட்டுப்படுத்தும் கலை

95. மூச்சினைக் கடுப்படுத்தும் கலை

96. பேச்சிழக்கச் செய்தல்

97. விந்தினை அடக்குதல்

98. கேள்வியறிவைத் தடுத்தல்

99. வாளைத்தடுத்தல்

100. பில்லிசூனியம் 101. சதுரங்க ஆட்டக்கலை

## பின்னிணைப்புகள் – 2

## புகைப்படங்கள்



சிந்துசமவெளி நாகரிகம்





அசோகர் தூண்



சாஞ்சி ஸ்தூபியும் தோரணமும்



தமோக் ஸ்தூபி



கரிகாலன் கல்லணை



மண்டகப்பட்டு குடைவரைக் கோயில்



மகேந்திரவாடி குடைவரைக்கோயில்



மாமல்லபுரம் கடற்கரைக் கோயில்



பஞ்சபாண்டவர் ரதம்

# சங்ககால கட்டடக் கலையின் மாண்புகள்

முனைவர் பட்டத்திற்காகப் பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு.

ஆய்வாளர்
**ரா. தீபா,** எம்.ஏ., எம்.ஃபில்.,
(பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்)
பதிவுஎண் : **PU/R/RD3/25887/2015 Dt : 11.02.2016**

நெறியாளர்
முனைவர் **ப. முத்துசாமி,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
முதல்வர்
வ.செ.சிவ. அரசு கலைக்கல்லூரி,
பூலாங்குறிச்சி – 630 405.




தமிழ்த்துறை
**அரசு கலைக்கல்லூரி ( தன்னாட்சி )**
**சேலம் - 636 007.**

**மே – 2022**

## இயல் – 5

# சங்ககாலக் கோயில்கள்

### முன்னுரை

பண்டைய மக்கள் இயற்கையின் சீற்றத்தைக் கண்டு அஞ்சி தங்களைக் காத்துக் கொள்ள முதலில் இயற்கையை வழிபட்டனர். காலப்போக்கில் தெய்வ நம்பிக்கை காரணமாக நிலங்களின் அடிப்படையில் தெய்வங்களை வணங்கினர். இறைவனின் மீது கொண்டிருந்த பயம் தாங்கள் எடுத்துக் கொண்ட காரியம் முடிய வேண்டும் என்ற எண்ணம் ஆகியன பக்திக்குக் காரணிகளாக அமைந்தன. பழந்தமிழர்கள் அச்சம் தரும் இயற்கைப் பொருட்களை வணங்கியதையும், ஐவகை நிலத்திற்கேற்பத் தெய்வங்களை வணங்கியதையும் நடுகல் வழிபாட்டு முறை பற்றியும், இவ்வழிபாடே பின்னர் சமய வளர்ச்சிக்கும் கோயில் உருவாகவும் துணை நின்றது என்பதனையும் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### இயற்கை வழிபாடு

ஆதிமனிதன் இயற்கையைச் சார்ந்து வாழ்ந்தான். காடுகளில் அலைந்து திரிந்த சூழலில் இடி, மின்னல், காற்று, மழை போன்ற இயற்கைச் சீற்றங்கள் அவனுக்கு ஒரு புதிராக அமைந்ததோடு அச்சத்தையும் ஏற்படுத்தின. இவ்வச்சம் இயற்கை உயிர்ப்புத்தன்மை உடையது. ஆற்றல் வாய்ந்தது எனக் கருதத் தூண்டிற்று. இயற்கையை வணங்குவதன் வழி அதன் சீற்றத்தைக் கட்டுப்படுத்துவதோடு அச்சத்தைப் போக்குவதற்கும் வழி வகுக்கும் என்று ஆதிமனிதன் கருதினான். இக்கருத்துருவமே இயற்கையை வணங்குவதற்குக் காரணமாக அமைந்தது.

மனிதன் தோன்றிய காலம் முதல் இயற்கை அவனது வாழ்வியலோடு இயைந்துள்ளமையாலும், கடவுளின் அடையாளக் குறியீடுகளாய் விளங்குகின்றமையாலும் மனித சமூகத்தில் இயற்கையை வணங்குதல் முதன்மை பெறுகிறது. இதை,

> **“மனித இனத்தவரிடையே சமயம் பற்றிய நம்பிக்கை முதன்முதலில் ஏற்பட்டிருக்குமாயின் அது இயற்கை பொருட்களின் ஆற்றல் நம்பிக்கை கொண்டு அப்பொருள்களை வழிப்பட்டதன் மூலம் ஏற்பட்டிருக்கும்’’[1]**

என்கிறார் மாக்ஸ்முல்லர். இயற்கையின் இன்றியமையாத கூறுகளான சூரியன், சந்திரன், நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ, மலை போன்றவற்றை வணங்குதல் இயற்கை வழிபாடாகும். தொல்காப்பியர் ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய இயற்கைக் கூறுகளைப் பழந்தமிழர் வழிப்பட்டமையினை,

> **“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
>
> **வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
>
> **கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே’’[2]**

எனப் பாடாண் திணையில் சுட்டுகிறார்.

## சூரியன்

மனிதன் இரவுப்பொழுதில் இருளினைக் கண்டு அச்சமடைந்தான். அவ்வச்சத்தைப் போக்குவதற்கு வழியின்றித் தவித்த சூழலில் விடியற்பொழுதில் இருளைப் போக்கும் சூரியனைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்தான். இம்மகிழ்ச்சியின் வெளிப்பாடாகச் சூரியனை வணங்கத் தொடங்கினான். இருள்போக்கும் தன்மையே சூரியனை வணங்குதலின் முதல்நிலையாக அமைந்தது. இதனை,

> **“பழங்காலத்தில் நெருப்பு கண்டுபிடிக்கப்படாமையால் மனிதன் இரவு நேரங்களில் கண்தெரியாது குகைக்குள் கிடந்து நச்சு உயிர்கட்கும் விலங்குகட்கும் அஞ்சி வாழ்ந்து இரவெல்லாம் துன்புற்று காலையில் ஞாயிற்றின் ஒளிகண்டு வாழ்த்தினான். சில தண்ணளி நல்கும் சந்திரனையும் பரவசமுற்று மகிழ்ச்சியடைந்தான். இதன் பொருட்டு ஞாயிறும் திங்களும் வணக்கப் பொருள்களாயின’’[3]**

என இரா.சீனிவாசன் குறிப்பிடுகின்றார். இந்த உலகம் முழுவதிலும் பரவியுள்ள இருளையகற்றி உலக உயிர்கள் செழிக்க ஒளியைக் கொடுக்கும் தன்மையை,

"விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு'' (அகம். 91)

"அகல்இரு விசும்பில் பாயிருள் பருகிப்

பகல் சான்று எழுதரு பல்கதிர் படுதி'' (பெரும். 1–2)

"––––––––––– நள்ளிருள் அலரி

விரிந்த விடியல் வைகினிர் கழிமின்'' (மலைபடு. 195–196)

என்ற பாடலடிகளால் அறியமுடிகிறது.

இருளையகற்றும் சூரியன் மக்களின் வாழ்க்கை வளர்ச்சிக்கு அடிப்படையானது. சூரியன் தாவர வளர்ச்சிக்கும் அடிப்படையாக அமைவது ஆகையால் இருளை அகற்றும் சூரியன் வழிபாட்டுப் பொருளாயிற்று. உலகிற்கு வெளிச்சம் தரும் சூரியனை தெய்வமாகக் கருதி வழிபட்டனர். ஒவ்வொரு நாளும் கீழ்த்திசையில் கீழ்க்கடலில் தோன்றி வான்வெளியில் இயக்கம் பெற்று மண்ணில் தோன்றிய உயிர்களுக்கெல்லாம் வாழ்க்கையை அளித்து மேற்கடலில் மறையும் தன்மையைப் பெற்றவனே சூரியன். இவன் உருளைத் தேரில் வலம் வரும் தன்மையை,

"சேய்விசும்பு கவர்ந்த செழுங்கதிர் மண்புலம்

மால்வரை மறையாத துறையுள் பின்றே'' (நற். 67)

"பலகதிர் மண்புலம் பகல் செய்து ஆற்றிச்

சேயுயர் பெருவரைச் சென்றவன் மறையா'' (நற். 69:1–2)

"குணக்கடல் கவர்ந்து குருகூக் கதிர் பரப்பிய

பகல்கெழு செல்வன் குடமலை மறையப்

புலம்புவந் திறந்த புன்கண் மாலை'' (நற். 215)

என்னும் அடிகளின் சூரியனின் தோற்றமும் மறைவும் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

## உச்சிக்கிழான் கோட்டம்

ஆதிமனிதன் இயற்கையைக் கண்டு வணங்கத் தொடங்கினான். பின்பு பாறைக்

கற்களில் ஓவியங்கள் வரைந்து வழிபட்ட அவன் அதன் வளர்ச்சியாக இயற்கைப் பொருட்களுக்கென்று தனிக்கோயில் எழுப்பி வழிபட்டான். அவ்வகையில் சூரியனுக்கெனத் தனிக்கோயில்கள் எழுப்பி வழிபடும் வழக்கம் பழங்கால மக்களிடையே நிலவியுள்ளது.

பஞ்சாபிலுள்ள சூரியக் கோயிலைப் பற்றி,

> **"பஞ்சாப்பிலுள்ள மல்ரன் (Malran) என்னும் நகரில் சூரியனுக்கு பழைய கோயில் இருந்தது என அறிகிறோம். ஔரங்கசீப் என்னும் முகமதிய மன்னனின் கட்டளையால் அவ்வாலயத்திலிருந்த தங்கச்சிலை உருக்கிக் கருவூலத்தில் சேர்க்கப்பட்டது"[4]**

என்று ந.சி.கந்தையா பிள்ளை குறிப்பிடுகிறார். கோனாக்கில் சூரியனுக்கென்று புகழ்பெற்ற தனிக்கோயில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தில் சூரியனுக்குக் கோயில் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை. தற்போது கும்பகோணத்திற்கு அருகில் உள்ள சூரியனார் கோயில் புகழ்பெற்றுத் திகழ்கிறது. முதன்முதலாகச் சிலப்பதிகாரம் சூரியனுக்கென எழுப்பப்பட்ட கோயிலை 'உச்சிக்கிழான் கோட்டம்' என்று குறிப்பிடுகிறது. இதனை,

> **"உச்சிக் கிழான்கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்"[5]**

'உச்சிக்கிழான்' என்பதற்கு அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் 'சூரியன்' என்றே பொருள் கொள்கின்றனர். உரையாசிரியர்களின் கூற்றின் வாயிலாக 'உச்சிக்கிழான் கோட்டம்' என்பது சூரியனுக்குரிய கோயில் என்பது தெளிவாகிறது.

உச்சிக்கிழான் கோட்டம் தமிழகத்தில் வந்ததற்கான பின்னணியை ஆய்வாளர் குறிப்பிடுகையில்,

> **"பாபிலோனிய, எகிப்து ஆகிய நாடுகளோடு கி.பி. 1200 ஆண்டுக்கால அளவிலிருந்தே வணிகம் செய்து வந்த பொனிசிய வணிகர்கள் தமிழ்நாட்டுத் துறைமுகப் பட்டினங்களில் திரளாகத் தங்கியிருந்த காலங்களில் பாபிலோனியர் எகிப்து நாட்டு வழிபாட்டு முறைகளையும்**

**இங்குப் பரப்பினர். அதன் விளைவாகச் சூரியன், நிலவு போன்றவற்றிற்குக் கோயில் கட்டும் வழக்கம் தமிழகத் துறைமுகப் பட்டினங்களில் உருவாயிற்று. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த சூரியன் கோயிலாகிய உச்சிக்கிழான் கோட்டம், நிலாக்கோட்டம் ஆகியவை இத்தகைய பின்னணியில் உருவானதே''[6]**

என்பர் இரா.மதிவாணன். இக்கூற்றின்படி பொனிசியர்கள் வணிக வரவின் பயனாக எழுந்ததே உச்சிக்கிழான் கோட்டம் என்பது குறிப்பிடத்தக்கது.

சோழ நாட்டைக் குறிப்பிடும் சங்க இலக்கியங்களில் 'உச்சிக்கிழான் கோட்டம்' பற்றிய குறிப்புகள் இல்லை. சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்ட உச்சிக்கிழான் கோட்டம் பற்றிப் பிற்கால இலக்கியங்களும் கல்வெட்டுகளும் குறிப்பிடாமையால் சிலப்பதிகார காலத்திற்குப் பின் அது கடல் கோள்களால் அழிந்துபட்டிருக்கும் என முடிவு செய்யலாம்.

## சூரியகுண்டம்

சூரியனுக்குரிய குளம் இருத்ததைப் பற்றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. இக்குளத்தில் மூழ்கி சூரியனை வாழ்த்துபவர்கள் கணவனைப் பிரியாது இன்புற்று வாழ்வார்கள் என்பதான நம்பிக்கை மக்களிடையே நிலவி வந்துள்ளது. இதனை,

**''சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக்**

**காமவேள் கோட்டந் தொழுதாற் கணவரோடு**

**தாமின் புறுவ ருலகத்துத் தையலார்''[7]**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சூரிய குண்டம் பற்றி உ.வே.சா. சிலப்பதிகார அடிக்குறிப்புரையில்,

**''இங்கே கூறிய சோமகுண்டமும் சூரிய குண்டமும் முறையே திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமென்று சில பெரியோர் கூறுகின்றனர்''[8]**

என்று குறிப்பிடுகிறார். சூரியகுண்டம் பற்றியும் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை.

## திங்கள்

தீயினைக் கண்டுபிடிக்காத சூழலில் இருளினைக் கண்டு அஞ்சத் தொடங்கிய மனிதன் வெளிச்சமும் குளிர்மைத் தன்மையுடையதுமான திங்களைக் கண்டவுடன் மகிழ்வுற்றான். இம்மகிழ்வின் காரணமாகத் திங்களை வணங்கத் தொடங்கினான். வேதங்களில் சந்திரனை வழிபடும் வழக்கம் இருந்தது. வேதங்களில் சந்திரனை ஸோமன் என்றும் சந்திரமா என்றும் குறிக்கிறார்கள்.

உலக மக்கள் அனைவரும் திங்களை வாழ்த்தி வழிபட்டுள்ளனர் என்பதனை,

**''உலகு தொழத்தோன்றிய மல்கதிர் மதியம்''[9] (சிலம்பு. 28:89)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

உலக மக்கள் திங்களை வழிபட்டதோடு பல்வேறு பெயர்களிட்டும் வணங்கியுள்ளனர் என்பதனை,

> **''சந்திரனை இந்தியாவில் மட்டும் வழிபடாது உரோமனியர் 'தயான' (Diana) என்ற பெயரிலும் கிரேக்கர்கள் 'சிலினி' (Silene) என்ற பெயரிலும் பாபிலோனியர் 'சின்' (Sin) என்ற பெயரிலும் சுமேரியர்கள் 'நன்னா' (Nana) என்ற பெயரிலும் பெயரிட்டுள்ளனர்''[10]**

என்று வாழ்வியற்களஞ்சியம் குறிப்பிடுகிறது. சந்திரனானது திங்கள், மதி, இந்து, வெண்ணிலவு என்று பல்வேறு பெயர்களில் அழைக்கப்பட்டதை,

> **''ஞாயிறு திங்கள் சொல்லென உரூஉம்''[11]**
>
> **''ஞாயிறு திங்கள் அறிவே நான்''[12]**
>
> **''நிலா வெண்கிளவி அத்தொடு சிவணும்''[13]**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

சிந்துவெளி நாகரிகத்திலும் திங்களை மக்கள் வாழ்த்தியுள்ளனர். திங்களைத் தெய்வமாக வழிபட்டதற்கான கோயில்கள் மொஹஞ்சதரோ அகழ்வாய்வுகளின் மூலம்

கிடைக்கப் பெறுவதை மா. இராசமாணிக்கனார்,

> **“இந்த (உர்) நகரம் சுமேரிய நகரங்களுள் மிகச் சிறந்ததாகும். இந்நகரத்தில் இடம்பெற்ற ஆராய்ச்சியின் பயனாக அரிய குறிப்புகள் பல வெளிப்பட்டன. இந்நகரில் திங்கட்கடவுள் தம் மனைவியோடு எழுந்தருளியுள்ள கோயில் ஒன்றும் நிலமகள் கோயிலும் கதிரவன் கோயிலும் காணப்பட்டன’’**[14]

என்று குறிப்பிடுகிறார். இச்சான்றின் வழி திங்களுக்குக் கோயில் இருந்தது என்பது புலனாகின்றது.

## நிலாக்கோட்டம்

திங்களுக்கென்று தனிக்கோயில் எழுப்பியதாகச் சங்க இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால் சிலப்பதிகாரத்தில் முதன்முதலாக நிலாக்கோட்டம் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இதனை,

> **“நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கெங்கும்’’**[15]

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## சோம குண்டம்

திங்களுக்கென்று தனியே குளம் இருந்ததைச் சிலப்பதிகாரம் ‘சோமகுண்டம்’ என்று அழைக்கிறது. இக்குளத்தில் மூழ்கி எழுபவர்கள் தம் கணவரைப் பிரியாது இன்புற்று வாழ்பவர்கள் என்பதான நம்பிக்கை குறித்த வழக்கு மக்களிடையே நிலவிற்று என்பதைத் தேவந்தியின் கூற்று வாயிலாக அறிய இயலுகிறது. இதனை,

> **“சோமகுண்டஞ் சூரிய குண்டத் துறைமூழ்கி’’**[16]

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சோமகுண்டம் பற்றி உ.வே.சா. சிலப்பதிகார அடிக்குறிப்புரையில் திருவெண்காட்டிலுள்ள சோமதீர்த்தமே சோமகுண்டம் என்று குறிப்பிடுகிறார்.

## பிறையைத் தொழுதல்

தக்கன் யாகத்தில் தண்டனை பெற்று, இந்நிலவு பதினைந்து நாட்கள் தேய்ந்தும்,

பதினைந்து நாட்கள் வளர்ந்தும் வருவதை,

**‘‘தேய்தல் உண்மையும் பெருகுதல் உண்மையும்**

**மாய்தல் உண்மையும் பறத்தல் உண்மையும்**

**அறியா தோரையும் அறியக் காட்டித்**

**திங்கள் புத்தேள் திரிதரு உலகத்து’’ (புறம். 27:11–14)**

என்ற பாடல் அடிகள் விளக்குகின்றன.

திருமணமாகாத பெண்கள் பிறையைத் தொழுவதை மரபாகக் கொண்டுள்ளனர். பெண்கள் பிறையை வணங்குவதால் நல்ல கணவன் கிடைக்க பெறுவான் என்பதான நம்பிக்கை மக்களிடையே நிலவியதை சங்க இலக்கியம் பதிவு செய்துள்ளது. இதனை,

**‘‘ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம்**

**புல்லென் மாலை’’[15] (அகம். 289:9–10)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

வானத்திலே உலாவும் சந்திரன் விண்மீன் கூட்டங்களில் இடையிலே மின்னும் தன்மையுடையது. அவற்றுள் திங்கட்கு அணித்தாக விளங்குவது உரோகிணி. இந்த நாளைத் திருமணத்திற்குரிய நன்னாளாகப் பண்டைய மக்கள் கருதினர் என்பதனை,

**‘‘நாள்மின் வாய் சூழ்ந்த மதிபோல்’’ (முல்லைக்கலி. 4:27)**

**‘‘பல்மீன் நாப்பன் திங்கள் போலவும்**

**சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப’’ (புறம். 13:6–7)**

என்ற பாடலடியால் அறியமுடிகின்றது.

## மழை வழிபாடு

மனித வாழ்வின் அடிப்படை ஆதாரங்களில் ஒன்று நீராகும். நீரின் இன்றியமையாதத் தேவையை,

**“நீர்இன்று அமையாது உலகெனின்’’**[17]

என்ற குறளின் மூலம் அறியலாம். நீரினைத் தருகின்ற மழையைக் கண்டு மகிழ்ந்து அதன் தேவையை உணர்ந்து அதனை வணங்கத் தொடங்கினர். மழை வேண்டி பயன் கருதியும், மழை அதிகமாய்ப் பெய்யும்போது உண்டாகும் வெள்ளப் பெருக்கின் சீற்றத்தைக் கண்ட அச்சத்தின் வெளிப்பாடாகவும் என இரு நிலைகளில் இடம்பெறுகின்றன.

மழைப்பொழிவினால் நாடு வெம்மை நீங்கி குளிர்ச்சியடையும். வளம் சுரக்கும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாய் மழையை வணங்கினர். தலைவி உடன் போக்குச் சென்ற பாலை வழி மழை பெய்து குளிர்ச்சியடைய வேண்டும் என வேண்டி வணங்கும் மரபும் காணப்படுகிறது. இதனை,

**“ஞாயிறு காயாது மரநிழற் படிஇய**

**மலைமுதல் சிறுநெறி மணன்மிகத் தாஅய்த்**

**தண்மழை தலையின் றாக நந்நீத்து’’ (குறுந். 378:1–3)**

என்று மழையை வாழ்த்துகின்றபோது ‘தண்மழை’ என்ற சொல்லாட்சி இடம்பெறுகிறது. நாட்டில் குளிர்ச்சியுண்டாக்க வேண்டும் என்று வணங்குபவரின் எண்ணத்தை வெளிப்படுத்தும் விதமாகத் தண்மழை என்ற சொல்லாட்சி அடையாக இடம்பெறுகிறது.

மழையின் தோற்றத்திற்குக் கடல் நீரானது சூரியக்கதிரின் வெம்மைத் தன்மையால் ஆவியாகிப் பின்பு குளிர்ச்சியடைந்து மழையைப் பொழிவதால் மழை தண்மையும் வெம்மையும் உடையதாகக் கூறப்படுகிறது.

மழையை வரவழைக்கச் சடங்கினை மேற்கொண்டனர். இதனை,

**“மலைவான் கொள்கென வுயிர்பலி தூஉய்’’ (புறம். 148)**

என்ற பாடலடியின் வாயிலாக மழை பொழிய வேண்டும் என்பதற்காக உயிர்ப்பலியிடும் சடங்கு முறையினை செய்வதில் பழந்தமிழர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை அறியலாம்.

## அணங்கு

பழந்தமிழர் இலக்கியங்களில் அணங்கு என்ற சொல் வருத்தம், தெய்வம் என்னும் பெயரிலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. அணங்கினைப் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

**''அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்**

**பிணங்கள் சாலா அச்சம் நான்கே''[18] (தொல்.பொருள். 252)**

என எண்வகை மெய்ப்பாடுகளுள் அச்சம் என்ற மெய்ப்பாட்டிற்குரிய வாயிலாக அணங்கை சுட்டிக் காட்டியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் உருவமில்லாத தெய்வமாகவும் ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாகவும் அணங்கு விளங்குகிறது. அணங்கு வருத்தத்தைத் தரக்கூடியது என்றும் புனிதமானது என்றும் பண்டைத் தமிழ் மக்களிடையே நம்பிக்கை நிலவியிருக்கிறது. இந்த அணங்கு மரம், மலை, நீர் நிலைகள், காடு, காவன்மரம், ஊர், போர்க்களம் ஆகியன அணங்கு உறையும் இடங்களாகும்.

அணங்கு அச்சத்தைத் தரக்கூடிய கடற்பரப்பிலும் உறைவதை,

**''அணங்குடை முந்நீர் பரந்த செநறன்'' (அகம். 207)**

என்ற பாடல் அடியின் மூலம் அறியமுடிகிறது. பரதவர் இரவில் கடலுள் மீன் பிடிக்க சென்ற பின்னர் அவர்களைப் பத்திரமாகக் கரை சேர்க்குமாறு அவர்களுடைய பெண்கள் அணங்கு உறையும் கடல் துறையைத் தொழுதார்கள் என்பதனை,

**''பல்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய**

**எந்தையும் செல்லுமார் இரவே அந்தில்**

**அணங்குடைப் பனித்துறை கைத்தொழுது ஏத்தி'' (அகம். 240:6–8)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது. மலை உச்சியில் அணங்கு உறைந்திருப்பதை,

**''அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்**

**கணங்கொள் அரவிக் கான்கெழு நாடன்'' (அகம். 22)**

என்ற அடிகள் மூலம் அறியலாம். அணங்கு தாக்கும் இயல்பினையுடையது. எனவே, அது 'தாக்கணங்கு' எனவும் அழைக்கப்படுகிறது. தாக்கணக்கு என்பதற்குத் தீண்டி வருத்தும் தெய்வம் எனப் பொருள். அணங்கு தாக்கி வருத்தும் தன்மையுடையதால் தலைவியின் தாய் தலைவியிடம் சுழன்று திரியும் உன் தோழியருடன் எவ்விடத்திற்கும் செல்லாதே பழமை வாய்ந்த இந்தப் பதியின் இடங்கள் தாக்கி வருத்தும் தெய்வங்களை உடையவை. அதனால் நீ நம் வீட்டின் வாயிலில் கூட செல்லக் கூடாது என கடிந்து எச்சரிப்பதை,

**''அலமரல் ஆயமோடு யாங்கனும் படாஅல்**

**மூப்புடை முதுபதி தாக்குஅணங்கு உடைய;**

**காப்பும் பூண்டிசின்; கடையும் போகலை;**

**பேதை அல்லை – மேதைஅம் குறுமகள்'' (அகம். 7:2–5)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

கற்புடைய பெண்களிடத்திலும், பருவமடைந்த பெண்கள், கைம்பெண்கள் போன்றவர்களிடமும் அணங்கு உறையும் என்று கூறப்பட்டுள்ளது. அணங்கு உறையப்பட்டவர்கள் புனிதத்தோடு விளங்கவேண்டும். அவ்வாறு புனிதமாயிருந்தால்தான் நல்வழியில் செல்வதற்கும், அதிசயச் செயல்களைச் செய்வதற்கும் முழு ஆற்றலை தரும். அவ்வாறன்றி புனிதம் கெட்டால், அணங்கு அவர்களைவிட்டு வெளியேறும் என்று சங்ககால மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இதனை,

**''அணங்குடை வனமுலை தாஅய நின்'' (அகம். 177:19)**

**''அணங்கு அன்னாள்'' (அகம். 366:15)**

**''அணங்குசால் அரிவை'' (அகம். 114:15)**

**''அணங்குறு கற்பொடு மடம்கொளச் சாஅய்'' (அகம். 73:5)**

எனும் பாடலடிகள் பெண்களிடம் படிந்து கிடக்கும் ஆற்றலும், தெய்வத்தன்மையும்

பெண்களின் கற்புத்திறம் ஓங்கி இருக்கும் வரை இருக்கும் என்பதை கூறுவதாக அமைகின்றன.

> **"தலைவியின் ஆற்றல் குடும்ப நன்மைக்கும் இனக்குழு நன்மைக்கும் அடிப்படையானதாக அணங்கு வணக்கம் உறுதி செய்கிறது. அணங்கு ஆற்றல் இருக்கும் வரை நன்மையும், நீங்கும்போது தீமையும் விளையும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடையே வெளிப்பட்டது''[19]**

என்பர் சிலம்பு. நா.செல்வராசு.

## கடவுள்

சங்க இலக்கியத்துள் கடவுளைக் குறிக்கும் சொற்களாக இறைவன், கடவுள், படைத்தோன் என்ற சொற்களில் ஆளப் பெறுகின்றன. இக்கடவுளர்கள் அருந்தெறள் கடவுள், இரும்புகழ்த் தெய்வம், நிலையர் கடவுள் என அடையாளம் கொடுத்துச் சிறப்பிக்கப் பெறுகின்றன.

## கடவுள் உறையும் இடம்

பழங்காலத்தில் கடப்ப மரம், வேங்கை மரம், கிள்ளி மரம், மாமரம், முதுமரம், ஆல மரம், ஆறு, ஆற்றிடைக் குறை, காடு, குளம், சந்தி, வீடு போன்ற இடங்கள் கடவுள் உறையும் இடங்களாகக் கருதப்பெற்றிருந்தன.

> **"நீத்துடை நெடுங்கயம் தீப்பட மலர்ந்த**
>
> **கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி'' (பெரும். 289–290)**

> **"கல் எறிந்து, எழுதிய நல்அரை மராஅத்த**
>
> **கடவுள் ஓங்கிய காடு ஏசுகவலை'' (மலைபடு. 395–396)**

> **"கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன**
>
> **அடையா வாயில் அவன்அருங் கடைகுறுகி'' (சிறுபாண். 205–206)**

> **"கடவுட் கயத்து அமன்ற சுடர்இதழ்த் தாமரை'' (மதுரைக். 710)**

என்னும் பாடலடிகளின் மூலம் கடவுள் உறையும் இடங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

## ஐந்நிலக் கடவுள் வழிபாடுகள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களைக் கொண்டிருந்த குமரிக் கண்டத்தில் குறிஞ்சியில் தோன்றிய சமயமே முதல் சமயமாக உருப்பெற்றது. பின்னர் அடுத்தடுத்து நிலங்களில் மக்கள் இடம் பெயர்ந்து வாழ்ந்தபோது அந்நிலங்களுக்கேற்பவும் சூழ்நிலைக்கேற்பவும் மக்களின் உணர்ச்சிகள் அமைவது இயல்பாகும். குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும், மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும், பாலைக்கு கொற்றவையும் தெய்வங்களாக அமைகின்றன.

## முருகன்

குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுள் முருகன், முருகனைத் தமிழரின் தனிப்பெருங் கடவுள் என்று கூறுவர். முருகன் வீரமிக்கவன், சீற்றமுடையவன், வலிமையுடையவன் என்றே சங்க நூல்கள் கூறுகின்றன. இதனை,

> **‘‘முருகு உறழ் முன்பொடு கடுஞ்சினஞ் செருக்கிப்**
>
> **பொருத யானை வெண்கோடு கடுப்ப’’ (நற். 225:1–2)**
>
> **‘‘முருகன் சீற்றத்து உருகெழு குரிசில்’’ (புறம். 16)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

முருக வழிபாடு பற்றி கடிகாசலம் அவர்கள் கூறுகையில்,

> **‘‘குறிஞ்சி மக்கள் மலைமீது நின்று கதிரவன் கடலினின்றும் எழும் இயற்கை எழிற்காட்சியைக் காலையிற் கண்டு களித்தனர். அவர்களுக்கு அக்காட்சி நீலமயில் மீது செவ்வேள் இருப்பது போல் தோன்றியது. அவ்வியற்கை வழிபாடே முருக வழிபாடாக மலர்ந்தது’’[20]**

என்கிறார்.

குறிஞ்சி நில மக்கள் தொடக்கத்தில் கதிரவனையே வழிபட்டிருக்க வேண்டும். இக்கதிரவனின் வழிபாடே பின்னாளில் முருக வழிபாடாக மாறியிருக்க வேண்டும்.

கதிரவனால் பெறப்பட்ட தீயும், தீயால் வெளிப்பட்ட செம்மையும், ஒளி செம்மையில் உருவான சேயும், பரிணாம வளர்ச்சி பெற்று குறிஞ்சிநில மக்கள் முருகனை வழிபடுவதற்கு ஆதாரமாயின. முருகன் வழிபாட்டிற்கு மூலவன் கதிரவனாவான். இதனை,

**“மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்**

**ஞாயிற்று ஏர்நிறந்தகை நளினத்துப் பிறவியை’’ (பரி. 5:11–12)**

என்ற பரிபாடல் அடியின் மூலம் அறியமுடிகின்றது. கதிரவன் தோன்றும்போது செந்நிற அழகுடன் தோன்றும் முருகனே எனக் குறிப்பிடுவதால் கதிரவன் வழிபாடே பின்னாளில் முருக வழிபாடாக தோற்றம் பெற்றிருக்க வேண்டும்.

> **“மலை நிலக் கடவுளாம் முருகனும் சேயோன் எனப்படுகிறான். அதற்குக் காரணமாகச் செவ்வேள் என்ற வழக்குண்மையும் காணமுடிகிறது. சேய் என்பதற்கு மலைச்சிகரம் என்ற பொருளுமுண்டு. ஆயினும் பிற்காலத்தில் சிவனின் செல்வன் முருகன் என்று கூறலாயினர். காலை வேளையில் நீலக்கடலை மேல் தோன்றி அழகுக் காட்சி வழங்கும் இளங்கதிரையே முருகன் எனப் போற்றியதாகவும் கடல் மயிலாகவும் அதன்மேல் தோன்றும் செங்கதிரே செவ் வேளாகவும் கற்பிக்கப்பட்டன என்றும், இளங்கதிர் முற்றி மேலும் சிவந்த நண்பகலில் தோன்றியபோது அதனைச் சிவன் என்றதாகவும் இளங்கதிரைச் சிவனின் இளஞ்சேயாகக் கருதியதாகவும்’’[21]**

என கா.சு.பிள்ளை குறிப்பிடுகிறார்.

முருகனுக்குச் செவ்வேள், சேய், வேள், நெடுவேள், நெடியோன், குமரன், மாஅல் மருகன், காஅய்க்கடவுள், வெறிகொண்டான் என பல பெயர்கள் உள்ளதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம். இதனை,

> **“முருகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலான்’’[22]**

என்னும் பெயர்களில் குறிப்பிட்டுள்ளனர் என்பர் மு.சண்முகம் பிள்ளை. முருகப் பெருமானை உள்ளன்புடன் வழிபடும் அடியார்க்கு நல்வழி காட்டி வேண்டியோர் வேண்டியாங்கு அருள்பவன் என்பதனை,

**“வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட**

**ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே’’ (திருமுருகு. 248–249)**

என்னும் திருமுருகாற்றுப்படை அடிகள் தெளிவுப் படுத்துகின்றன.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோறாடல், பழமுதிர்சோலை போன்றவை முருகனின் அறுபடை வீடுகள் என்று திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

முருகன் மலைகளிலும் குன்றுகளிலும் வாழ்பவன் என்பதை,

**“அறம் புணை ஆகத்தேற்றி, பிறங்கு மலை**

**மீமிசைக் கடவுள் வாழ்த்தி கைதொழுது**

**ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி’’ (குறிஞ்சி. 208–210)**

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிகள் மூலம் அறியமுடிகிறது. முருகன் விரும்பி உறையும் இடமாக,

**“காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**

**யாறும் குளனும் வேறுபல் வைப்பும்**

**சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்**

**மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்’’ (திருமுருகு. 223–226)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

காடு, கவின்பெற்று துருத்தி, ஆறு, குளம், சதுக்கம், முச்சந்தி, பூங்கடம்பு, மன்றம், பொதி, கந்து ஆகிய இயற்கைச் சூழலில் உறைவதாகக் கூறுவதோடு அதனை வழிபட்டதனையும் அறியமுடிகிறது.

## முருகனின் கோயில்கள்

முருகனுக்குச் சங்க காலத்திலேயே கோயில் இருந்ததை,

**“கொடி நுடங்கு மறுகில் கூடல்குடாஅது**

பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய

ஒடியா விழவின், நெடியோன் குன்றத்து'' (அகம். 149:14–16)

என்றும்,

''சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்

சினமிகு முருகன் தன்பாங் குன்றத்து

அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை'' (அகம். 59:10–13)

என்றும்,

''அணங்குடை முருகன் கோட்டத்துக்

கலம்தொடா மகளிரின் இகந்துநின் றவ்வே'' (புறம். 299: 6–7)

என்றும்,

''அணங்குடை வரைப்பகப் பொலியவந் திறக்கும்

திருமணி விளக்கின் அலைவாய்ச்

செருமிகு சேஎயொடு உற்ற சூளே'' (அகம். 266:19–21

என்றும் வரும் பாடலடிகளில் சூரனையும் அவன் சுற்றத்தையும், நீண்ட வேலால் அழித்த முருகன் உறையும் இடமாகத் திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாயில் திகழ்ந்துள்ளது. திருப்பரங்குன்றத்தில் திருவிழாக்கள் நடந்த வண்ணமாக இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

## திருமால்

பண்டைய காலங்களில் முல்லை நில ஆயர்களின் சிறப்பு மிக்க கடவுள் மாயோன் என்பர். சங்க இலக்கியங்களில் மால், திருமறுமார்பன், நேமியோன், திகிரியான், முதல்வன், நெடியோன், முந்நீர் வண்ணன், வெய்யோன், மாய வண்ணன், அறிதுயிலோன் என்னும் பல பெயர்கள் காணப்படுகின்றன. மாயோன் வண்ணத்தைக் கடல், வானம், காயாம் பூ, கடல், இருள், நீலமணி முதலான நிறத்தோடு ஒப்பிட்டனர். நீலமணி போன்ற அழகும் அலை

கிளர்ந்து ஏவித்தல் இல்லாத அமைதியாக இருக்கின்ற கடலும் நீர் சுமந்த கார் மேகமும் திருமாலின் மேனிக்கு ஒப்புமையாகக் குறிப்பிடப்படுகிறது. இதனை,

**''திருமணி திரைபாடு அவிந்த முந்நீர்**

**வருமழை இருஞ்சூல் மூன்றும் புரையும் மாமெய்'' (பரி. திருமால். 46:7)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

திருமால் வேத முதல்வன் என்று அழைக்கப்படுகிறான். நற்றிணையின் கடவுள் வாழ்த்து திருமாலை வேத முதல்வன் என்று குறிப்பிடுகிறது. இதனை,

**''மாநிலஞ் சேவடியாகத் தூநீர்**

**வளைநரல் பௌவம் உடுக்கையாக**

**வேத முதல்வன் என்ப**

**தீதற விளங்கிய திகிரியோனே''**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகின்றது.

திருமால் தன் மார்பில் திருமகளைக் கொண்டிருக்கிறான் என்பதனை,

**''பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்**

**திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரியும்'' (பெரும். 9–10)**

என்னும் பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

உலகின் தோற்றத்திற்கு முதற்காரணமாக விளங்குபவன் திருமால். மக்கள் பிறவிப்பிணியில் இருந்து விடுபட்டு உய்வதற்கு உதவும் பெருமானை மாயோன் என்று கூறுவதனை,

**''மாஅயோயே மாஅயோயே**

**மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி**

**மணிதிகழ் உருபின் மாஅயோயே'' (பரி. 3:1–3)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

## இந்திரன்

தேவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பதால் வேந்தன் என அழைக்கப்படுகிறான். **“வேந்தன் மேய தீம்புனல் உலகமும்’’**[26] என மருத நிலத்துக்கு உரிய கடவுளாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

இந்திரன், திருக்கிளர் செல்வன் எனக் குறிக்கப் பெறுகிறான். இவன் ஆயிரம் யானைகள் உடையவன் நூறு வேள்விகளை நடத்தியவன். யானையின் பிடரி மேல் ஏறி வருபவன் என்று புகழப்படுகிறான். இதனை,

> **“நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல**
>
> **வேள்வி முற்றிய வென்றடு கொள்ளத்து**
>
> **ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்**
>
> **தாழ்பெரும் தடக்கை உயர்ந்த யானை**
>
> **எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வன்’’ (திருமுருகு. 155–159)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகின்றது. இந்திரனுக்கு எனத் தனியாகக் கோயில் இருந்தகை,

> **“அண்டிரன் வரூஉம் என்ன ஒண்டொடி**
>
> **வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலும்’’ (புறம். 41:2–3)**

என்னும் பாடலடியின் மூலம்அறியமுடிகிறது.

**“இடியேற்றை உடையவன்’’ (பரி. 8), “இந்திர விழவு’’ (ஐங். 62), “வச்சிரத்தான்’’ (பரி. 98), “ஆயிரங்கண்ணோான்’’ (கலி. 105), “இந்திரவிழவிற் பூவினன்’’ (ஐங். 62), “யானையை ஊர்தியாக உடையவள்’’ (திருமுருக. 459), “ஐயிருநூற்று மெய் நயனத்தவன்’’(பரி. 9), “வானவில்லை வில்லாகக் கொண்டவன்’’(பரி. 241), “ஏறு அதிர்க்கும் இந்திரம் இரும் உருமென’’(பரி. 8)** என்ற பாடலடிகளில் இந்திரன் பற்றிய குறிப்பும் இந்திரவிழாவிற்கான குறிப்புகளும் காணப்படுகின்றன.

## வருணன்

பரந்த கடலில் தொழில் செய்தவர்கள் பரதவர்கள் என்று அழைக்கப்பட்டனர். கடலை நம்பி வாழ்ந்திருந்த நெய்தல் நிலத்தில் பரதவர் நீரையே தங்கள் தெய்வமாகக் கொண்டிருந்தனர். நீரினின்று தங்களைக் காக்க வேண்டி பரதவர்கள் வழிபாடு செய்தனர். கடல் கடவுளுக்கு வாரளன் என்ற பெயர் இருந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. அணன் என்ற சொல்லுக்கு உயர்ந்தவன் என்பது பொருளாகும். வார் என்பது கடலைக் குறித்தது என்பர். ‘‘வருணன் மேய பெருமணல் உலகம்’’[36] (தொல்.அகத். 5:4) என்கிறது தொல்காப்பியம். நெய்தல் நிலத் தெய்வமாகிய வருணனைப் பரதவர்கள் வணங்கினர். நெய்தல் நில மக்கள் முழுநிலா நாளில் கடலுக்குள் மீன்பிடிக்கச் சென்று கடல் தெய்வத்தை வழிபட்டனர் என்ற செய்தியை,

> **‘‘பழையர் மகளிர் பனித்துறைப் பரவப்**
>
> **பகலோன் மறைந்த அந்தி ஆர்இடை’’ (அகம். 201:7–8)**
>
> **‘‘அந்தில்**
>
> **அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி’’ (அகம். 246:7–8)**

என்ற பாடலடிகளால் அறியலாம்.

பரதவர்கள் முழுநிலவு நாளில் அலையின் சீற்றம் கடலில் அதிகமாக இருக்கும் என்பதால் மீன்பிடிக்கச் செல்லாது தழையாடை உடுத்த தம் மகளிரொடு சேர்ந்து வருணனை வழிபடுவர். சினையான சுறாமீனின் கொம்பை நட்டு அதில் தெய்வத்தை வருவித்து, அத்தெய்வத்திற்குத் தாழை மலரையும், பனை மரத்தில் வடித்த கள்ளையும் படைத்து வழிபட்டு பின்னர் தாழை மலரைச் சூடிக் கொண்டும், கள்ளைப் பருகியும் தாம் விரும்பிய உணவினை உண்டும் ஆடிப்பாடி மகிழ்வர் இதனை,

> **‘‘சினைச்சுறவின் கோடுநட்டு**
>
> **மனைச் சேர்த்திய வல்அணங்கினான்**
>
> **மடல் தாழை மலர் மலைந்தும்**
>
> **பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்**

**புன்தலை இரும் பரதவர்**

**பைந்தழை மா மகளிரொடும்**

**பாய்இரும் பனிக்கடல் வேட்டம்செல்லாது**

**உலவு படிந்து உண்டாடியும்'' (பரி. 86:93)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. சுறாவின் கொம்பு கடல் தெய்வமாக மதிக்கப்பட்டது.

## கொற்றவை

பாலை நிலத்தவரின் சிறப்பு மிக்க கடவுள் கொற்றவை என்பர். தமிழர்களின் வெற்றிக்குரிய தெய்வமாக விளங்குவது கொற்றவை. போருக்குச் செல்லும் முன் கொற்றவையை வழிபடுவதும் போரில் வெற்றி பெற்றதும் கொற்றவையைப் புகழ்ந்து ஏத்துவதும் வீரர்களின் வாழ்வில் நடைபெறும் செயல்களாக விளங்கியுள்ளது. இதனை,

**''தமிழ் வீரர் வணங்கிய தெய்வம் கொற்றவை ஆகும். வெற்றி தரும் தாயே கொற்றவை என்று பெயர் பெற்றார்''[23]**

என்பர் ரா.பி.சேதுப்பிள்ளை.

தொல்காப்பியம் கொற்றவை வழிபாட்டினைத் துறை ஒன்றின் வழி வலியுறுத்துகிறது.

**''மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த**

**கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே''[24]**

என்ற நூற்பாவின் மூலம்அறியமுடிகிறது. கானகத்தில் உறையும் மறவர்களின் தெய்வமாகப் போற்றப்படுகிறாள்.

மரபுநிலை வழுவாது அயிரை மலையில் உறைகின்ற கொற்றவைத் தெய்வத்தைச் சேர மன்னர் வணங்கி வந்தனர் என்பதனை,

**''உருகெழு மரபின் அயிரை பரவியும்'' (பதிற். 90:19)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

''தமிழிலக்கியத்தில் கொற்றவை என்பதற்கு ஆரலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள், வெற்றி தருபவள் என்ற பொருள் இருப்பதைக் காணலாம். பழங்கால வேட்டை தெய்வமே பின்னர் இப்படி தேவதையான டையானாவும் வேட்டைத் தெய்வமே. இவளே ஆற்றுத்துறைகளில் காவல் செய்பவள், காட்டு விலங்குகளையும் வேட்டுவர்களையும் காப்பவளாகக் கருதப்பட்டாள். வில்லும், அம்பும் கையில் வைத்திருப்பாள். தலையில் பிறைநிலா அணிந்திருப்பாள். தமிழிலக்கியத்தில் வரும் கொற்றவையும் டயானாவும் சிலவற்றில் ஒற்றுமையுடன் திகழ்வதை உணரமுடியும். இனக்குழு மக்களின் வேட்டைக்குக் கொற்றம் தருபவளான கொற்றவையே பின்னர் வேந்தருக்குக் கொற்றம் தருபவளாகக் கொண்டாடப்பட்டாள்''[25]

என கொற்றவை தோற்றம் பற்றி பி.எல்.சாமி குறிப்பிடுகிறார்.

''அஞ்சு வரும் மரபில் கடவுள் அயிரையின் நிலைஇ'' (பதிற். 79:17)

எனும் பாடலில் அச்சம் தருகின்ற முறைமையினை உடைய கொற்றவை உறைகின்ற அயிரைமலை எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது. பிளவுகள், குகைள் இவற்றையிடையே மலைச்சாரலில் எழுத்தருளியுள்ள வெற்றி நிரம்பிய திரிசூலத்தைக் கையிலே கொண்ட கொற்றவைக்குப் பலிக்கடனை நிறைவேற்றுதலை,

''விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்

கடனும் பூணாம்'' (குறுந். 218:1–2)

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

## சிவன்

தோற்றமும் முடிவும் அற்ற இறைவனாக அறியப்படும் கடவுள் சிவன். சிவன் சங்க இலக்கியங்களில் மழுவாள் முருக்கிய முரண்மிகு செல்வன், ஆலமர் செல்வன், ஆல்கெழு கடவுள், நீலமணிமிடற்றன், உமையொருபாகன், முக்கண் செல்வன், நாட்டத் திறையோன், காரி உண்டிக் கடவுள், மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன், ஐந்து தலைகளை உடைய முக்கண் செல்வன், பிறவாயாக்கைப் பெரியோன், கறை மிடற்று அண்ணல், ஆல்அமர் கடவுள் என்னும் பல பெயர்கள் காணப்படுகின்றன.

அந்தி வானத்தைப் போன்று செந்நிறம் படைத்தவன் என்று சிவபெருமானின் தோற்றச் சிறப்பினை,

> **“வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**
>
> **உருஉடன் இயைந்த தோற்றம் போல**
>
> **அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ’’ (அகம். 360:6–8)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்தில் தேவர்களைக் காக்கும் பொருட்டு இறைவன் முதலில் வந்த விடத்தை அருந்தித் தேவர்களைக் காத்த தன்மையினை,

> **“பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி**
>
> **நீல மணிமிடற்று ஒருவன்’’ (புறம். 91:5–6)**

என்ற பாடலடியின் மூலம் உணரமுடிகிறது. சிவன் தன் தலையில் கங்கை ஆற்றைக் கொண்டிருக்கும் தன்மையினை,

> **“ஆறுஅளி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து**
>
> **தேறுநீர் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி**
>
> **மாறாப்போர் மணிமிடற்று எண்கையாய்’’ (கலி. 1:1–4)**
>
> **“பிறங்குநீர் சடைக்கரந்தான்’’ (கலி. 150:9)**

என்னும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. தன் தலையில் அழகிய பிறைச் சந்திரனைச் சூடியுள்ளான். இதனை,

> **“கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்**
>
> **பிறைநுதல் விளங்கும் ஒருவன் போல’’ (புறம். 55:4–6)**

எனும் பாடலடியின் மூலம் உணரமுடிகிறது.

நான்மறைகளை உணர்ந்து மூன்று கண்களையுடைய சிவபெருமான் ஆலமுற்றம் என்னும் இடத்தில் வீற்றிருப்பவர் என்பதை,

**''நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்**

**ஆலமுற்றம் கவின்பெறத் தைஇய'' (அகம். 181:16–17)**

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## கோயில்

திருமாலின் கொப்பூழ் மலர்ந்த தாமரை போல் மதுரை விளங்கும். தாமரைப்பூவின் இதழ்கள் போல மதுரைத் தெருக்கள் விளங்கும். தாமரைப் பொகுட்டுப் போல நகர் நடுவண் சிவபெருமான் கோயில் விளங்கும். தாமரையின் தாதுக்கள் போல சிவபெருமானை வணங்கும் மதுரை மக்கள் விளங்குவர். தாமரைத் தேன் உண்ண வரும் தும்பிகளைப் போலப் பாண்டியனிடம் பரிசில் பெற வரும் பரிசிலர் விளங்குவர். கோயில் வேத ஒலி கேட்டு மதுரை மக்கள் துயில் எழுவர். வஞ்சி நகரைப் போன்றும் உறையூரைப் போன்றும் கோழி கூவி எழுவதில்லை. இதனை,

**''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை**

**பூவொடு புரையும், சீர்ஊர் பூவின்**

**இதழகத்து அனைய தெருவம் இதழகத்து**

**அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்**

**தாதின் அனையர் தண்தமிழ்க் குடிகள்**

**தாதுஉண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்**

**பூவினுள் பிறந்தோன் நாவினுள் பிறந்த**

**நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப**

**ஏம இன்துயில் எழுதல் அல்லதை**

**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**

**கோழியின் எழாது எம்பேர் ஊர் துயிலே'' (பரி. மதுரை. 8)**

என்ற பாடலின் மூலம் அறியலாம். மாயவன் கொப்பூழ் மலர்ந்த தாமரையில் வீற்றிருப்போன் பிரம்மன். அவன் வாயிலிருந்து பிறந்தது வேதம். அந்த வேத ஒலி எழ மதுரை மக்கள் துயில் எழுவர்.

## கோயிலோடு குடியமர்த்தினான்

திருமாவளவன் காடுகளை அழித்து நாடாக்கிக் கோயில் எடுப்பித்து, கோயிலைச் சுற்றிலும் குடியமர்த்தினான் என்னும் செய்தியினை,

> **‘‘காடுகொன்று நாடாக்கிக்**
>
> **குளம் தொட்டு வளம் பெருக்காப்**
>
> **பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்**
>
> **கோயிலொடு குடிநிறீஇ’’ (பட்டினப். 283–286)**

எனும் பாடல் வழி அறியமுடிகிறது. கோயில்களில் பூசைகளும் சிறப்புத் திருவிழாக்களும் எவ்விதத்தடையும் குறைவுமின்றி நடைபெற போதுமான திட்டங்களை வரையறை செய்திருந்தனர் என்பதையும், சங்க காலத்தில் அரசர்கள் குறுநில மன்னர்கள் திருக்கோயில்களுக்கு வேண்டிய நிவந்தங்களையும் பொன் பொருட்களை வழங்கியதையும் அறியமுடிகிறது.

## செங்கற்களால் கட்டப்பட்ட கோயில்

சங்க காலத்தில் சோழ மன்னர்களது இறுதி அரசனாகக் கருதப்படும் செங்கண்ணான் என்பவன் சுமார் எழுதத்தெட்டு மாடக் கோயில்களைக் காவிரியாற்றின் கரையோரத்தில் எடுப்பித்தான் என்று கருதப்படுகிறது. ஆனால் அவற்றுள் ஒன்றுகூட நமக்குக் கிடைக்கவில்லை. அவை செங்கல் சுதையால் கட்டப்பட்டிருந்ததால் அழிந்தன போலும். செங்கற்களால் கட்டப்பட்ட இறைவன் உறையும் கட்டடம் வீழ்ந்த செய்தியைக்கூட சங்க இலக்கியப் பாடல் ஒன்று படம்பிடித்துக் காட்டுகிறது. இதனை,

> **‘‘இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
>
> **மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து**
>
> **எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று**

ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை'' (அகம். 167:13–16)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது.

## நடுகல் வழிபாடு

சங்க காலத்தில் தமிழகத்தில் இறந்தோரை வழிபடும் வழக்கம் இருந்துள்ளதனையும் வீரதீர மரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டதனையும்அறியலாம்.

தமிழகத்தில் நடுகல் வழிபாடு சங்க காலத்திற்கு முன்பிருந்தே வந்துள்ளதை அறியமுடிகிறது. பெருங்கற்காலம் தொடங்கிய காலத்திலிருந்தே தமிழகத்தில் நீத்தார்க்கு நினைவுக் கற்கல் எடுப்பதும் அவர்களை வழிபடும் வழக்கமும் இருந்து வருகிறது. இவ்வாறு இறந்து பட்டவர்களுக்கு எடுக்கப்படும் நடுகல் சிறப்பாகக் கருதப்பட்டு வந்துள்ளது. நடுகல்லானது நினைவுக்கல் என்றும் வீரக்கல் என்றும் அழைக்கப்படுகிறது.

போரில் இறந்த வீரனின் நினைவாக அவனுடைய பெயரும் பெருமையும் எழுதி நடப்பட்டது. நடுகல் வழிபாடு மிகவும் பழமையான வழிபாடாகும். நடுகல் வழிபாடே உருவ வழிபாட்டிற்கு வழியமைத்துக் கொடுத்தது எனலாம்.

## தொல்காப்பியத்தில் நடுகல்

காலத்தால் முந்திய முதன்முதலில் கிடைத்த இலக்கண நூல் தொல்காப்பியமாகும். முதற்கண் நடுகல் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. குறிஞ்சி நிலத்தில் ஏற்படும் போருக்கு வெட்சிப்போர் என்று பெயர். இது ஆநிரை கவர்தலும் ஆநிரை கவர்ந்து சென்ற பசுக்களை மீட்கும் போதும் எடுப்பது வழக்கம். இதனைத் தொல்காப்பியர் ஆறுநிலைகளாகக் குறிப்பிடுவர். இதனை,

**''காட்சிக் கால்கோள் நீர்ப்படை நடுதல்**

**சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தவென்று**

**இருமூன்று வகையிற் கல்லொடு புணர''[26]**

எனும் இவ்வடிகளில் காட்சி, கால்கோள், நீர்ப்படை நடுதல், பெரும்படை, வாழ்த்தல் என நடுகல் எடுத்து வழிபடும் சடங்கு முறைகளைக் குறிப்பிட்டுள்ளார். இதில் காட்சி என்பது நடுகல்லுக்குரிய சிறந்த கல்லை எத்தகைய புனிதமான இடத்திலிருந்து கொண்டு வருவது

என்பதை முடிவு செய்து அங்கிருந்து எடுத்து வருவதனைக் குறிக்கும். சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்குக் கோட்டம் எடுக்கச் சேரன் செங்குட்டுவன், இமயத்திலிருந்து கல்லெடுத்து வந்த செய்தி இடம் பெற்றிருக்கிறது. மேலும் தொல்காப்பியர் சொன்ன ஆறுவிதச் செய்திகளும் இளங்கோவடிகள் பெயர் சூட்டியிருப்பதும் இங்கு நினைக்கத்தக்கதாகும்.

காட்சி என்பது கல்லின் அளவு. அதன் தன்மைகளை ஆராய்ந்து கல்லைத் தேர்ந்தெடுத்தல். இவ்வாறு தேர்ந்தடுெக்கப்பட்ட கல்லிலே ஓர் உருவம் செதுக்கப்படும். இவ்வுருவம் சில விதிகளுக்குட்பட்டு அமைக்க வேண்டும். கால்கோள் என்பது அந்தக் கல்லை நடுவதற்குரிய நல்ல நிமித்தத்தைப் பார்த்தல், நீர்ப்படை என்பது அக்கல்லை நீராட்டுதல், 'நடுதல்' என்பது மறவன் இறந்த இடத்திலோ வேறு ஏற்ற இடத்திலோ கல்லை வீரனாகப் பாவித்து அவன் நினைவாக நடுதல் ஆகும்.

பெரும்படை என்பது நடுகல்லுக்கு முன் பெருஞ்சோறு வைத்து வழிபடுவதாகும். இன்றும் இறந்தவர்களுக்குத் திதி கொடுக்கின்ற பொழுது அவர்கள் விரும்பிச் சாப்பிடும் உணவைப் படைப்பது என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். வாழ்த்தல் என்பது இறந்துபட்ட வீரனின் புகழைப் பாடுதலாகும். இறைநிலையை அடைந்துவிட்ட வீரனைத் தங்களைக் காக்குமாறு வேண்டுவதாகவும் கொள்ளலாம்.

## இலக்கியத்தில் நடுகல் வழிபாடு

போரில் மாய்ந்த மறவர்களைப் பெரிதும் மதித்து அவர்களின் பெயரையும், வீரச் செயல்களையும் கல்லிற் பொறித்து, கல்நட்டு, மாலை சூட்டிப் படையலிட்டு மக்கள் வழிபாடு செய்தனர். நடுகல் வழிபாட்டை இறந்தவர்களின் உறவினர் மட்டுமின்றி பிறரும் செய்தனர். வேங்கைப் பூவைப் பனந்தோட்டிற் புனைந்து தொடுத்து இலைமாவைச் சூட்டிக் கோவலர் வழிபாடு செய்ததை,

**''ஊர்நனி இறந்த பார்முதிர் பறந்தலை**

**ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்**

**போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்**

**பல்லான் கோவலன் படலை சூட்ட'' (புறம். 265:1–4)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது.

அதியமான் நெடுமானஞ்சி போரில் மாண்டபின் அவனுக்கு நடுகல் நாட்டிக் கல் வைத்து வழிபட்டபோது, நாடு கொடுப்பினும் ஏலாதவன் இக்கல்லை ஏற்பனோ? என்று ஔவையார் கேட்டச் செய்தியை,

**''நடுகற் பீலி சூட்டி நாரரி**

**சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ?**

**கோடுயர் பிறங்குமலை கெழீஇய**

**நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே'' (புறம். 232:3–6)**

என்ற பாடலின் மூலம் உணரமுடிகிறது.

பகைவரை எதிர்த்துப் போராடிக் களிறுகளை வீழ்த்தித் தாமும் மாய்ந்த மறவர்களின் நடுகல்லை வழிபடுதலின்றி, நெல்லைச் சொரிந்து வழிபடும் கடவுள் வேறில்லை என்பதை,

**''ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி**

**ஒளிறேந்து மருப்பின் களிறெறிந்து வீழ்த்தெனக்**

**கல்லே பரவின் அல்லது**

**நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே'' (புறம். 335:9–12)**

என்ற பாடலின் மூலம் அறியமுடிகிறது. போர் முனையில் போரிட்டு யானைகளைக் கொன்று இறந்தவனுக்கு வைக்கப்பட்டுள்ள நடுகல்லைத் தெய்வமாக வணங்குவதைவிடவும் வேறு தெய்வம் இவ்வூரில் இல்லை என்று கூறப்படுகிறது. தெய்வத்தின் செயல்களை அடிப்படையாகக் கொண்டு இவ்வெண்ணம் முகிழ்த்தது எனலாம். தெய்வம் என்றால் மக்களைக் காத்து நிற்கும் என்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டு. அதேபோல்தான் பகைவர்களிடமிருந்து மக்களைக் காப்பாற்ற போரில் வீரமரணமடைந்த வீரனைத் தெய்வமாக்கி வணங்குவதை விடவும் சிறந்த தெய்வம் இல்லை என்ற பொருளில் புலவர் கூறியுள்ளார்.

வீரமறவருக்குப் பெருமைச் சேர்க்கும் பொருட்டு நடுகல் நாட்டி, அதை நீராட்டி, மஞ்சள் பூசி ஆத்தி நாரால் கரந்தைப் பூவைத் தொடுத்து மாலையாக்கி வழிபட்டனர். இதனை,

''தொடிதோள் இவர்க! எவ்வமும் தீர்க!

நெறிஇருங் கதுப்பின் கோதையும் புனைக!

ஏறுஇடை இனநிரை பெயர, பெயராது

செறிசுரை வெள்வேல் மழவர்த்தாங்கிய

தறுக ணாளர் நல்இசை நிறுமார்

பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்

நட்ட போலும் நடாஅ நெடுங்கல்

அகல்இடம் குயின்ற பல்பெயர் மண்ணி

நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய

அம்பு கொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்

செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி

வரிவண்டு ஆர்ப்பச்சூட்டி, கழற்கால்

இளையர் பதிப்பெயரும்'' (அகம். 269:1–13)

என்னும் பாடலின் மூலம் உணரமுடிகின்றது.

நடுகற்களான தம் முன்னோர்களைத் தம்குலதெய்வமாகக் கருதி வணங்கும் மரபும் இருந்துள்ளது. படையலிடுதலோடு வேண்டுதலும் செய்தனர். நடுகற்களான தம் முன்னோரின் முன்பு நின்று போருக்குச் சென்றுள்ள வீரனின் மனைவி வேண்டுதல் செய்ததை,

''நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது

விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்

ஒ............... வேந்தனொடு

நாடுதரு விழுப்பகை எய்துக எனவே'' (புறம். 306:4–6)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. போரில் நீத்தார் வழிபாடாகிய நடுகல் வழிபாட்டைத் தெய்வங்களைக் காட்டிலும் சிறந்ததாகப் பழந்தமிழர் வழிபட்டனர் என்பது புலனாகிறது. இன்றும் தமிழர் மரபில் தம் குடியில் இறந்துபோன முன்னோர்களைத் தெய்வமாக வழிபடுவதும் அவர்களுக்கு நினைவிடங்கள் எழுப்பி, அவர்கள் இறந்த நாளில் அன்னதானமிட்டு நினைவுநாளைக் கொண்டாடுவதும் நடைமுறையில் இருப்பதை அறியலாம். அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செம்மையுறச் செய்தவர் மன்னராலும் மற்றவர்களாலும் போற்றப்பட்டனர் என்பதைப் புறநானூறு விளக்குகின்றது.

> **''இறந்து போனவர்களின் நினைவாக நடப்படும் நடுகற்கள் முன்னோர் வழிபாட்டுடன் தொடர்புடைய நடுகற்கள் மறவர்களின் வீரச் செயலைப் புகழும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளதாக சங்கப் பாடல்கள் தெரிவித்துள்ளன. சங்கப்பண்பாட்டிற்கு முந்தைய சமூகமான பெருங்கற்படைக்கால பண்பாட்டிலேயே இவ்வாக்கம் பெருகி இருந்துள்ளது''[27]**

என்று சிலம்பு நா.செல்வராசு குறிப்பிடுகின்றார்.

பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி போருக்குச் செல்லும்போது பசு, பெண்டிர், மூத்தோர் போன்றவர்களோடு இறந்துபோன முன்னோர்க்கு ஆற்றவேண்டிய கடன்களைச் செய்வாரையும் பாதுகாப்பாக இருத்திவிட்டுப் போர் செய்வான் என்பதனை,

> **''தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
>
> **பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்'' (புறம். 9:3–4)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது. இறந்தோர்க்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்வோர் 'பொன்போற் புதல்வர்' என்று போற்றப்பட்டனர்.

## பீடும் பெயரும் எழுதும் மரபு

வீரர்களின் உருவத்தினை நடுகல்லில் பொறித்து அவர்தம் பேரையும் ஊரையும் அதில் எழுதி வைத்தனர். அவன் வீரத்தைக் காட்டும் வகையில் அவனுடைய படைக் கருவிகளையும் அருகில் ஊன்றச் செய்துள்ளனர். இதனை,

‘‘நடைமெலிந்து ஒழிந்த சேண்படர் கன்றின்

கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்

பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்

பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்

வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்

வெருவரு தகுந கானம்’’ (அகம். 131:8–13)

என்றும்,

‘‘மருங்கல் நுணுகிய பேஎம்முதிர் நடுகல்,

பெயர்பயம் படரத் தோன்று குயில்எழுத்து’’ (அகம். 297:5–8)

என்றும்,

‘‘விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்

எழுத்துடை நடுகல்’’ (ஐங்குறு. 352:1–2)

என்றும்,

‘‘அரம்போழ் நுதிய வாளி அம்பின்

நிரம்பா நோக்கின் நிரையம் கொண்மார்,

நெல்லி நீளிடை எல்லி மண்டி,

நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்

பெயரும் பீடும்எழுதி, அதர்தொறும்

பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்

வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்’’ (அகம். 67:5–11)

என்றும் வருகின்ற பாடலடிகளின் மூலம் உணரமுடிகிறது.

## பெருஞ்சோற்று விழா

தெய்வமாக ஆக்கப்பட்டு வணங்கப்பட்ட மனிதர்களுக்கும் சங்ககால மக்கள் விழா

எடுத்துள்ளனர். வீரவணக்க விழாவாக இவ்விழா அரசர்களால் கொண்டாடப்பட்டுள்ளது. இல்லங்களிலும் பெருஞ்சோறு அளிக்கப்பட்டது. இது பெருவிருந்து என்று வழங்கப்பட்டுள்ளது. போர்க்காலங்களில் போர்க்களத்தில் இறந்த வீரர்களின் வீரத்தைப் போற்றும் வண்ணம் இருக்கின்ற வீரர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. இது 'பெருஞ்சோறு' 'பிண்டச்சோறு' என்று வழங்கப்பட்டது. அரசனின் அரண்மனையிலும் 'பெருஞ்சோற்று விழா' நடைபெற்றுள்ளது. அதியமான் சிறுசோற்று விழா, பெருஞ்சோற்று விழா இரண்டையுமே நிகழ்த்தியுள்ளான். இதனை,

**''சிறுசோற்றானும் நனிபல கலத்தன; மன்னே**

**பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன; மன்னே!'' (புறம். 235:4–5)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

அரசனுடைய வளமான அரண்மனையில் பெருஞ்சோற்று விழா நடைபெற்றுள்ளது. அரசன் இறந்தபின் அவன் பெருஞ்சோறு வழங்கிய முற்றம் பாழ்பட்டதை,

**''வரையாப் பெருஞ்சோறற்று முரிவாய் முற்றம்**

**வெற்று யாற்று அம்பின்எற்று? அற்றுஆகக்**

**கண்டனென் மன்ற; சோர்க என்கண்ணே'' (புறம். 261:3–5)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

நீடுருக்கு அரசனாகிய கூர்மையான வாளினையுடைய எவ்வி என்பவன் தன்னுடைய படைத்தலைவனுக்கு விடியற்காலையில் உறந்தூர் என்னுமிடத்தில் கள்ளினை உண்டு பெருஞ்சோற்று விழாவினை நடத்தினான் என்பதனை,

**''யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன்**

**வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்**

**நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்**

**அரிமண வாயில் உறந்தூர் ஆங்கண்**

**கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்இமிழ் அன்ன'' (அகம். 266:10–14)**

என்ற பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

> **‘‘நடுகல் வழிபாடு தோன்றியதைப் போன்று கோயிற் கட்டிடக்கலையும் இழவு வினைகளை ஒட்டியே வளர்ந்திருக்கலாம் என அறிஞர் கருதுவர். வட்டமான நிலப்படமுள்ள கோயில்களைக் கவனிக்கும்பொழுது இவற்றின் தொடக்கம் பெருங்கல் வடிவுப் புதை குழிகளிலே அமைந்துள்ளது எனலாம்’’[28]**

என்பர் கைலாசபதி.

பின்னாளில் பெருங்கோயிற் கட்டிடக்கலை உருவாவதற்கு இந்த நடுகல் வழிபாடு மூலமாய் அமைந்தது என்று அறிஞர்கள் கருதுகின்றனர். மேலும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு தலத்திற்கும் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டு, இருந்த இடத்தில் எழுந்துள்ளதை நாம் அறியமுடியும். பண்டைத்தமிழரின் போரிலே வீரமரணம் அடைந்தவரை வணங்கும் வழக்கம் காலமாற்றத்தில் சிறு தெய்வ வணக்கமாக மாறியது என்பதும், இது சமுதாய மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதும் பகுத்தறிந்து கொள்ளமுடியும்.

சங்க காலத்திலிருந்த வீரவழிபாடாகிய நடுகல் வழிபாட்டின் பரிணாம வளர்ச்சியே பிற்காலத்தில் எழுந்த கோயில் வழிபாட்டிற்கும் உருவ வழிபாட்டிற்கும் வழிவகுத்தது என்பர்.

> **‘‘பழந்தமிழர் வாழ்வில் நடுகல் வழிபாடு மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. நடுகல்லின் அமைப்பே பின்னர் தோன்றிய ‘கோயில்’ என்ற கட்டிட அமைப்பிற்கு முன்னோடியாக முன்மாதிரியாக அமைந்துள்ளது. நடுகற்கள் பெரும்பாலும் மரங்களின் அருகிலேயோ நீர்நிலைகளின் அருகிலேயோ, சந்திகளிலேயோ, ஊர் எல்லைகளிலேயோதான் அமைந்துள்ளன. மேலும் நடுகற்கள் மேல் வெயில்படாதிருக்க துணிப்பந்தல் அமைப்பர். விலங்கு முதலியவற்றால் ஊறு ஏற்படாமலிக்க சுற்றிலும் வில், வேல், வாள், கேடயத்தை ஊன்றுவர். நடுகல்லில் தங்கியுள்ள பல்லியிடம் சகுனம் கேட்பர்’’[29]**

என்பர் இராசு.பவுன்துரை.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முறையில் அமைக்கப்படுகின்ற கோயில்களுக்கு வித்தாக அமைத்தது நடுகல் வழிபாடே எனலாம். கோவில்களில் தல விருட்சங்கள் சிறப்பாக வழிபடப்படுவதும் கோவில்களில் தெய்வங்களுக்குப் பீடம் அமைத்து தெய்வங்களின் உருவங்களைச் செதுக்கி வைத்து வழிபாடு செய்வதும் நடுகல்லில் வீரனின் பீடும் பெயரும் எழுதி வணங்கியது போல தெய்வங்களின் பெருமைகள், செயல்கள், தெய்வங்களைக் குறித்த கதைகள் போன்றவற்றைக் கோயில்களில் ஓவியங்களாகவும் சிற்பங்களாகவும் வரைந்து செதுக்கப்படுவதும் நடுகல் வழிபாட்டின் வளர்ச்சியே என்பர்.

## தொகுப்புரை

- காடுகளிலும் குன்றுகளிலும் வாழ்ந்த மனிதன் இடி, மின்னல், மழை, காற்று, கொடிய விலங்குகள், நச்சு உயிர்கள் போன்றவற்றைக் கண்டு அச்சமுற்றான். அவ்வச்சத்தின் காரணமாக இயற்கையைக் கட்டுப்படுத்தும் நோக்கில் இயற்கையை வணங்க ஆரம்பித்தான்.
- இருளைப் போக்கும் தன்மையில் சூரியனை வணங்கினர். சூரியனுக்குத் தனியாகக் கோயில் எழுப்பி வணங்கியதற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. சிலப்பதிகாரம் முதன்முதலில் ‘உச்சிக்கிழான் கோட்டம்’ என்று குறிப்பிடுகிறது. அதன்பின் தோன்றிய இலக்கியங்களும் உச்சிக்கிழான் கோட்டம் பற்றிக் குறிப்பிடாமையால் கடல் கோள்களால் அழியப்பட்டிருக்கும் என்று அறியமுடிகிறது.
- தீயினைக் கண்டுபிடிக்காத சூழலில் இருளினைக் கண்டு அஞ்சத் தொடங்கிய மனிதன் வெளிச்சமும் குளிர்மைத் தன்மையுடையதுமான திங்களைக் கண்டவுடன் மகிழ்ச்சியடைந்தான். இம்மகிழ்ச்சியின் காரணமாக திங்களை வணங்கத் தொடங்கினான் என்பதனைக் காணமுடிகின்றது.
- மழைவேண்டி வணங்குதல், வெள்ளப் பெருக்கினால் ஏற்பட்ட அச்சத்தின் வழி மழை நிற்க வேண்டும் என்பதற்காக வணங்குதல் என்ற இருவேறு நிலைகளில் வழிபட்டனர் என்பதனைக் காணமுடிகின்றது.
- அணங்கு வழிபாடு உருவமில்லாத தெய்வமாகவும், ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாக விளங்குவதை அறியமுடிகிறது.
- ஐவகை நிலங்களுக்கேற்ப மக்களுடைய வழிபாட்டு முறைகளும், வழிபாட்டுத் தெய்வங்களும் அமைகின்றன. குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும்,

மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும், பாலைக்குக் கொற்றவையும் தெய்வங்களாக அமைகின்றன.

- நடுகல். பிற்காலத்தில் கோயில் என்ற நிறுவனம் அமைய அடித்தளமாக அமைந்தது.
- நடுகல் வழிபாடு நடைபெறும் முறை மற்றும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டிருப்பதைக் கொண்டு பெருங்கோயில் கட்டிடக் கலை வளர்ச்சிக்கு நடுகல் வழிபாடு அடிப்படையாக இருந்திருக்கிறது என்பதை அறியலாம்.

# சான்றெண் விளக்கம்

1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 504
2. தொல். பொருள். 85
3. இரா. சீனிவாசன், சக்தி வழிபாடு, ப. 136
4. ந.சி. கந்தையா, தமிழர் சரித்திரம், ப. 124
5. சிலம்பு. கனாத்திறம் உரைத்த காதை. 11
6. இரா. மதிவாணன், சிலம்பின் காலக்கணிப்பு, ப. 120
7. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 59–61
8. உ.வே.சா. (ப.ஆ.), சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், ப. 250
9. சிலம்பு. நடுகல் காதை. 89
10. வாழ்வியற்களஞ்சியம் தொகுதி–8, ப. 416
11. தொல். சொல். 57
12. தொல். பொருள். 513
13. தொல். எழுத்து. 228
14. மா. இராசமாணிக்கனார், மொஹஞ்சதரோ அல்லது சிந்துவெளி நாகரிகம், ப. 14
15. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 18
16. சிலம்பு. கனாத்திறன் உரைத்த காதை. 59
17. குறள். 20
18. தொல். பொருள். 252
19. சிலம்பு நா. செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப. 38
20. கடிகாசலம் (ப.ஆ.), சங்க இலக்கிய கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு, ப. 192
21. கா.சு. பிள்ளை, தமிழர் சமயம், ப. 46
22. மு. சண்முகம் பிள்ளை, முதற்குறித்த நூல், பக். 70–71
23. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழர் வீரம்த, ப. 7
24. தொல். பொருள். 1005
25. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப. 64
26. தொல்.பொருள். 5
27. சிலம்பு நா.செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப. 45

28. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 38

29. செ. இராசு, 2007, ப. 60

# முடிவுரை

மனிதனின் உணவு, உடை ஆகியவற்றின் தேடலோடு உறையுள் பற்றிய தேடலும் அவசியமானதாக இருந்தது. இயற்கை சீற்றம், கொடிய விலங்குகள் முதலானவற்றிலிருந்து தற்காத்துக்கொள்ள உறையுள் அவசியமாயிற்று. கற்குகை, மரப்பொந்து ஆகிய இயற்கையிடங்கள் தொடக்ககால மனிதனின் வசிப்பிடமாக இருந்த போதிலும் அவை முழுமையான பாதுகாப்பிற்குத் தேவையானதாக அமையாததால் உறையுளை கட்டமைக்கும் சிந்தனையும் மனிதனிடம் தொடங்கியது. இவ்வாறு மானுட வாழ்விற்குத் தேவையான மிக முக்கிய கருவிகளாம் உணவு, உடை, உறையுள் ஆகியனவற்றில் மேம்பட்ட சமுதாயமே நாகரிகச் சமுதாயமாகக் கருதப்படுகின்றது.

பண்டைத் தமிழர் கலையோடியைந்த வாழ்க்கை வாழ்ந்தனர். கலை மனிதனின் உள்ளக் கிளர்ச்சியோடு அறிவுத்தூண்டலுக்கும் அதன் பிற துலங்கலுக்கும் காரணமாக அமைந்தன. கலை மனிதனின் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்களையும் உண்மைகளையும் அழகியல் உணர்வோடு வெளிப்படுத்துகிறது.

குறிஞ்சி நிலம் மலையும் மலை சார்ந்த பகுதியாகும். குறிஞ்சி மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரேமுறை பூக்கும் மலராகலானும் அதன் சிறப்புக்கருதி அந்நிலத்திற்குக் குறிஞ்சியெனப் பெயர் பெற்றது. குறிஞ்சி நில மக்கள் குன்றநாடன், குன்றுவர், ஆடவர், கொடிச்சி, குறத்தி, குளத்தியர், வேட்டுவித்தியர், குன்றுவித்தர் எனப் பெயர் பெற்றனர். இவற்றுள் குறவன், கானவன் என்ற இரண்டு இனங்கள் மட்டும் பெரும்பான்மையில் பேசப்படுகின்றன. குறிஞ்சி நிலம் மலைப்பகுதி ஆதலின் அங்கு வேட்டையாடுதல், தேனெடுத்தல், தினை பயிரிடுதல், தினைப்புனம் காத்தல், கிழங்கு அகழ்தல் போன்ற தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன என்பதை அறியமுடிகிறது. குறவர் காட்டிலிருந்து வெட்டிக்கொணர்ந்த மரத்தினுடைய கம்புகளை நட்டுக் கட்டிய குச்சி வீடுகளில் வாழ்வர். இக்குடியிருப்பை நடுகாற்குரம்பை என்பர். குறுகிய அமைப்பையுடைய சிறிய வீடு குறியிறைக் குரம்பை என்றும், காட்டுப்புல்லால் வேயப்பட்ட குடிசை புல்வேய் குரம்பை என்றும்

கூறப்படுகின்றது. வரகின் வைக்கோலைக் கொண்டு குடிசை வேய்ந்தனர். செல்வ வளமிக்க வீடானது நல்இல் என்று அழைக்கப்பட்டுள்ளது என்பதையும் உணரமுடிகின்றது.

குறிஞ்சி நில மக்கள் தங்களது தினைப்புனங்களைக் கவர வரும் பறவைகள் மற்றும் விலங்குகளிடமிருந்து தினைப் பயிறுகளைக் காக்க பரண் வீடுகளை அமைத்தனர்.

முல்லை நிலம் காடும்காடு சார்ந்த இடமாகும். இந்நிலத்தில் முல்லை மலர் சிறந்திருந்தமையால் முல்லை எனப் பெயர் பெற்றது. முல்லை ஒழுக்கத்திற்கு உகந்த இடமாக முல்லை நிலம் சிறப்பிக்கப்பட்டது. முல்லை நில மக்கள் அண்ணல், தோன்றல், குறும்பொறைநாடன், ஆயர், கோவலர், இடையர், பொதுவர், ஆய்ச்சியர், கோவிச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர் எனப் பெயர் பெற்றனர். ஆடுமாடுகளை மேய்த்தல், தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், நெய்யுருக்குதல், பால் கறத்தல் போன்ற பல தொழில்களில் ஈடுபட்டனர். உழவுத்தொழில் செய்யும் ஆயர்களும் இருந்தனர். முல்லை நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களின் குடில்கள் குறுகிய கால்களையுடைய தன்னுவதற்குரிய தழைகளைக் கட்டி வைத்திருப்பர். அக்குடிசை வீடுகளின் முற்றங்கள் மாடுகளைக் கட்டி வைப்பதற்குரிய தாம்புகள் கட்டப்பெற்ற சிறிய முளைகளைக் கொண்டிருந்தன. வெள்ளாடும் செம்மறியாடும் அடைவதற்குரியனவாக வேலி சூழ்ந்த கிடைகளும் அங்கு இருந்தன என்பதை உணரமுடிகிறது.

மருதநிலம் வயலும் வயல் சார்ந்த இடமுமாகும். இந்நிலத்தில் மருத மரங்கள் மிகுதியாக இருந்ததால் மருதம் எனப்பெயர் பெற்றன. முல்லை நில மக்கள், மகிழ்நன், ஊரன், உழவன், கனமன், கடையர், மனைவி, உழத்தியர், கடைச்சியர் எனப்பட்டனர். இந்நில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர்ப் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடாவிடுதல் போன்ற தொழில்களை மேற்கொண்டனர். மருதநிலத்தில் வளமுடைய உழவர்களின் வீடுகளும், வளமற்ற உழவர்களின் குடிசைகளும் என இருவேறுபட்ட வாழிடங்கள் இருந்துள்ளன. புதிய வைக்கோலால் வேயப்பட்டு வரப்பிடத்தே உள்ள குடிசையின் முற்றத்தில் அவல் இடிக்கும் ஓசைக்குக் களிகள் அஞ்சுகின்ற இடையறாத புதுவருவாய் உடைய கழனி என்று குடிசையில் வாழும் ஏழ்மையானவருடைய இல்லம், நீண்ட ஏணிக்கும் எட்டாத உயரத்தையும் பழையனவாகிய நெல்லினையும் உடைய நெற்கூடு உடைய நல்ல இல்லம் என்று இருவேறு இல்லங்கள் இருந்துள்ளன.

நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமுமாகும். நெய்தல் நில மக்கள் சேர்ப்பன், புலம்பன், கொண்கன், துறைவன், பரதவர், வலையர், அணவர், நுளையர், பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனப் பெயர் பெற்றனர். மீன் பிடித்தல், மீன் விற்றல், உப்பு விளைவித்தல், உப்பு விற்றல், முத்தெடுத்தல், வாணிகத்தொழில் முதலிய தொழில்களில் பரதவ மக்கள் ஈடுபட்டனர். கடற்கரை நிலத்துக் கிடைக்கும் மூங்கில், கருப்பந்தட்டை, வெள்ளிய மரக்கொம்பு, நாணற் புல், தாழை என்பவற்றைக் கொண்டு குரம்பை அமைத்திருந்தனர். புன்னை மரக் கொம்புகளால் குரம்பையின் முன்னால் பந்தல் அமைத்தனர். பந்தலின் மேல் பசுங்காய் தரும் அரை கால், புடோல் போன்ற கொடிகளை படரவிட்டனர் என்ற செய்தியினை அறிந்துகொள்ள முடிகிறது.

பாலை என்பது குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த நிலமாகும். பாலை நிலத்தில் வாழும் மக்கள் விடலை, காளை, மீளி, எயிற்றி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் எனப் பெயர் பெற்றனர். பாலை நிலத்தில் வாழும் மக்கள் ஈந்தின் இலையால் வேயப்பட்ட குடிசையில் வாழ்ந்தனர். ஈந்தின் இலை சொரசொரப்பான முதுகுப் புறத்தையும், கொழுவிய மடலையும், வேல் போலும் நுனியையும் பொருந்தியது. முள் போன்ற அதன் இலை கொண்டு குரம்பை வேயப்பட்டு இருந்ததால், கூரையில் அணிலும் கருப்பையும் ஓடாமல் காக்கப்பட்டது. எளிய பொருள்களைக் கொண்டு அரிய நுட்பத்துடன் எயினர்கள் குரம்பை அமைந்து வாழ்ந்த நிலையினை அறியமுடிகிறது.

பண்டைத் தமிழர்கள் அவரவர் வசதிக்கேற்ப இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். நாகரிக வளர்ச்சி பெற்ற தமிழர்கள் தனது தொடர் முயற்சியின் விளைவாகவும், அழகு மற்றும் கற்பனை உணர்வுகளின் அடிப்படையிலும் கட்டுமானத் தொழில் நுட்பத்தினை வளர்ந்தெடுத்துள்ளனர். நகரில் கட்டடங்கள் மிக உயரமானதாகவும், மாட வீடுகள் நிறைந்ததாகவும் காணப்பட்டன. வீடுகள் மட்டுமன்றி செயற்கை முறையில் உருவாக்கப்பட்ட கிணறு, குளம்போன்ற நீர் நிலைகளையும், சமயப்பணி செய்யும் பள்ளிகளையும், துறைமுகங்கள், கலங்கரை விளக்குகள் போன்றவற்றையும் அமைத்து சிறப்பாக வாழ்ந்துள்ளனர். காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி, முசிறி, தொண்டி, எயிற்பட்டினம் போன்ற நகரங்களின் அமைப்பைப் பற்றியும் அறியமுடிகிறது.

மன்னர்கள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தம் நாட்டு மக்களையும் பகைவரிடமிருந்து காத்துக் கொள்வதற்காகத் தங்கள் இருப்பிடத்தைச் சுற்றித் தங்கள் நாட்டின் எல்லையில் அரண் அமைப்பர். பண்டைக் காலத்திலிருந்து மனிதன் தனக்கு

சாதகமாகவும் எதிரிக்குப் பாதகமாகவும் ஓரளவுக்கு அமைத்திருந்த இயற்கை அமைப்பைபுடைய இடங்களைத் தேர்ந்தெடுத்துச் செயற்கை முறைகளில் அரண் அமைத்து பாதுகாப்பான இடங்களில் வாழ்ந்தான். செடி, கொடிகளாலும் மரங்களாலும் அடர்ந்த காடு காணப்படுமாயின் அந்நாட்டுக்கு அக்காடு அரண் ஆகும். இதுவே காட்டரண் எனப்படும். நீரால் சூழப்படும் அரண் நீரரண் ஆகும்.நீரரண் இயற்கையான கடலும் ஆறும் பாதுகாப்பு அரணாக அமைவதாகும். அகழி அல்லது கிடங்கு என்னும் செயற்கை நீர்நிலைகளையும் அரணாக அமைப்பதுண்டு. புறமதிலைப் பற்றாமை பொருட்டு அதன் புறத்தேயுள்ள நிலமும், பகைவர் முற்றுகை நீடித்திருக்கும்போது அகத்தோர்க்கு வேண்டும் உணவுப் பொருட்களைப் பயிர் செய்யும் வகையில் மதிலின் உட்புறமாக விடப்படும் தண்டை நிலமும் நிலவரண்கள் ஆகும்.

ஒரு நாட்டிற்குக் காவலாக மலை அல்லது மலைத்தொடர் அரணாக அமைவது மலையரண் ஆகும். ஒரு நாட்டிற்கு மதில்கள்தான் சிறந்த அரண்களாக விளங்கின. கோட்டை மதில்கள் உயரம், அகலம், திண்மை, பாதுகாப்பு என்னும் நான்கு சிறப்பு அம்சங்களைக் கொண்டிருந்தன. தமிழர்கள் தங்கள் கோட்டை மதிலில் பல கருவிகளைப் பொருத்தியும் பல ரகசிய அம்பு ஏவும் அறைகளையும், கண்காணிப்பு அறைகளையும் பகைவர்கள் அறியமுடியாதபடி அவர்களைத் தாக்கும் வகையில் அமைத்து அரண்களை உண்டாக்கியிருந்தனர்.

பகைவர் எளிதில் தாக்கா வண்ணம் அரண்மனைகளை வலிமை வாய்ந்ததாக அமைத்தனர். அரசியின் அந்தப்புரம் மிகுந்த கலை நயத்துடன் அழகுற அமைக்கப்பட்டிருந்தது. காற்றும் வெளிச்சமும் புகும் வகையில் சாளரங்களும், பருவத்திற்கேற்ற வகையில் வேனிற்பள்ளி கூதிர்ப்பள்ளியும் மலைக்காலங்களில் கட்பிடல்களின் மேல் விழுகின்ற நீர்த் தாங்காமல் கீழே விழுவதற்கு நீர்ப்பந்தலும் வேயாமாடம் போன்றவைகளையும் வடிவமைத்திருந்தனர்.

ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது பகை கொண்டு படையெடுத்து வருவதலைத் தடுக்கவும் அவற்றிடமிருந்து நாட்டைப் பாதுகாக்கவும் தகுதியாக நாட்டு எல்லையின் நான்கு பகுதிகளில் அமைக்கப்படுவது அரண். அதனால் பண்டைய அரசர்கள் அரண் அமைப்பதில் அக்கறை காட்டினர். காட்டரண், நீரரண், நிலவரண், மதிலரண், மலையரண் என்ற ஐந்து வகையான அரண்களையும் அமைத்திருந்தன இவ்வாய்வின் வழி அறியமுடிகிறது.